# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை

## தொகுதி - 2

## இலக்கியம்

பதிப்பாசிரியர்
முனைவர் தி. மகாலட்சுமி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி,
சென்னை - 600 113.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை

## தொகுதி - 2

## இலக்கியம்

பதிப்பாசிரியர்

முனைவர் தி. மகாலட்சுமி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சி.ஐ.டி. வளாகம், தரமணி,

சென்னை - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | A Descriptive Catalogue of Manuscripts in the International Institute of Tamil Studies, Part II Ilakkiyam |
| Editor | : | Dr. T. Mahalakshmi |
| Publisher & © | | International Institute of Tamil Studies, Chennai - 600 113. |
| Publication Number | : | 320 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of publication | : | 1998 |
| Paper used | : | TNPL 16 kg. Creamve |
| Size of the book | : | Demy 1/8 |
| Printing types used | : | 10 point |
| Type setting and printed by | : | Shri Vignesh Prints<br>No.158/5, Lake View Road,<br>West Mambalam,<br>Chennai - 600 033.<br>Ph : 4748486 |
| Number of pages | : | x + 321 |
| Number of copies : | : | 1,000 |
| Price | : | Rs.70/- |
| Binding | : | Paper pack |
| Subject | : | Literature Manuscripts available in the International Institute of Tamil Studies |

Published with the financial assistance from the Government of India, National Archives of India, vide Sanction F.No.31-1(13)/95 grants, dated 15th April, 1996 and copyright vests with the Director, International Institute of Tamil Studies, Chennai - 600 113.

முனைவர் **ச.சு. இராமர் இளங்கோ**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113.

# அணிந்துரை

சென்னையில் 1968 - இல் நடந்த இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின்போது, உயர்தமிழ் ஆய்வுக்கு வழி வகுக்கும் வகையில், பேரறிஞர் அண்ணா அவர்களால் உருவாக்கப்பட்டதே உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் தமிழக முதல்வராயிருந்தபோது 1972 - இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பதிவு செய்யப்பெற்றது.

இந்நிறுவனத்தின் ஆய்வுகள் பலவகைப்பட்டன. இவற்றுள் சுவடியியல் ஆய்வும் அடங்கும். தொன்மையான தமிழிலக்கியங்களையும், இலக்கணங்களையும் நம் முன்னோர் ஓலைச்சுவடிகளில் எழுதி வைத்தனர். அவ்வாறு எழுதப் பெற்ற ஓலைச் சுவடிகளைத் தொகுத்துப் பதிப்பித்து அச்சு நூல்களாக்கித் தந்தவர்களுள் தமிழ்த்தாத்தா உ.வே. சாமிநாதையர், சி.வை. தாமோதரம்பிள்ளை, ஆறுமுக நாவலர் முதலியோர் குறிப்பிடத்தக்கவராவர். இவர்களைப் போன்றோரின் முயற்சியால் நீராலும், நெருப்பாலும், பகையாலும் அழிந்து போய் எஞ்சிய ஓலைச் சுவடிகள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

ஓலைச் சுவடிகளின் பெருமைகளை உலகுக்கு உணர்த்தும் வகையில் 1974 - முதல் இந்நிறுவனம் சுவடியியல் பட்டய வகுப்பைத் தொடர்ந்து நடத்தி வருகிறது. சுவடியியல் பட்டய வகுப்புப் படிக்கும் மாணவர்கள் ஆண்டு இறுதியில் நிறுவனத்திலிருந்தோ பிற சுவடி நூலகங்களிலிருந்தோ சுவடிகளைப் பெயர்த்தெழுதி ஆய்வு செய்து நிறுவனத்திற்கு ஆய்வேடாக வழங்கி வருகின்றனர். மேலும் சுவடிகள் தொடர்பான கருத்தரங்குகளும் பயிலரங்குகளும் நடைபெற்று வருகின்றன.

தொடக்கக் காலத்தில் இந்நிறுவனம் டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூலகத்துடன் இணைந்து திங்கள் தோறும்

சுவடியியல் கருத்தரங்கை நடத்தி வந்தது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

1980 - முதல் இந்நிறுவனம் சுவடிப் பதிப்புகளை வெளியிடத் தொடங்கியது. இதுகாறும் 44 சுவடிப் புதிப்புகள் வெளிவந்துள்ளன. முனைவர் வே. இரா. மாதவன் அவர்கள் பதிப்பித்த கண்மருத்துவம் என்ற நூலுக்கும், முனைவர் சூ. நிர்மலாதேவி அவர்கள் பதிப்பித்த கருவூரார் பல திரட்டு, தடிவீர சுவாமி கதை - வன்னியராயன் கதை ஆகிய சுவடி நூல்களுக்கும் தமிழ் வளர்ச்சி இயக்ககம் சிறந்த நூல்களுக்கான பரிசுகளை வழங்கியுள்ளது.

'சுவடி அட்டவணை' எனும் திட்டப்பணி இந்நிறுவனத்தில் 1983 - இல் தொடங்கப் பெற்றது. இத்திட்டத்தின் பயனாகக் கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்திலுள்ள தமிழ்ச் சுவடிகள் முனைவர் சூ. நிர்மலாதேவி அவர்களால் 1983 - இல் ஆய்வு செய்யப் பெற்றுத் 'தமிழ்ச் சுவடிகள் அட்டவணை' என்ற தலைப்பில் நூலாக வெளிவந்தன. 1989 - இல் "Siddha Medical Manuscripts in Tamil' என்ற நூல் முனைவர் வே. இரா. மாதவன் அவர்களால் பதிப்பிக்கப்பெற்று நிறுவனத்தில் வெளியிடப்பெற்றது. 1995 - இல் முனைவர் நிர்மலாதேவி அவர்கள் பதிப்பித்த 'கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை' என்ற நூலை நிறுவனம் வெளியிட்டது.

இத்திட்டத்தைத் தொடர்ந்து நிறுவனத்திலுள்ள சுவடிகளைப் பாதுகாக்கவும், அட்டவணைப்படுத்தவும் 1990-1991-இல் முனைவர் சிலம்பொலி செல்லப்பன் அவர்கள் நிறுவன இயக்குநராக இருந்தபோது தில்லியில் உள்ள ஆவணக் காப்பகத்திடமிருந்து ரூ. 5,000 பெறப்பட்டது.

சுவடிகளை அட்டவணைப் படுத்தற்கு வித்திட்டு, அட்டவணைப் படுத்தும் முயற்சியைச் செயற்படுத்தி நடத்திய முனைவர் பூ.சுப்பிரமணியம் அவர்களுக்கு என் நன்றி. தொடக்க நிலையில் சுவடிகளை அட்டவணைப் படுத்தி இப்பணிக்குத் துணை நின்ற முனைவர் வ.அலுமேலு அவர்களுக்குப் பாராட்டுக்கள்.

1995 - 96 - இல் நிறுவனச் சுவடிகளுக்கு விளக்க அட்டவணை தயாரித்து அச்சிட்டு வெளியிடுவதற்குத் தில்லி தேசிய ஆவணக் காப்பகம் ரூ. 30,000/- வழங்கியது. இத்திட்டத்தின் விளைவாக இப்போது முனைவர் டி. மகாலட்சுமி அவர்கள் பதிப்பித்துள்ள உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடிகள் விளக்க அட்டவணைகள் நான்கு தொகுதிகளாக வெளிவருகின்றன. மிகவும் கடினமான இப்பணியைச் செய்து முடித்த முனைவர் டி. மகாலட்சுமி அவர்கள் பாராட்டுக்குரியவர். சுவடித் துறையில் ஈடுபாடு கொண்டவர்களுக்கும், தமிழறிஞர்களுக்கும், சித்த மருத்து வர்களுக்கும் பிறருக்கும் இந்நான்கு தொகுப்புகள் மிகவும் பயனுடையன. நிறுவன ஓலைச் சுவடிகள் பாதுகாக்கப்பெற வேண்டுமென்ற எண்ணத்தில் செயல்பட்ட முனைவர் சிலம்பொலி செல்லப்பன் அவர்களும், நிறுவனச் சுவடிகள் விளக்க அட்டவணை செய்யப் பெற வேண்டுமென்று விரும்பிய முன்னாள் இயக்குநர் பொறுப்பிலிருந்த முனைவர் அன்னி மிருதுலகுமாரி தாமசு அவர்களும் பாராட்டுக்குரிய வர்க்ள்.

இத்திட்டப்பணி சிறப்பாக அமைய வழிகாட்டிய பெருந்தகை பேராசிரியர் அமரர் மு. சண்முகம் பிள்ளை அவர்களை நன்றியுடன் நினைவுகூர்கிறேன். அவருடன் இணைந்து வழிகாட்டிய முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும் என் நன்றி.

இந்நிறுவன வளர்ச்சியில் ஆக்கமும் ஊக்கமும் காட்டி வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு. த. இரா. சீனிவாசன் இ.ஆ.ப. அவர்களுக்கும், நிதி நல்கிய தில்லி தேசிய ஆவணக் காப்பகத்தார்க்கும் நன்றி.

இந்நான்கு தொகுதிகளையும் சிறப்பாக அச்சிட்டுத் தந்த விக்னேஷ் அச்சகத்தார்க்கும் நன்றி.

இயக்குநர்

# முன்னுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இலக்கியத் துறையுடன் இணைந்துள்ள சுவடிப்புலம், பட்டய வகுப்புகள், பயில ரங்குகள் வழி மாணவர்களுக்கும் பிறருக்கும் சுவடிப் பயிற்சி அளித்தல், அச்சில் வெளிவராத சுவடி நூல்களைப் பதிப்பித்து அச்சிடல், சுவடிப்பதிப்பு வரலாறு அறிதல், சுவடிகளுக்கு விளக்க அட்டவணை தயாரித்து வெளியிடுதல் முதலான பணிகளை மேற்கொண்டு வருகிறது.

## சுவடி விளக்க அட்டவணை

இந்நிறுவனத்தில் ஏறக்குறைய 592 சுவடிக்கட்டுகளும், அவற்றில் 950 நூல்களும் உள்ளன. 1990-91-இல் இந்நிறுவனச் சுவடிகளைச் செப்பம் செய்வதற்கும் அட்டவணை செய்வதற்கும் ரூபாய் ஐந்தாயிரம் இந்நிறுவன அந்நாளைய இயக்குநர் முனைவர் சிலம்பொலி செல்லப்பன் அவர்களால் தில்லி தேசிய ஆவணக் காப்பகத்தி லிருந்து பெறப்பட்டது. பின்னர், 1995-இல் இந்நிறுவனச் சுவடிகளின் விளக்க அட்டவணையை அச்சிட்டு வெளியிடு வதற்கு ரூபாய் முப்பதாயிரம் இந்நிறுவன இந்நாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களால் அக்காப்பகத் திடமிருந்து பெறப்பட்டது. இத்திட்டத்தின் வாயிலாக உருவாகிய விளக்க அட்டவணைகளே இப்போது வெளி வருபவை.

## பொருளடிப்படைப் பாகுபாடு

இந்நிறுவனச் சுவடிகளின் விளக்க அட்டவணை 4 தொகுதிகளில் அமைகிறது. முதல் தொகுதி **சித்த மருத்துவச் சுவடி விளக்க அட்டவணை** என்ற தலைப்பிலும், இரண்டாம் தொகுதி **இலக்கியச் சுவடி விளக்க அட்டவணை** என்ற தலைப்பிலும், மூன்றாம் தொகுதி **மெய்யியல் மற்றும் நாட்டுப்புறவியல் சுவடி விளக்க அட்டவணை** என்ற தலைப்பிலும், நான்காம் தொகுதி **மொழி, கணிதம் மற்றும்**

**பண்பாட்டுச் சுவடி விளக்க அட்டவணை** என்ற தலைப்பிலும் அமைகின்றன.

இவ்விரண்டாம் தொகுதியில் காப்பியம், புராணம், சிற்றிலக்கியம், பக்தி இலக்கியம், நீதி இலக்கியம் எனும் பொருண்மைகள் இடம் பெறுகின்றன. இதில் இடம் பெற்றுள்ள சுவடிக் கட்டுகளில் அடங்கிய நூல்களின் எண்ணிக்கை 263.

## சுவடிக் கொடை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்குத் தங்களிடமிருந்த சுவடிகளை அன்பளிப்பாகவும், நன்கொடையாகவும், வழங்கிய நல்ல மனம் கொண்ட அன்பர்கள் பலராவர். திருவாவடுதுறை ஆதீனத்தினரும், திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடத்தினரும் இக்கொடையில் முக்கிய இடம் பெற்றவராவர். இங்ஙனம் சுவடி வழங்கிய அனைவருக்கும் இந்நிறுவனம் மனம் நிறைந்த நன்றியையும், அன்பு நிறைந்த பாராட்டையும் தெரிவிக்கின்றது.

## நன்றியுரை

சுவடி விளக்க அட்டவணை விரைந்து நூல்களாக வெளிவரவேண்டு மென்ற ஆவலோடு என்னை ஊக்கப் படுத்தியும், ஆற்றுப்படுத்தியும், அச்சிட நிதிபெற்றுத் தந்தும், தோன்றாத் துணையுமாக நின்ற இந்நிறுவன இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களுக்கும், இத்திட்டத்திற்கு நல்கை வழங்கிச் சிறப்பித்த தில்லி, தேசிய ஆவணக்காப்பக இயக்குநர் அவர்களுக்கும், சுவடிகளைச் செப்பமிடுவதற்கும் அட்டவணைப் பணியை நான் செய்வதற்கும் வாய்ப்பு நல்கிய அந்நாளைய இயக்குநர் பொறுப்பிலிருந்த முனைவர் அன்னிதாமசு அவர்களுக்கும், கேட்டபோதெல்லாம் ஐயம் தீர்த்துத் துணையாக நின்ற இலக்கியத்துறை இணைப்பேராசிரியர் முனைவர் ச. சிவகாமி அவர்களுக்கும், இந்நூலாக்கத்தின் தொடக்கக் காலக்கட்டத்தில் எனக்கு ஆசானாக இருந்து, நான் இடர்ப்படும்போதெல்லாம் தேவையான ஆலோசனை வழங்கி, எழுத்துருவின் பெரும்பகுதியைத் திருத்திக் கொடுத்துப் பல்லாற்றானும் துணைபுரிந்த முனைவர் பூ. சுப்பிரமணியம் அவர்களுக்கும்,

அட்டவணைப் படுத்தும்போது தொடக்கத்தில் எனக்கு உதவிய முனைவர் வ. அலமேலு அவர்களுக்கும், இவ்வட்டவணைத் தொகுதிகள் சிறக்கவும், விரைந்து முடியவும், துணைநின்ற எங்கள் துறை சிறப்புநிலை ஆய்வாளர் முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், நான் வேண்டும்போதெல்லாம் சிரமம் பாராது தன்வேலையைப் போல் கருதி தேவைப்படும் கருத்துரைகளையும் நூல்களையும் கொடுத்துதவிய எங்கள் துறை ஆராய்ச்சி உதவியாளர் திரு. த.பூமிநாகநாதன் அவர்களுக்கும், தன் பணிகளுக்கிடையே இந்த நூலின் மெய்ப்புகளைத் திருத்துவதில் உதவிய எங்கள் துறை ஆராய்ச்சி உதவியாளர் திரு. மொ. மருதமுத்து அவர்களுக்கும், அட்டவணைப் பணிக்குத் துணைநின்ற எங்கள் துறை ஆராய்ச்சி உதவியாளர்கள் முனைவர் சூ.நிர்மலா தேவி, திரு மூ. பரிமணன் அவர்களுக்கும் அன்பார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நூல்களைத் தடையின்றித் தந்தருளிய அன்பு கெழுமிய நூலகர் திரு இரா. பார்வதி அவர்களுக்கும், இந்நூல் நன்முறையில் வெளிவருவதற்கு அச்சுப்பணி செய்த ஸ்ரீ விக்னேஷ் அச்சுக் கூடத்திற்கும் என் நன்றி உரித்து. நான் சிறந்த ஆராய்ச்சியாளராக அமைதல் வேண்டும் என்ற பெரு நோக்கோடு என் கல்விப் பணியில் உற்ற நண்பராக தோள்கொடுத்து நின்றவரும், எந்நிலையிலும் கடமை தவறாதிருக்க வேண்டுமென்ற உணர்வை ஊட்டியவருமான என் இதயம் நிறைந்த, அண்மையில் மறைந்த எனது கணவர் அமரர் எஸ்.சந்திரசேகரன் அவர்களை வணங்கி என் நன்றியை நிறைவு செய்கிறேன்.

**தி. மகாலட்சுமி**

# பொருளடக்கம்

7. குறிப்பிட்ட ஒரு நூல் இவ்வட்டவணையில் வேறு இடங்களில் இடம் பெற்றிருப்பின் அதனைச் சுட்டுதல்
8. குறிப்பிட்ட அந்நூல் பிற அட்டவணைகளில் இடம் பெற்றிருப்பின் ஓரளவு சுட்டுதல்
9. அந்நூலை இவ்வட்டவணையிலுள்ள பிற நூல் களுடனும், வேறு அட்டவணைகளிலுள்ள நூல்களுட னும் ஒப்பிட்டு அது தொடர்பான சில ஆய்வுச் சிந்தனைகளைத் தருதல்.
10. மாற்றுச் சுவடிகள் உள்ள வேறு இடங்கள்
11. அச்சான நூல்களின் விபரம்
12. குறிப்பிட்ட நூல் தலைப்பை ஒட்டி வெளிவந்துள்ள அச்சு நூல் விபரம்
13. சுவடிப்பட்டய ஆய்வேடாக அளிக்கப்பெற்றிருப் பின் அதனையும், ஆய்வேடு நூலாக வந்திருப்பின் அதனையும் சுட்டுதல்.
14. நூலாசிரியர்
15. நூலாசிரியர் காலம்
16. நூலாசிரியரின் பிறநூல்கள்

## சுவடி விளக்க அட்டவணையின் அமைப்பு முறை விளக்கம்

முதலில் நூல்தலைப்பும், நூல் தலைப்பின் இடது பக்கம் நூல் வரிசை எண்ணும் தரப்பட்டுள்ளன. அதன் பின் **அ** முதல் **ஏ** வரையிலான எட்டு உட்பிரிவுகளில் செய்திகள் தரப் பட்டுள்ளன.

**காட்டு**

### 27. இராமாயணம்

அ. 69 : 98

ஆ. 31-321 ஏடுகள்

இ. 46 X 3 செ.மீ.

ஈ. 9-10 வரிகள்

உ. முதலும் இறுதியுமான ஏடுகள் இல்லை; ஏடுகள் பல சிதைந்துள்ளன.

ஊ. நல்ல கையெழுத்து

எ. குறை

ஏ. இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

**தொடக்கம்** என்பதில் நூலின் தொடக்கத்தில் அமையும் முதல் பாடல் முழுமையாகத் தரப்பட்டுள்ளது. 14 அல்லது 16 சீர் வரும் பாடல்களிலும், நூலோடு தொடர்பில்லாத காப்புப் பாடல், நூல் பாடல் ஆகியவற்றைத் தருமிடங்களிலும், ஒரு பாடலின் இரண்டு வரிகளைத் தரும் முறையும் பின்பற்றப்பெற்றுள்ளது. காப்புப் பாடல், நூல்பாடல் ஆகிய இரண்டையும் முழுமையாகத் தரும்முறையும் பின்பற்றப் பட்டுள்ளது. **முடிவு** என்பதில் நூலின் இறுதிப்பாடல் முழுமையாகத் தரப்படுகிறது. **முற்குறிப்பு** என்ற பகுதியில் நூல் தொடங்குவதற்கு முன்பு இடம்பெறும் சில குறிப்புகளும், **பிற்குறிப்பு** என்ற பகுதியில் நூல் முடிந்தபின் இடம்பெறும் சில குறிப்புகளும் தரப்பட்டுள்ளன. நூலின்பெயர், நூலாசிரியர் பெயர், நூலை ஏட்டில் எழுதியவர் பெயர், முகவரி, நூலின் காலம், சுவடியை எழுதத் தொடங்கிய நாள், எழுதி முடித்த நாள், சுவடி உரிமையாளர், சுவடியைப் படியெடுக்கச் சொன்னவர், சுவடிக் கட்டில் அடங்கியுள்ள நூல்களின் பட்டியல், நூலை எடுத்தவர்களும், படித்தவர்களும் திருப்பிக் கொடுக்காவிட்டால் இன்னின்ன தீய விளைவுகள் ஏற்படும் என்ற அச்சுருத்தல், இரகசியக் குறிப்பு முதலான செய்திகள் பிற்குறிப்பில் இடம்பெற, இவற்றுள் ஒரு சில செய்திகளே முற்குறிப்பில் இடம்பெறுகின்றன. மேலும் அவ்வாறான இடங்களும் மிகக்குறைவே.

**காட்டு**

## முற்குறிப்பு

298. **அருணாசல புராணம்** (281:503)

படியக்கிரார் மகனுக்குச் சிரஞ்சீவி விருத்தாசலப் பிள்ளை மனமகிழ்ச்சியாகப் படிக்கப்பட்ட அருணாசல புராணம் என்று அறிய வேண்டியது.

விக்கிரம வருஷம் வையாசி மாசம் 2-ஆம் தேதி திங்கட்கிழமை, சோமவாரம், பிரதமை திதி, உத்திர நட்சத்திரம், அமிர்தயோகம் இந்தச் சுபதினத்தில் எழுத ஆரம்பம் செய்தது.

சிரஞ்சீவி நாகப்பிள்ளை மனமகிழ்ச்சியாக வாசிக்கப்பட்ட அருணாசல புராணம்.

## பிற்குறிப்பு

282. பாரதம் (77:171)

பிங்கள வருஷம் புரட்டாசி மாதம் ரோகிணி நட்சத்திரம் புதவாரம் நாள் சத்தமியும் கூடின கன்னி லக்கினம் - இப்படிப்பட்ட சுபதினத்தில் பெரிய திருமல சமுத்திரம் வண்டிப்பாளையம் தருமராசாக் கோயில் பூசாரி சந்தியப்பன் குமாரன் அருச்சுனன் படிக்கின்ற பதினெட்டு நாளைய உயித்திய காண்டம் ஒத்ததெரு வாத்தியார் ஆறுமுகம் வாத்தியார் குமாரன் அம்மையப்பிள்ளை வாத்தியார் எழுதினது.

மேலே குறிப்புரையில் இடம்பெற்றுள்ள அனைத்து விபரங்களும் இடம் பெறாமல் இவற்றுள் ஒன்றிரண்டு விபரங்களை மட்டுமே கொண்டமையும் குறிப்புரைகளும் உள்ளன.

ஒரு சுவடியில் ஒரு நூல் அமைதல் இயல்பானது, அன்றியும் சுவடியில் ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் உடன் எழுதப் பெற்றிருத்தலும் உண்டு. அவை வெவ்வேறு பொருள் பற்றியனவாகக் கூட இருக்கலாம். விளக்கத்தில் அவ்வாறு ஒன்றுக்கு மேற்கூறப்பட்ட நூல்கள் ஒரு சுவடியில் இருப்பின் அவற்றிற்கும் தனித்தனியே விளக்க அட்டவணை செய்யப் பெற்றுள்ளது. அங்ஙனம் செய்யப் பெறும் போது சுவடிக்குரிய எண் **கட்டு எண்ணாகவும்,** அதிலுள்ள நூல்களுக்குத் தரப்படும் எண் **நூல் எண்ணாக வும், அ** என்ற பகுதியில் சுட்டப் பெறுகிறது. எனவே ஒரு சுவடியில் ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் இருப்பின் கட்டு எண் மாறாது. நூல் எண் தொடர்ச்சியாக எண்களைப் பெறும்.

முதல், இடை, கடை ஆகியவற்றில் ஏடுகள் இல்லாதிருப் பின், இருந்து தெளிவற்று, சிதைந்து இருப்பின் அல்லது

ஏடுகளுக்கு எண் இல்லாது இருப்பின் ஏடுகளின் மொத்த எண்ணிக்கை மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளது. இல்லாத ஏடுகளின் எண்களும், எண்ணிக்கை விபரங்களும் ஓரளவு தரப் பெற்றுள்ளன. ஏடுகளின் எண்ணிக்கையைத் தரும் நிலையில் ஏடுகள் விடுபட்டிருப்பின் பிறைக்குறிக்குள் மொத்த எண்ணிக்கையைச் சுட்டும் நிலையும் பின்பற்றப் பெற்றுள்ளன.

தொடக்கம், முடிவு ஆகியவற்றின் முடிவில் பெரும் பாலும் பாடல் எண் தரப் பெற்றுள்ளது. ஒரு சிலவற்றில் பக்க எண்ணும், ஒரு சிலவற்றில் பக்க எண்ணும், பாடல் எண்ணும் தரப்பெற்றுள்ளன.

முழுமையாக, இடையில், இறுதியில் என்றவாறு பல சுவடிகளின் ஏட்டெண்கள் சிதைந்துள்ளன. அதுபோன்ற நிலைகளில் இயன்றவரை பாடல்களை வைத்து ஏடுகள் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. பாடல்களிலும் தொடர்ச்சி முறை அறிதலில் இடர்ப்பாடு நேரும்போது ஏட்டுஎண் இல்லாதவை இறுதியில் சேர்க்கப் பெற்றுள்ளன.

ஒரு நூலில் பிற நூற் செய்திகள் இடம்பெற்று அவை அட்டவணை செய்யப்படாது இருப்பின் நூல் தலைப்புடன் முதலியன என்ற சொல்லாட்சி இடம் பெற்றிருக்கும். ஒரு நூலின் தொடர்பற்ற ஒன்றிரண்டு ஏடுகள், சிதைவு போன்றன அட்டவணை செய்யப் படாமைக்குக் க்ாரணங்களாகின்றன.

அச்சு நூல் விவர அட்டவணை ஒரு சேரக் கிடைக்காமை யும், விரைந்து அட்டவணையைத் தயாரித்து முடிக்க வேண்டிய நிலையும் இருந்ததனால் அச்சு நூல் விவரக் குறிப்புகள் முழுமையாகத் தரப்படவில்லை. மேலும் ஒரு நூல் அச்சானதா அச்சாகாததா எனத் தெரிந்து கொள்வதில் சில இடர்ப்பாடுகளும் உள்ளன.

**தாள் சுவடிகள்**

ஓலைச் சுவடிக் கட்டுகளின் தொடர் வரிசையில் இடம் பெறாமல் தாள் சுவடிகள் தனித்த எண்களைப் பெறு கின்றன. எனவே அவற்றை வேறுபடுத்திக் காட்ட **அ.** என்ற பகுதியில் **தாள்** என்ற சொல் சேர்க்கப்பெற்றுள்ளது.

அ. தாள். கட்டுஎண் + நூல் எண்

ஆ. பக்கங்கள்

இ. முழுமை/குறை

ஈ. அச்சானதா / அச்சாகாததா எனும் அமைப்பில் தாள் சுவடிகள் விளக்கம் பெறுகின்றன.

**காட்டு**

493. வைரபுரம் திரிபுர சுந்தரியம்மை நவமணி மாலை

**அ. தாள்.18:48**

**ஆ. 8-10** பக்கங்கள்

இ. முழுமை

ஈ. அச்சானதாகத் தெரியவில்லை.

**நூல்களுக்குத் தலைப்பிடல்**

இந்த இரண்டாம் தொகுதியில் நூற்பெயர் தெரியாத நூல்களும், ஆசிரியர் பெயர் தெரியாத நூல்களும் இடம் பெற்றுள்ளன. நூற் பெயர் தெரியாத நூல்களுக்கு அந்நூற் செய்திகளைக் கொண்டு தலைப்புகள் வழங்கப் பெற்றுள்ளன. அவை மட்டும் அடைப்புக் குறிக்குள் தரப்பட்டுள்ளன. நூற்பெயர் இல்லாதிருப்பின் முதலில் வரும் உட்தலைப்பை நூற்பெயராகத் தரும் முறையும் பின்பற்றப் பெற்றுள்ளது. காட்டு. 377. (கயிலையங்கிரி நாதர் சதகம்).

**பதிப்புக் குறிப்புகள்**

தொடக்கம், முடிவு, முற்குறிப்பு, பிற்குறிப்பு எனும் பகுதிகளில் சுவடிகளிலிருந்து பெயர்த்தெழுதும் போது தற்போது எழுத்துச் சீர்திருத்த முறையைப் பின்பற்றி எழுத்துகள் மாற்றி அமைக்கப்பட்டுள்ளன. ஏடுகளில், பாடல்களில் இடம்பெற்றுள்ள தமிழ் எண்கள் அராபிய எண்களாகத் தரப்பெற்றுள்ளன. சுவடிகளினின்று இவ்வாறு பெயர்த்தெழுதிய பகுதிகளில் தேவையான இடங்களில் காற்புள்ளி, முற்றுப்புள்ளி முதலியன இடம் பெற்றுள்ளன. சிதைந்த இடங்களைக் குறிக்க '....' என்றவாறு புள்ளிகள் இட்டும், சிதைந்த இடங்கள் வருவித்து நிரப்பப்பட்டிருப்பின் அதன்கீழ் கோடிட்டும் காட்டப்பெற்றுள்ளன. ஒரு நூலின் மாற்றுப் பிரதி இடம்பெறின் அதனை 'இன்ன எண்ணில்

காண்க' என்பது சுட்டப்பெற்றுள்ளது. **உ** என்பது உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தையும், **த** என்பது தஞ்சைப் பல்கலைக் கழகத்தையும், **ச** என்பது தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையத்தையும், **கே** என்பது கேரளப் பல்கலைக் கழக அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தையும் குறிக்கும் சுருக்க விளக்கங்களாகின்றன.

**யாப்பு**

பன்னிரண்டு சீர், பதினான்கு சீர், அறுசீர், எழுசீர், எண்சீர் ஆகியவற்றாலான விருத்தப் பாவகைகளே மிகுதியாக உள்ளன. இவற்றுள் எண்சீர் விருத்தங்களே மிகுதி. வெண்பா, அகவல் போன்ற வகைகளும் உள்ளன. அவ்வகைகளுள் அடங்காத சில பாடல்களும் இடையிடையே காணப் பெறுகின்றன. பல பாடல்கள் அந்தாதி அமைப்பில் அமைந்துள்ளன. மூல நூல்களில் யாப்பு பெரும்பாலும் சரியாய் அமைந்து, அவை பிரதி செய்யப்படும் போது பல யாப்புக் குறைபாடுகள் தோன்றியுள்ளன. இதனைச் சில சுவடிகளில் அமையும் பல பாடல்களை நோக்குமிடத்து உணரமுடிகிறது.

**சுவடிநடை**

பேச்சு வழக்கு நடை பல சுவடிகளில் காணப் பெறுகின்றன. சில சுவடிகளில் மிகவும் தெளிவற்ற கையெழுத்து இடம்பெறுவதால் படித்தறிவது மிகவும் சிரமமாகவே உள்ளது. இவ்விடங்களில் பொருள் உணர்ந்து எழுத வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. சொற்றொடரி லுள்ள எழுத்துகள் ஒன்றன்மீது ஒன்று அமைந்து மிகவும் நெருக்கமாக எழுதப் பெற்றிருப்பதால் சொற்களை உணர்வதும், அது என்ன தொடர் என்று அறிவதும் கடினமாகிறது.

ஏடுகளில் காணப்பெறும் கையெழுத்துகளில் ஒருவர் கையெழுத்துப் போல் மற்றொருவர் கையெழுத்து இருப்ப தில்லை. ஏடெழுதியோர் பயன்படுத்திய வடிவங்களையும், குறியீடுகளையும் நூல் முழுவதும் படித்த பின்னரே முழுமையாகத் தெரிந்து கொள்ள முடிகிறது. ஆயின் அட்டவணைக்காக ஓரளவு மட்டும் சுவடியைப் பயன் படுத்தும் நிலையில் ஏடெழுதியோரின் சில எழுத்து

வடிவங்களையும் குறியீடுகளையும் புரிந்து கொள்வதில் சிக்கல் ஏற்படுகின்றது. பல சுவடிகள் பிழை மிகுந்ததாக இருப்பினும், வழக்கில் சொற்கள் அப்படியும் வழங்கப்பட வாய்ப்பு இருப்பதால் அனைத்துப் பிழைகளும் திருத்தப் பெறவில்லை. இயன்றவரை பேச்சு வழக்கு, சுவடிகளில் உள்ளவாறே தரப்பெற்றுள்ளது.

குறிப்புரை என்ற பகுதியில் தரப்பெற்றுள்ள கருத்து களை மூல நூல்களோடு ஒப்பிடும் நிலையில் அவற்றில் பல மாற்றங்கள் ஏற்பட வாய்ப்புண்டு. மேலும் சுவடிகளைக் கூர்ந்து காணக்காண மாற்றங்கள் ஏற்படவும் வாய்ப்புண்டு. அதைப் போன்று கருத்துகளும் வளர்ச்சி காரணமாக மாறலாம்.

**ஆய்வுரை**

**271-533** நூல்களையுடைய இத்தொகுதியானது காப்பியம், புராணம், பக்தி, நீதி என்ற பொருண்மைகளைக் கொண்டது. வடமொழியில் காவியம் எனப் பேசப்படுவதுதான் தமிழில் காப்பியம் என அழைக்கப் பெறுகிறது. தமிழில் ஐம்பெருங் காப்பியங்கள் சமயத் தொடர்போடு எழுந்தன. இவற்றில் எதுவுமே வைதீக சமயம் பற்றிப் பேசவில்லை. இந்நிலையில் வட மொழியில் பேசப்பட்ட வைதீகக் காவியங்களான இராமாயணம், மகாபாரதம் போன்றவை தமிழகத்திலும் செல்வாக்குப் பெறலாயின. அவ்வகையில் கம்பர் இராமாயணத்தையும் வில்லியார் மற்றும் நல்லாப் பிள்ளை மகாபாரதத்தையும் தமிழில் யாத்தனர். இவையன்றி வான்மீகி இராமாயணத்தையும், வியாச பாரதத்தையும் அடிப்படை யாகக் கொண்டு பல்வேறு புலவர்களால் உரைநடையில் மற்றும் கவிதையில் மொழிபெயர்ப்பு நூல்களாகப் பல நூல்கள் வரலாயின. நாட்டுப்புற இலக்கியத்தில் அக்கலைஞர், வடக்கு மற்றும் தெற்கு நூல்கள் கூறிய செய்திகளைத் தனக்கு வேண்டிய அளவு தேர்ந்து அவற்றைத் தொகுத்து வில்லுப் பாட்டாகவும், அம்மானையாகவும், கும்மியாகவும் பல வடிவங்களில் மக்களுக்குத் தந்துள்ளனர். இன்றும் பலர் இல்லங்களில் இராமாயணம், பாரதம் போன்ற காப்பியங் களின் முழுமை பெற்ற சுவடிகளோ அல்லது சில பகுதிகளோ பயன்பாட்டில் உள்ளது. அச்சுவடிகளில் யுத்த காண்டத் திற்குப் பதிலாக உத்திர இராமாயணம் என்ற பகுதி இருப்பதை

யும் பார்க்க முடிகிறது. தமிழகத்தைப் பொறுத்தளவு காப்பியங் களில் இருந்து கடவுளான மனிதர்கள், மேற்சொன்ன இலக்கியப் பாத்திரங்களே.

காப்பியம் என்ற பகுதியில் முழுமையான நூல்களை விட குறிப்பிட்ட சில பகுதிகளையுடைய நூல்களும், குறை நூல்களும் மிகுதியாக உள்ளன. முழுமையான சுவடிகளே சிதைவுற்றுக் குறைச் சுவடியாக ஆகியிருத்தலையும் காண முடிகிறது. இச்சுவடிகள், விடுபட்ட பகுதியை ஒப்பு நோக்க, பாட பேதங்களைத் தெளிவுபடுத்த, மூலபாட ஆய்வுக்குத் துணைபுரிய, சுவடி எந்தப் பகுதியைச் சேர்ந்தது என அறிய என்றவாறு பல நிலைகளில் பயன்படக் கூடிய தரவுகளாக அமையும்.

**புராணம்**

தமிழகத்தில் வைதீக, சமயக் கருத்துகள் வேரூன்றிய காலக்கட்டத்தில் புராணங்களின் செல்வாக்குப் பெரிதும் வெளிக்கொணரப்பட்டது. வேத பனுவலை முன்னிறுத்தி வடமொழியில் *18* மகாபுராணங்கள் தோன்றின. இப்புராணங் களில் காணப்படும் நான்கு வேதங்களின் தாக்கத்தைக் கருத்தில் கொண்டு ஆரிய மொழியில் சொல்லப் பெற்ற இவை தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. இவற்றைத் தமிழில் பதினெண் புராணங்கள் என்பர். முதன்மைக் கடவுளர்களின் சிறப்பையும், நான்கு வேதங்களின் செந்நெறிகளையும், அவற்றுக்குத் துணை நின்ற உபநிடதங்களின் தத்துவக் கோட்பாடுகளையும், புராணங்கள் ஏற்றுக்கொண்ட சமயத்தின் தர்க்க - தத்துவ விடையங்களையும் வெளிப்படுத்தும் ஊடகமாகவே இப் பதினெண் புராணங்கள் விளங்கின. இப்புராணங்கள் விளக்கும் நைமிசாரணியக் காடு இதுவரை யாரும் கண்டிலர். நந்தி மற்றும் சனக்குமாரர்கள் இப்புராணம் கேட்டவர் களாகக் கொள்ளப் படுவர். இவற்றை அடியொற்றியே தலபுராணம் என்ற புதுமை இலக்கியம் உருவாயிற்று.

இப்புராணம் கூறும் ஊர் பற்றிய தகவல்கள், அவ்வூரின் கண் அமைந்துள்ள நீர்நிலைகள், அவ்வூரின் கண் வாழுகின்ற மாந்தர்கள், திருக்கோயிலின் அமைப்பு, தலத்தின் சிறப்பு, இயற்கை வளம் முதலானவை புராணத்திலிருந்து நாம் பெறும் நயம் செரிந்த இலக்கியப் பயன்களாகும்.

பொதுவாகப் புராணங்கள் மீக்கூறுதல் என்ற நிலையில் அறிஞர் பெருமக்களால் பாராட்டுப் பெறாமல் போய் விட்டன. ஆயின் இப்புராணங்களில் கூறப்பெறும் சமயத் தொன்மைக் கருத்தை நீக்கிவிட்டு, சமூகக் கண்ணோட்டத் தோடு பார்ப்போமானால் அவற்றின் சிறப்பு பல நிலைகளில் தெரியவரும். இத்தொகுதியிலுள்ள புராணங்கள் அனைத்தும் அச்சானவையாகவே உள்ளன. குலால புராணம், ஸ்ரீமகாபாகவத புராணம் (உரைநடை) என்ற ஒன்றிரண்டு அச்சாகாத சுவடிகளும் உள்ளன.

**ஸ்ரீமகாபாகவத புராணம்** *(505:766)* என்ற ஒரே ஒரு நூல் நான்கு தனித்தனி சுவடிக்கட்டுகளில் இடம் பெற்றுள்ளது. 411 ஏடுகளையுடைய முதல் கட்டில் 4 ஸ்கந்தங்களும், 372 ஏடுகளையுடைய இரண்டாம் கட்டில் 5 - 9 ஸ்கந்தங்களும், 334 ஏடுகளையுடைய மூன்றாம் கட்டில் 10 ஆவது ஸ்கந்தமும், 184 ஏடுகளையுடைய நான்காம் கட்டில் 11 - 13 ஸ்கந்தங்களும் உள்ளன. ஒரு பக்கத்திற்கு 8 - 9 வரிகளைக் கொண்ட இச்சுவடி 43 x3.5 செ.மீ. நீள அகலங்களை உடையது. இந்நூல் அச்சுருக் காணின் மூலம் மட்டும 1500-க்கும் மேற்பட்ட பக்கங்களை உடையதாய் அமையும். இந்நிறுவனத்திலுள்ள சுவடி களுள், **ஒரு நூல் நான்கு சுவடிக் கட்டுகளில் அமைந்த தனித்தன்மை யும், சுவடிகளுள் சிறந்த பெரிய சுவடி என்ற பெருமை யும்,உரைநடையில் பெரிய அளவில் எழுதப்பெற்ற சுவடி என்ற வியப்பும்** இதனையே சாரும்.

**வள்ளியம்மன் புராணம்** *(115:223)* என்ற நூலின் பிற்குறிப்பில் ..... இப்பேர்ப்பட்ட சுபதினத்தில் சின்னத்தம்பி வாத்தியார் வள்ளியம்மை புராணம் எழுதி நிறைவேறியது என்றுள்ளது. நூலின் 149-ஆவது பாடல் நூற்பயன் கூறுகிறது. அதற்கு முன் உள்ள 148-ஆவது பாடலில் சரதையூரைச் சார்ந்த கணக்குத் தொழில் புரியும் புலிப்பாகை மூர்த்தி என்பவரால் எழுதப்பட்டது என வருகிறது. நூற்பாடலிலேயே பெயர் வருவதால் புலிப்பாகை மூர்த்தி என்பவர் இதனை இயற்றியவராகவும் இருக்கலாம். அல்லது இவர் எழுதிய சுவடியைப் பார்த்து சின்னத்தம்பி வாத்தியார் படியெடுத் திருக்கலாம். எப்படி இருப்பினும் நூற் பாடலிலேயே சுவடியை எழுதியவர் பற்றிய குறிப்பு இடம் பெறுவது தெரியவருகிறது.

**சிற்றிலக்கியம்**

தமிழக இலக்கிய வரலாற்றில் 18 நூல்கள் சங்க மேற்கணக்கு நூல்களாகவும், சங்கம் மருவிய காலத்தில் 18 நூல்கள் கீழ்க்கணக்கு நூல்களாகவும் தொகுக்கப் பெற்றன. காப்பிய காலத்தில் பெருங்காப்பியங்கள் ஐந்தும், சிறுங்காப்பியங்கள் ஐந்தும் எனப் பத்து நூல்கள் தெரியவருகின்றன. வைதீக சமயத்தின் தாக்கத்திற்குப் பின்னர்தான் தமிழகத்தில் பல்வேறுபட்ட நூல்கள் தோன்றின. புராணத்தில் பதினெண் புராணங்களும், கணக்கிலடங்கா தல புராணங்களும் இக்காலக் கட்டத்தில் எழுந்தன. மேலும் பன்னிரு திருமுறை என்ற பெயரில் பல சைவ சமய நூல்களும், நாலாயிர திவ்வியப் பிரபந்தம் என்ற பெயரில் வைணவச் சமய நூலும், கணக்கிலடங்கா தர்க்க - தத்துவார்த்த சமய நூல்களும் எழுந்தன. அதுபோது கடவுளரைக் கதை மாந்தர்களாகக் கொண்டு சிற்றிலக்கியங் கள் எழுந்தன. இச்சிற்றிலக்கிய வகைகளில் எழுந்த நூல்கள் எண்ணிலடங்கா.

சிற்றிலக்கியம் தொடங்கிய காலக்கட்டத்தில் இருந்து இன்றுவரை அதன் பரிமாணம் விரிந்துகொண்டே போவதால் அதற்கேற்பக் கவிஞனின் சிந்தனையும் விரிந்துகொண்டே போகின்றது. இதன் பயனாக எத்தனையோ நூல்கள் தோன்றியுள்ளன. இத்தொகுதியில் அச்சான சிற்றிலக்கியங்கள் மட்டுமன்றி அச்சாகாத பல சிற்றிலக்கியங்களும் உள்ளன. பல நூல்கள் சிறு இலக்கியங்களாக உள்ளன. எனவே அவற்றைப் பெயரைக் கொண்டு தொகுத்தும், வடிவத்தைக் கொண்டு தொகுத்தும் வெளியிடுதல் இயலும்.

**பெயர் - தலம் - இறைவன் - இறைவி**

**காட்டு**

1. வைரபுரம் எயிலம்மை திருவூசல்
   வைரபுரம் சோமசுந்தரேசர் ஒருபா ஒருபஃது
   வைரபுரம் திரிபுரசுந்தரியம்மை நவமணி மாலை

2. வராகி அந்தாதி
   வராகி மாலை

3. புரசைக் கங்காதரர் பேரில் வண்ணம்
   புரசைக் கங்காதரர் பேரில் வண்ணக் குழிப்பு

4. திருவொற்றியூர் தியாகராயர் பேரில் பதம்
   திருவொற்றியூர் வடிவுடையம்மன் பேரில் வாரக் கலித்துறை

**வடிவம்**

1. கடம்பாடி சின்னம்மை மாலை
   சதமணி மாலை
   சாந்தமாலை

2. ஆதிமூலப் பத்து
   நாராயணப் பத்து
   வடமலை நாதன் பேரில் சரணப் பத்து

3. குராவடி வேலர் வண்ணக் குழிப்பு
   மூவரையன் வண்ணக் குழிப்பு

4. கொடியிடை அம்மன் பேரில் பதம்
   சிவகாமி பேரில் பதம்
   மயிலாப்பூர் கற்பகவல்லியம்மன் பேரில் பதம்

5. மறைக்குள விநாயகர் பேரில் கலித்துறை
   வடிவுடையம்மன் பேரில் கலித்துறை
   திருவொற்றியூர் வடிவுடையம்மன் பேரில் கலித்துறை

6. செண்டலங்கார வண்ணம்
   நல்லகுட்டித் தேவன் பேரில் வண்ணம்

**பக்தி இலக்கியம்**

வீரமும் காதலும் செறிந்தது வீரயுகக் காலம். வீடுபேறு, நல்லொழுக்கம் என்ற வகையில் நீதி நூல்கள் எழுந்த காலம் நீதி இலக்கிய காலம். இதன் பின் தோன்றிய பக்தி இலக்கிய காலத்திற்கும், இதற்கும் ஒரு குறிப்பிட்ட கருத்து மாறுபாடு உண்டு. அஃதாவது ஒழுக்கத்தின் பாற்பட்ட நீதி இலக்கியம் ஒருவனை வீடு பேற்றிற்கு உரியவனாக ஆக்கும் என்று கூறும்போது அவனுக்குப் பக்தி அத்தனை அவசியமில்லை என்கிறது. ஆனால் பக்தி இலக்கியம் இறைவன் திருவடி சேர்தலே வீடு பேற்றை நல்க வல்லது என்கிறது. இவ்வகையில் பல்வேறு கடவுளர் தோன்றி, பல்வேறு சமயங்களும்

உருவாயின.

இறைவனை ஏற்றுக்கொண்ட மதங்களும், இல்லையென்று வாதிக்கின்ற மதங்களும் உண்டு. சடங்கு சம்பிரதாயங்களை வலியுறுத்தும் மதங்களும், சமய நீதிகளை அதற்குரிய கடப்பாடுகளை வலியுறுத்திக் கூறும் மதங்களும் உண்டு. முன்னதை வைதீக மதமென்பர். பின்னது மாயாவாதக் கொள்கை என்பர். செம்மாந்த தமிழ் நடையில் அமைந்த பக்தி இலக்கியப் பனுவல்கள் அனைத்துமே தோழமையை ஏற்படுத்தும் அன்பு உணர்வையும், ஒருவருக்கு ஒருவர் பணிந்து நடத்தல் என்ற பண்பாட்டையும் வலியுறுத்தின. அதனால்தான் பக்தி என்பது பெரும்பாலான மக்களை அரவணைத்துக் கொண்டது. இந்நிறுவனத்தில் திருவாசகம், திருப்புகழ் முதலான அச்சான சுவடிகள் உள்ளன. திருக்கயிலாயத் திருவருள் விளக்கம் என்ற பெயரில் இரு சுவடிகள் உள்ளன. இச்சுவடிகளிலுள்ள நூல் ஒப்பிட்டாய்ந்து அச்சுருக் காண வேண்டிய ஒன்று.

**நீதி இலக்கியம்**

ஆற்றுப் படுகையில் தன் வாழ்வினைத் தொடங்கிய மனிதன் தவறுகளைக் களைந்து கொண்டால் இடரின்றி வாழலாம் என்பதை உணர்ந்த காலத்துச் சமூகம் என்ற பேரமைப்பு ஏற்பட்டது. மனித மனத்தைக் குரங்குடன் ஒப்பிட்டுப் பேசுவர் தத்துவவியலார். 'மனமது செம்மை யானால் மந்திரங்கள் செபிக்க வேண்டா' என்றொரு முதுமொழி உண்டு. எனவே நல்ல எண்ணங்களை நோக்கி மனத்தை ஒழுங்குபடுத்துதல் வேண்டுமென்பது தெரி கிறது. சங்ககாலத் தமிழர் கள்ளுண்ணல், சூதாடல் போன்ற கேளிக்கைகளில் நாட்டம் கொண்டு வாழ்ந்தனர். பின்னே வந்தவர்கள் நல்ல ஒழுகலாறுகள் தேவை என்று கருதி அறிவுரை கூறும் வாயிலாக நீதிக் கருத்துகளைக் கூறியிருக் கின்றனர். சங்க காலத்தில் கூட செவியறிவுரூஉ, முதுமொழிக் காஞ்சி ஆகியன நீதிக் கருத்துகளைச் சொல்லி இருக்கின்றன. அதற்குப் பின்னர் வந்த ஒழுக்கத்தை உயிர் மூச்சாகக் கருதிய சமண முனிவர்கள் நீதி இலக்கியத்திற்கு வித்திட்டவர்கள் எனலாம். இத்தகைய நீதி நூல்கள் மனித மனத்தை வளம் செய்வதோடு அவன் வாழ்நாளையும் நீட்டிக்கும் தன்மை

பெற்றது என்ற காரணத்தால் மக்களிடையே செல்வாக்குப் பெற்றது. தமிழ் மறை என்று போற்றப்படும் திருக்குறள், ஔவை செய்த ஆத்திசூடி, கொன்றை வேந்தன் முதலான சுவடிகள் இந்நிறுவனத்தி லுள்ளன.

**திருக்குறள்** (120:232) என்ற ஒரு சுவடிக் கட்டில், கடவுள் வாழ்த்து அதிகாரம் முதல் புணர்ச்சியின் விதும்பல் அதிகாரம் ஈறாக 129 அதிகாரங்களும், 1290 குறட்பாக்களும் உள்ளன. இந்நூலின் பிற்குறிப்பில், "அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால், வீட்டுநெறிப்பால் ஆக நாலு பாலும், அதிகாரம் நூற்று அறுவத்து ஐந்துக்குக் குறள் ஆயிரத்து அறுநூற்று ஐம்பது எழுதினது முற்றும்" என்று எழுதப் பெற்றுள்ளது. இக்குறிப்பு, **திருக்குறள் வீட்டுநெறிப் பாலையும் சேர்த்து நான்கு பால்களையும், 165 அதிகாரங்களையும், 1650 குறள்களையும் பெற்றுள்ளது என்ற புதிய செய்தியைத் தருகிறது.** முழுமையாக இல்லாததால் அதிகப்படியாக எழுதப்பெற்ற குறட்பாக்களை அறிய இயலவில்லை.

சில சுவடிகளின் இறுதியில் அட்டவணை (Index) உள்ளது. இதில் குறிப்பிட்ட ஒரு சுவடிக் கட்டில் உள்ள நூல்களின் பெயரும், பாடல்களின் எண்ணிக்கைகளும், யாப்பு பற்றிய விவரமும் உள்ளன. இதிலிருந்து சுவடியில் இருந்து விடுபட்ட நூல்களை அறியமுடிகிறது.

# 1. காப்பியம்

## 271. இராமாயணம்

**அ.** 69:98; **ஆ.** *31 - 321* ஏடுகள்; **இ.** 46 x 3 செ.மீ.; **ஈ.** *9 - 10* வரிகள்; **உ.** முதலும் இறுதியுமான ஏடுகள் இல்லை; ஏடுகள் பல சிதைந்துள்ளன; **ஊ.** நல்ல கையெழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

மாமணி மண்டப மன்னி மாசறு
தூமணித் தவிசிடைச் சுருதி யேநிகர்
கோமுனிக் கரசனை யிருத்திக் கொள்கடன்
ஏமுறத் திருத்திவே றினைய செப்பினான்.

சான்றவர் சான்றவ தரும மாதவம்
போன்றொளிர் புனிதநின் னருளிற் பூத்தவென்
ஆன்றதொல் குலமினி யரசின் வைகுமால்
யான்றவ முடைமையு மிழப்பின் ராமரோ

முடிவு

இங்கொரு திங்களே யிருப்பல் யானென
அங்கணா யகன்றன தாணை கூறிய
மங்கையு மின்னுயிர் துறத்தல் வாய்மையால்
பொங்குவெஞ் செருவிடைப் பொழுது போக்கினால்

குறிப்புரை

கம்பராமாயணம் பாலகாண்டத்துள், திருவவதாரப் படலத்தின் *78* ஆவது பாடலே தொடக்கப் பாடலாக அமைகிறது. சுந்தரகாண்டத்துள் பிணிவிடு படலத்தில் *62* ஆவது பாடல் முடிய உள்ளது.

இதிகாசங்களான மகாபாரதம் இராமயணம் வடமொழியி லிருந்து தமிழிலும் செய்யபப்பட்டுள்ள நூல்கள். வால்மீகியின் இராமாயணத்தைக் கம்பர் இராமகாதை என்ற பெயரில் தமிழில் செய்துள்ளார். குறிப்பாகத் தமிழ்ப் பண்பாட்டிற்கும் மரபிற்கும் ஏற்ப, கம்பன் வால்மீகி சொல்லாத ஆனால் தமிழுக்கே உரிய வகையில் மாற்றங்களுடன் இராமாயணம் படைத்துக் காட்டியுள்ளார். வால்மீகி இராமாயண கதாபாத்திரமான இராமனுக்கும், கம்பர் காட்டும் இராமனுக்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. இராமனைத் தன்னேறில்லாத் தலைவனாகக் கம்பன் காட்டுவார். மேலும் மிதிலைக் காட்சிப் படலம், பூக்கொய்படலம், இரணியன் வதைப் படலம் ஆகிய மூன்றும் கம்பரால் புதிதாக அமைத்துக் கொண்ட பகுதியாகும்.

கம்பராமாயணச் சுவடிகளில் யுத்தக்காண்டம் நீங் கலாகப்பிற காண்டங்கள் மிகுதியாகக் கிடைக்கின்றன. குசன், லவன், கதை பேசும் உத்தரகாண்டம் தனியாகவே கிடைக்கின்றது. பெரும்பாலும் சுந்தரகாண்டம் அதிகமாகக் கிடைக்கிறது. கம்பராமாயணத்தை அடியொற்றி நாட்டுப்புற இலக்கியங்களில் குறிப்பாகக் கதைப் பாடல்களில் வாலிவதை, அனுமன் தூது, வீவிடணன் சரணம் போன்ற கதைகள் இன்றும் கூத்து நாடகங்களாக நடிக்கப்படுகின்றன. சீதாகல்யாணம் , இராமர் பட்டாபிசேகம், அனுமன் வரலாறு, விபீடண மோட்சம் போன்ற கதைகள் இன்றும் கதாகாலட்சேபமாக நடந்து கொண்டிருக்கின்றன.

இராமன், இலக்குவன், சீதை, மற்றும் வணங்கிய நிலையில் அனுமான் என்ற அமைப்பிலேயே கோயில்கள் இந்தியா முழுக்கக் காணப்படுகின்றன. ஏனைய கதாபாத்திரங்கள் இறைநிலை பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இராமேஸ்வரம் வாலிநோக்கம் போன்ற ஊர்கள் இராமாயணத் தொடர்பு உள்ளவை. மாபெரும் இலக் கியத்தைப் படைத்த கம்பர் பிறந்த தேரெழுந்தூர் என்ற ஊர் காரைக்குடிக்கு அருகே உள்ளது. மறைந்த சா. கணேசன் (கம்பன் அடிப்பொடி) அவர்கள் கம்பருக்கு அவ்வூரில் கட்டிய ஆலயம் இன்றும் மக்களால் போற்றப்பெற்று வருகிறது.

மூலநூல் பதிப்பில் கம்பன் கழகத்தார் கம்பராமாயணம் இராம அவதாரம் என்ற பெயரில் *1983*இல் பதிப்பித்த நூலே மூல நூல் `பதிப்புகளிலெல்லாம் சிறந்த பதிப்பாக விளங்குகிறது. இதனை அடுத்து மலிவுப் பதிப்பாக மர்ரே ராஜம் அவர்கள் வெளியிட்ட கம்பராமாயணத்தைக் குறிப்பிடலாம் சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியர் அவர்கள் சக்கரவர்த்தித் திருமகன் என்ற பெயரில் இராமாயணம் முழுமையும் உரைநடையாகத் தந்துள்ளார். செகவீர இராம பாண்டியன் என்பார் எழுதிய விளக்க உரை சந்த நடையில் அமைந்த ஒன்றாகும்.

## இராமாயணம்

## 272. இராவண சங்காரச் சருக்கம்

**அ. 424:668; ஆ.** *41* ஏடுகள்; **இ.** 44 x 3 செ.மீ; **ஈ.** *8 - 9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை; இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

இராவண சங்காரச் சருக்கம்

துலைவின்றிய விரலாலுயர் தோளார்சிலை வலியின்
நிலைகண்டுள சுகசாரணர் தசகந்தரன் நேர்போய்
மிலைதும்பையின் நடைமாற்றலர் மேலோரவர் தம்மை
கொலைசெய்தொழில் அரிதென்றனர் கொடியோனிது
புகல்வான் (1)

முடிவு

அனுமனங்கதன் மற்றுள்ளோர்
மாப்பனில் மாந்த வெற்றி
இனிமையார் கொழுந்தன் றன்னை
இளங்கொடி கெக்கே னாக்கி
புனிதநீ கனலுண் டாக்கிப்
புகழினைப் பெரிதி யென்றான்
மனுமுறை தவறா நீரான்
வாளெரி வளர்ந்தி னானே (9)

### குறிப்புரை

இராமாயணம் இராவண சங்காரச் சருக்கத்தின் 108 பாடல்கள் முழுமையாக உள்ளன. தொடர்ந்து இராமன் படையெழுச்சிச் சருக்கத்தில் 177 பாடல்கள் முழுமையாக உள்ளன. இராமன் பட்டாபிசேகச் சருக்கத்தில் முதல் ஒன்பது பாடல்களே உள்ளன. சுவடியின் பிற்பகுதியில் வில்லி பாரதத்தைச் சார்ந்த 17 ஏடுகள் சிதறிக் கிடக்கின்றன. அவற்றுள் கவச குண்டலச் சருக்கம், கண்ணன் கவச குண்டலம் கவர்ந்த சருக்கம், துருவாச ரிஷி சருக்கம் போன்ற சருக்கத் தலைப்புகள் காணப்படுகின்றன.

## 273. இராமாயணம் - சூர்ப்பனகை வாது

**அ. 335: 567**; **ஆ.** *1 - 267 (69)* ஏடுகள்; **இ.** 39 x செ.மீ.; **ஈ.** *6* வரிகள்; **உ.** நன்று; இறுதி ஏடுகள் சில சிதைந்துள்ளன. **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

அந்த ஸ்திரீயைக் கைவிடப்போகாதென்று மனத்திலிருந் தாலும் நானுங்கூட இருக்கலாகாதா இராச்சதாளோடே உயித்தியம் பண்ணச்சே அவர்கள் மாயங்களை எல்லாந் தெரியச் செய்வேன். 'பாம்படி பாம்புக்குத் தெரியு'மென்கிற பழமொழியாகிலும் பார்க்கலாகாதா. உமக்குத்தான் ஒருத்தியிருக்கிறாளே! உம்முடைய தம்பியுடன் என்னைச் சேர்த்துப் போகுமே உங்கள் பட்டணத்துக்குப் போகும் போது என்ன ரூபம் வேணுமோ அந்த ரூபம் எடுக்குறேன். அங்கே இருக்கிறவர்களுக்கும் இவளாலே அனேகக் காரியங் கள் சாதித்தோமென்று சொல்லிக் கொள்ளலாம் (பக்.*1*).

### முடிவு

இப்போதும் அந்தக் காரியத்தைச் செவ... து உச்சீவிக் கத்தக்கவர்கள் தங்களைச் சரணாகதி அடைந்த சுக்கிரீப மகாராஜா முதலானவர்களே யென்றுதான்... சொன்ன சொற்களையெல்லாஞ் சந்தோஷமாகக் கேட்டு தயையுண் டாக யிந்தப் புண்ணிய வரங்களையுங் கேட்டறிந்திருக்கின்ற நல்ல விபேகியென்று நினைத்து இளைய பெருமாளான

வர்மன் தி... கொண்டு நின்றார். அது கண்டு அனுமானானவர் இவனுக்குக் கோபந் தணிந்தது இதுதான் நல்ல சமயமென்று இலட்சுமணருக்குச் சமீபத்தில் வந்து அவருடைய திருவடியை வணங்கி நின்றார் (பக். *267*).

குறிப்புரை

**உரைநடை.** இராமாயணத்தில் வரும் சூர்ப்பனகை தொடர்பான கதையுடன் சபரிப் படலம், மராமரப் படலம் என்ற இரு படலங்களும் இதில் உள்ளன.

## 274. இராமாயணம் - யுத்தகாண்டம்

**அ.** 29:51; **ஆ.** *33 - 90* ஏடுகள்; **இ.** 35 x 2.5 செ.மீ.; **ஈ.** *6 - 7* வரிகள்; **உ.** *12* என்ற எண்ணில் ஓர் ஏடு மட்டும் முதலில் உள்ளது. அதனையடுத்து *33* ஆவது ஏடு அமைகிறது. இடையிடையேயும் சில ஏடுகள் இல்லை. ஏடுகள் நல்ல நிலையிலிருப்பினும் வலது பக்க ஓரப்பகுதிக்ள் சற்றுச் சிதைந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஆளெலா மிழந்த தேரு மானையு மாடல் மாவும்
நாளெலா மெண்ணினாலும் தொலைவிலர் நாத ரின்றித்
தாளெலாங் குலைய வோடித் திரிவன தாங்க லாற்றுக்
கோளிலா மன்ன னாட்டிற் குடியெனக் குலைய கண்டான் (143)

முடிவு

தீயொப்பன வுருமொப்பன வுயிர்வேட்டன திரியும்
பேயொப்பன பசியொப்பன பிணியொப்பன பிழையா
மாயக்கொடு வினையொப்பன மழுவொப்பன கழுகின்
தாயொப்பன சிலவாளிகள் துரந்தான்துயில் துறந்தான் (103)

குறிப்புரை

**செய்யுள்நடை.** கம்பராமாயணம் யுத்தகாண்டத்தில், 'பிரமாத்திரப்படலம்' *143*ஆம் பாடல் முதல் 'நிகும்பலை-

யாகப் படலம்' 103 ஆம் பாடல், முடிய மட்டுமே உள்ளன. 'குருதியின் கண்ணன்' என்று தொடங்கும் மகரக்கண்ணன் வதைப்படலத்தில் 58 வது பாடல் முதல் 163 ஆவது பாடல் முடிய ஆறு பாடல்கள் மட்டுமே உள்ளன. மாயா சீதைப் படலமும் முழுமை யின்றியே காணப்படுகிறது.

## 275. இராமாயணம் - யுத்தகாண்டம்

**அ.** 63:91; **ஆ.** *100 - 178 (68)* ஏடுகள்; **இ.** 33 x 2.5 செ.மீ; **ஈ.** *6 - 8* வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு; ஏடுகளின் வலது பக்க ஓரப்பகுதிகள் சிதைந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

### குறிப்புரை

கம்பராமாயணம் யுத்தகாண்டத்தின் ஒரு பகுதியை மட்டும் கொண்டது இச்சுவடி. 'உயிர்த்திலள் உயிர்ப்புமில்லை உயிரிலங் கோவழ்' என்று தொடங்கும் பாடல் தொடக்கப் பாடலாகவும், 'துளங்கு யந்த கனவந்தடி தொழுதலும்' என்று தொடங்கும் பாடல் இறுதிப் பாடலாகவும் அமைகின்றன. ஆயின் படிக்க இயலாதவாறு சிதைந்துள்ளன. இராவண சோகப்படலம், மூலபல வதைப்படலம், வேலேற்றுப் படலம், களங்காண் படலம், தேரேற்றுப் படலம், மகோதரன் வதைப் படலம், இராவணன் வதைப் படலம், விபீஷணன் புலம்புப் படலம், மண்டோதரி புலம்புப் படலம், விபீஷணன் முடிசூட்டுப் படலம், திருவடி தொழுத படலம், வசந்தன் மீட்சிப் படலம், பரத்துவாசப் படலம் ஆகியவற்றில் தேர்ந்தெடுக்கப் பெற்ற சிற்சில பாடல்களே இச்சுவடியில் அமைந்துள்ளன. அச்சான நூல்களிலுள்ள பாடல்களினும் பல வகையான வேறுபாடு-கள் இதில் காணப்படுகின்றன.

## 276. இராமாயணம் - யுத்தகாண்டம்

**அ.** 119:231; **ஆ.** *1 - 328* ஏடுகள்; **இ.** 42 x 3.5 செ.மீ.; **ஈ.** 8 - 9 வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

நாடிய பொருள் கைகூடும் ஞானமும் புகழு முண்டாம்
வீடுயர் வழிய தாக்கும் வேதியன் கமல னோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டொழிய வாகை
சூடிய சிலையில் ராமன் தோள்வலி கூறு வோர்க்கே

கடல்காண் படலம்

ஊழி யுத்த காலத்து உலையா நிலையா வுயர்கிரியும்
வாழி வத்தா மறிகடலு மன்னும் வடபால் வான்றோயப்
பாழி தெற்குள் ளனகிரியும் நிலமும் தாழ்ந்து றந்தெழுந்த
ஏழு பத்தின் பெருவெள்ள மகர வெள்ளத் திறுத்தலால் (2)

முடிவு

இராவணன் தேரேறு படலம்

வருக தேரென வந்தது வையமும் வானும்
உரக தேயமு மொருங்குடன் இவரினு முச்சிச்
சொருகு பூவன்ன சுமையது துரகமின் றெனினும்
நிருதர் கோமக னினைந்துழிச் செல்வதோர் இனைப்பில் (18)

ஆயி ரம்பரி யமுதொடு வந்தவும் வருக்கன்
பாய்வ யப்பசுங் குதிரையின் வழியவும் படர்நீர்
வாய்ம டுக்கும் மாவடவையின் வயிற்றின்வன் காத்தின்
நாய கற்குவந் துதித்தது பூண்டது நலத்தின் (19)

குறிப்புரை

கம்பராமாயணம், யுத்தகாண்டம், கடல்காண் படலம் தொடங்கி இராவணன் தேரேறு படலம் *19* ஆம் பாடல் முடிய உள்ளது.

## 277. (பாரதம்) கிருஷ்ணன் தூது

**அ.** 48:73; **ஆ.** 2 - 72 ஏடுகள்; **இ.** 39 x 3 செ.மீ.; **ஈ.** 7-9 வரிகள்; **உ.** நல்ல நிலை. முதல் ஏடும் இறுதி ஏடுகளும் இல்லை; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

நீடாழி யுலகத்தில் மறைநாலோ டைந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன் மாபார தஞ்சொன்னநாள்
ஏடாக வடமேரு வெற்பாக வெங்கக்கூ ரெழுத்தாணிதன்
கோடாக வெழுதும் மிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ

எ.து.- நெடிய கடல் சூழ்ந்த பூலோகத்திலே வேதம் நாலுடனே அஞ்சாம் வேதமென்ன பிரசித்தமாக நிலைநிற்க வேண்டி தவறுதலில்லாத தவசு நிறைந்த வேதவியாச மகாமுனி மகாபாரதஞ் சொன்ன நாளிலே மகாமேரு மலையை யேடாகப் பிடித்து வினாயகமூர்த்தி தம்முடைய வெள்ளிக் கொம்பெழுத்தாணியாக அந்தப் பாரதத்தை யெழுதின விக்கினேஸ்வர கர்த்தாவினுடைய சீர் பாத கமலங்களிலே தெண்டன் பண்ணி,.....

முடிவு

கன்றால் விளவின் கனிஎறிந்துங்
கழையால் நிரையின் கணமழைத்துங்
குன்றால் முகிலின் மழைதடுத்தும்
குலாவும் செஞ்சொற் கோபாலா
இன்றால் எனது பிறப்புணர்ந்தோம்
என்று அன்புருகி எம்மியர்பால்
சென்றால் எனையும் நீயறியச்
செகத்தில் உள்ளோர் நகையாரே (எ.து).. 220

குறிப்புரை

வில்லிபாரதத்தின் உத்தியோகப் பருவ கிருட்டிணன் தூது சருக்கம் மட்டும் கொண்டது. இரண்டாவது ஏட்டில் ''செஞ் சொல் முனி சஞ்சயனுக்கு யாமுரைத்தக் கருமமும் பின் சென்ற காலை'' என்று தொடங்கும் 3 ஆவது பாடல் முதல் உரையுடன் தெளிவாக உள்ளது. கர்ணனின் உரையாகிய 'கன்றால் விளவின் கனி எரிந்தும்' என்ற பாடலோடு மட்டுமே உள்ளது. தொடக்கத்தில் ஒரு வெற்றேடு உள்ளது.

## 278. பாரதக் கதை

**அ. 354:587**; **ஆ.** *1-85* ஏடுகள்; **இ.** 37 x 3 செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நன்று; சில இடங்களில் துளைகள்; இடையிடையே சில ஏடுகள் இல்லை; **ஊ.** படிக்கக்கூடிய எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

ஸ்ரீமத்ராமனுயாய நமக வேதமார்க்கமாயிருக்கும் வேத வியாசரைத் தோத்திரம் பண்ணிக் கொண்டு இருக்கிறபோது பூலோகத்திலே பாரதக் கதைகள் முடிந்த பிறகு, பிற்பாடு அதெப்படி என்றால் பூர்வ காலத்திலே சந்திர வங்குஷ ராசா வாகிய செனமோ செய ராசாவாகியவன் கொலுவாகயிருக்கிற போது அவரண்டைக்கிப் பரம பாகவத சிகாமணியாகியவன் வேதவியாசர் சிஷ்யராகிய செயமுனி எங்குறவர் வந்தார்.

### முடிவு

அவள் ஆசையுடனே ஸ்தானங்கள் பண்ணி நுவல் வஸ்திரங்களையும் தரித்துக் கொண்டு, குங்குமச் சந்தனமும் போட்டுக் கொண்டு, தாம்பூலமும் தரித்துக் கொண்டு தரகுகள் உடனே மகாஅலங்காரத்துடனே யிருக்கிறபோது அங்கே தாதிகளை விட்டு அர்ச்சுனனை அழைத்து வரச்சொல்லி அனுப்பிக் கொண்டிருக்கிறபோது பிறவாகன அர்ச்சுனன் சண்டைக்கிப் போனவன் அர்ச்சுனன் செயிக்கமாட்டாமல் அர்ச்சுனனும் அவன் தமையன் பிள்ளையும் தமையன் பேரனும் நாலு தேசத்...

### குறிப்புரை

**உரைநடை.** ஆதிபருவம் தொடங்கிப் போர்ச்சருக்கத்தின் ஒருபகுதிவரையுள்ள கதை இந்நூலில் இடம்பெறுகிறது. கிராமங்களில் கதாகாலட்சேபம் செய்கிற முறையில் நடைமிக எளிமையாக யுள்ளது. கொச்சை நடையும் காணப்படுகிறது. பாரத நூலிலிருந்து கதைச் செய்தி சில இடங்களில் வேறுபட்டுக் காணப்படுகின்றது.

## 279. பாரதக் கதை

**அ. 395:639; ஆ.** *295* ஏடுகள்; **இ.** 42 x 3 செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** சிதையும் நிலை; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

குறிப்புரை

**பாடலும் உரையும் உள்ளன.** பாரதக்கதை இடம் பெற்றுள்ள பெரிய சுவடியாகக் காணப்படுகின்றது. ஒன்று முதல் **505** பாடல்களுக்கு மேல் காணப்படுகின்றன. பாயிரம், அவையடக்கம், ஆற்றுச் சருக்கம், பிரபஞ்ச உற்பவச் சருக்கம், பாசறையுத்தச் சருக்கம், பதினோராம் போர்ச்சருக் கம், பதினெட்டாம் போர்ச் சருக்கம், சல்லியப்பருவச் சருக்கம் முதலிய பல சருக்கங்கள் காணப்படுகின்றன. தொடக்கம் தெளிவற்று உள்ளது. முடிவு இல்லை.

## 280. பாரதக் கதை

**அ. 426:670**; **ஆ.** *3 - 100* ஏடுகள்; **இ.** 36 x 3.5செ.மீ.; **ஈ.** *9-10* வரிகள்; **உ.** சிதைவு; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

புரவி கிடைக்கிறது கடினமாய் இருக்கும். அசுவமேத யாகம் பண்ணுகிறதே கடினமானது... பண்ணவேணும் என்றால் மகாபிரயத்தனமாக்கும். அந்த யமுனாசுரன் என்கிற இராசாவானவன்... அந்தப் பட்டணத்திலே மகா பெலவான் களான பேர்கள் மெத்த உண்டு. இந்தப் படியாக அநேகம் தேசாதிபதிகள் இருக்கிறார்கள். அப்படிக் கொத்த உத்தரகுரு பூமியிலே இருக்கப்பட்ட யமுனாசுர மகாராசன் மெத்தவீர பராக்கிரமன். அவர்களுடைய குமாரரான சுகலீலன் கெதாயுதத்திலே மிஞ்சினவன். அவனுடனே கெதாயுத யுத்தம் பண்ணி ஐம்பத்தாறு தேசத்து ராசாக்களெல்லாம் முறிந்து போனார்கள்.

முடிவு

ரதகெச துரகத பதாதிகளுடனே அனல் உத்திரனை மேகங்கள் வந்து கவிந்தது போலச் சுற்றி வளைத்தார்கள். அது கண்டு

பிரத்திமனுடைய குமாரனான அனல் உத்திரன் தன்னை வளைந்த படையின்மேல் ஆக்கிரமித்து மகாகொடிதான பாணங்களை எடுத்து அலையும் காத்தும் வீசினாப் போலே தண்டோப தண்டங்களாகப் பொழிந்து வளைந்து போர் செய்த சத்திராதிகளை இன்ன உருப்படி என்று காணாத படிக்குக் கால்வேறு, உடல்வேறு, தலை வேறு, சந்து வேறு கைவேறாக யானையோடு குதிரை, தேர், காலாட்கள் சகலத்தையும் அறுத்து இரத்தப் பிரளயமாகப் பெருகி ஓடப் பண்ணினான்.

குறிப்புரை

**உரைநடை.** மிக எளிமையான வழக்கு மொழியில் இது கதையாக எழுதப்பட்டுள்ளது. மூன்றாவது அமுர்தத்துசன் கதை என்ற உட்தலைப்பு ஒன்றை மட்டுமே அறிய முடிகின்றது.

## 281. பாரதம்

**அ.** 12:28; **ஆ.** *1-264 (202)* ஏடுகள்; **இ.** 37 x 3செ.மீ.; **ஈ.** *9* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; இடையிடையே பல ஏடுகள் செல்லரிக்கப்பட்டும் ஒன்றிரண்டு முறிந்தும் உள்ளன; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஆரண்ய பருவம், வனம் புகுந்த சருக்கம்

இரணிய மகனு முன்னர் இழிபுரைக் கேதம் கண்ட
தரணிவன் மகனும் மற்ற யானையும் சரனென் றேத்தி
முரணிய சிறியோர் வெஃமு துன்மைகொண் மாதும் கண்ட
பிரணவப் பொருளைப் பின்னும் பேணுவார் காணு வாரே (1)

மன்னவர் மன்ன னேஇவ் வாறுமுன் னிகழ்ந்த தென்று
சொன்னமா முனிக்கி றைஞ்சி மேற்செயற் சொற்றி யன்ன
பன்னுவன் கேண்மி னென்று தொடங்கினான் பருதிவேங்கை
தன்னுவ தனைய செம்மை சூழ்சடை முடியி னானே (2)

குறிப்புரை

1 ஆவது வனம் புகுந்த சருக்கம்,
2 ஆவது அர்ச்சுனன் தபசு சருக்கம்,
3 ஆவது நிவாத கவசந்தர் காலகேயர் வதைச் சருக்கம்,
4 ஆவது நளன் கதை உரைத்த சருக்கம்,
5 ஆவது தீர்த்த மகிமை உரைத்த சருக்கம்,
6 ஆவது தீர்த்த யாத்திரைச் சருக்கம்,
7 ஆவது வீமராசன் மந்தாரமலர் கொணர்ந்த சருக்கம்,
8 ஆவது மணிமாலன் வதைச் சருக்கம்,
9 ஆவது அர்ச்சுனன் பூலோகத்துக்கு வந்த சருக்கம்,
14 ஆவது சித்திரசேனச் சருக்கம்,
15 ஆவது மற உற்கலச் சருக்கம்,
16 ஆவது சைந்தவச் சருக்கம்,
17 ஆவது ஸ்ரீராமாயணக் கதையிராம உற்பவச் சருக்கம்,
18 ஆவது இராவணன் பிறப்புரைத்த சருக்கம்,
19 ஆவது இராமன் பட்டாபிஷேகச் சுருக்கம்,
20 ஆவது சாவித்திரி கதைச் சருக்கம்,
21 ஆவது துருவாச ரிஷி சருக்கம்,
22 ஆவது கன்னன் கவசகுண்டலங் கவர்ந்த சருக்கம்
என்று பல சருக்கங்களை இச்சுவடி கொண்டுள்ளது. தொடக்கத்தில் ஒரு வெற்றேடு உள்ளது.

இதிகாச வரிசையில் இராமாயணத்திற்கு அடுத்து அமைவது மகாபாரதம். வேதவியாசர் வடமொழியில் இந்நூலைச் செய்தார். அகத்தியப் பட்டர் என்பார் பால பாரதம் என்ற பெயரில் வடமொழியில் ஒரு பாரதம் செய்துள்ளார். இவை இரண்டையுமே கண்டு நோக்கி வில்லிபுத்தூரார் தமிழில் வில்லிபாரதத்தைப் பாடியுள்ளார். வியாச பாரதம் மற்றும் வில்லி பாரதத்தை வைத்து உரைநடையில் தனது பெயரில் நல்லாப் பிள்ளை என்பார் 'நல்லாப் பிள்ளை பாரதம்' செய்துள்ளார்.

வில்லியார் செய்த பாரதமே தமிழில் பெருமைக்குரிய பாரதமாகத் திகழ்கிறது. இவரது நூலில் வட மொழிச் சொற்கள் தனிமொழியாகவும், தொடர்மொழியாகவும்

திரிந்தும், மொழிபெயர்ந்தும் இடம்பெற்றுள்ளதைக் காணலாம். உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம், பிரிதுமொழிதல் முதலிய பொருளணிகளோடு வில்லியாரின் பாரதம் யமகம், திரிபு, பிரகாசம் முதலிய சொல்லணிகளும் அமையப் பெற்றுள்ளது.

தமிழகத்தில் திருமுனைப்பாடி நாட்டில் சனியூர் என்ற தலத்தில் வில்லியார் தோன்றினார். இவர் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்ற நான்கு வகைக் கவிகளிலும் வல்லவர். அருணகிரிநாதர் இவரது உடன் காலத்தவர் எனக் கூறுவர்.

பாரதத்தில் இடம்பெற்றுள்ள கிருஷ்ணன் தூது, கீசகவாதம், தருமர் பட்டாபிசேகம், துரோபதை சபதம் போன்ற பகுதிகள், இன்றும் தமிழகத்துத் தெருக்கூத்து நாடகத்தாரால் கூத்து நாடகங்களாக நடைபெற்று வருவதைக் காணலாம். வத்சலா கலியாணம், சுமத்திரை திருமணம், கிருஷ்ண விஜயம், பாண்டவர் வனவாசம் போன்ற தலைப்புகளில் பாரதம் கதாகலாட்சேபமாக இன்றும் நடைபெற்று வருகின்றது.

அர்ச்சுனன் தபசு, அல்லியரசாணி மாலை, கர்ணன் சண்டை, வீர அபிமன்யு, புலந்திரன் துறவு போன்ற தலைப்புகளில் எண்ணிலடங்காத கதைப்பாடல்கள் சுவடிகளில் இன்றும் கிடைக்கப் பெறுகின்றன

வீர அபிமன்யு, விராடபருவம், துரோபதி வனவாசம், கர்ணன், மகாபாரதம் போன்ற தலைப்புகளில் பல்வேறு திரைப்படங்கள் பாரதத்தை அடியொற்றி வந்துள்ளன. சின்னத் திரையில் இன்றும் மகாபாரதம் என்ற பெயரில் இப்பாரதம் மக்களை மகிழ்வித்து வருகிறது.

## 282. பாரதம்

**அ. 77:171 ஆ.** *1-197 (78)* ஏடுகள்; **இ.** 40.5 x 3 செ.மீ.; **ஈ.** 7-9 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; பல ஏடுகளில் துளைகள் உள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

முதல்நாள் யுத்தச் சருக்கம்

மேவரு ஞானா னந்த வேழமாய் விதித்தோ னாகி
மூவர மாகி மீன முதலிய பவங்க ளாகி
..வரு யாவுமாகி இறைஞ்சி... நிறைஞ்சிப் பலபல
தேவர மாகி நின்ற செங்கண்மால் எங்கள் மாலே (1)

மாயையென் றொருத்தி தன்பால் மனமெ னும்மைந்தர்த் தோன்றி
தூயநல் அறிவன் தன்னைத் தோற்ற மென்றாக்கி வைத்தான்
தாயொடு தந்தை மக்கள் தார மென்றவர்பால் வைத்த
நேயமும் அவன்தன் னாலே நிகழ்ந்த தோர்நினைவு
கண்டாய் (2)

முடிவு

மாமணி மகுடக் கோடி மன்னிரு பாலும் நிர்ப்பத்
தூமணித் தவசின ரெத்தி துணையொரு நால்வர் சூழக்
கோ..க் கனங்க ளாகி கொண்டல்போல் குமரி யாற்பச்
சோமன் மாமரபி னோன்பாள் துரோபதை தனையு முற்றார் (49)

முடியாது கவிழ்த்து மா.... ராகை முன்னி வாழ்ந்தார்
படிமிசை மன்ன ரெல்லாம் பதிபதி புகுந்தார் பாரோர்
அடிமிசை பணிந்து மந்த மரிதொழில் ... ன்றார்
நெடியவன் பாதம் போற்றி நேமியாண் டிருந்தார் ஐவர்(51)

தருமராசாவுக்குப் பட்டாபிஷேகம் .... சருக்கம்

**பதினெட்டுநாள் பாரதம் முற்றும்**

பிற்குறிப்பு

பிங்கள வருஷம் புரட்டாசி மாதம் ரோகிணி நட்சத்திரம் புதவாரநாள் சத்தமியும் கூடின கன்னி லக்கினம். இப்படிப்பட்ட சுபதினத்தில் பெரிய திருமல சமுத்திரம் வண்டிப்பாளையம் தருமராசாக் கோயில் பூசாரி சந்தியப்பன் குமாரன் அருச்சுனன் படிக்கின்ற பதினெட்டு நாளைய உயித்திய காண்டம் ஒத்த தெரு வாத்தியார் ஆறுமுகம் வாத்தியார் குமாரன் அம்மையப்பிள்ளை வாத்தியார் எழுதினது.

குறிப்புரை

இச்சுவடியில் முதல்நாள் யுத்தச் சருக்கம் (உயித்தியம் சருக்கம்), இரண்டாவது நாள் யுத்தச் சருக்கம் எனப் பதினெட்டு நாள் யுத்தப் பாடல்களும் 'தருமராசாவுக்குப் பட்டாபிஷேகம்' என்னும் முடிசூட்டுச் சருக்கமும் சுருக்கமாக எழுதப்பட்டுள்ளன.

## 283. பாரதம்

**அ.** 305:530; **ஆ.** *46* ஏடுகள்; **இ.** 46 x 3.5செ.மீ. **ஈ.** *8-9* வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

காததுருவங் கொண்டு கடுக நடந்தோடி
அந்த வனந்தனிலே அர்ச்சுனனும் வீமனுமாய்
இந்த வனமா மென் றிசைந்தோடி வந்துநின்று
அண்ணல் திருமா லென்றறிந்து மனமுடைந்து
கண்ணறுந்தான் மண்மீதில் காயத்துடன் கிடக்க
கண்டார் விழுந்தார் கதரிய பையமிட்டார்
விண்டார் மனத்துயரில் விண்ணுலகந்தா னறிய
விருத்தமர் அய்யகோ ராமராமர் அய்வரைப் பிரிந்து
கானில்மெய்யது புனாதிதாவ மேனியும் நிறமும் வேறாய்

முடிவு

மறையவர்கள் தன்தெருவும் வாள்வேந்தர் தன் தெருவும்
விறல் வணிகர் தன்தெருவும் வெள்ளர் தன்தெருவும்
எல்லா வழகு மிசைந்த கடை வீதிகளும்
உல்லாச மாகஒரு நொடிக்கு ளுண்டாக்கி
எவராலும் மங்கூரண் பரியவெம்பெருமான் கொண்டாடத்
துவரா புரியெனும்பேர் சூட்டினான் னன்னகர்க்கே.
இவ்வாறு தேவதச்ச னிந்நக ருண்டாக்க
ஒவ்வா திவ்வூர்க்கு நமதூரென்றார் தேவரெல்லாம்

குறிப்புரை

*28* முதல் *166* வரை எண்கள் உள்ள பகுதிகள் (*21* ஏடுகள்) வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. அடுத்த *25* ஏடுகளுக்கு

எண்கள் இல்லை. கரன்வதைபடலம், சூர்ப்பனகை சூழ்ச்சி, சத்தியை மணம் புரிந்த கதை என்ற தலைப்புகள் உள்ளன.

## 284. பாரதம் - ஆதிபருவம்

**அ.** 38:62; **ஆ.** *1-87* ஏடுகள்; **இ.** 35 x 3.5செ.மீ.; **ஈ.** *6-8* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை. **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பொருப்பினை நிகர்த்த தோளான்
புகழ்பவு டியந்தன் சார்போ
யருக்கிய முதலாம் பூசை
யவன்தரக் கைக்கொண் டாங்கு
திருப்புரை யுனது தேவி
தருக்குழை குருவின பன்னி
விருப்புள தானாள் நேரில்
வேந்தனே யளித்தி யென்றான்.

எ-து.- உதங்கமகாரிஷியானைச் சுருக்கிலே போய் பர்வதம் போலுமிரண்டு தோள்படைத்த புகழுங் கீர்த்தியும் பெற்ற பவுடியந்த மகாராசாவினிடத்துக்குப் போய் அந்த ராசா எதிர்கொண்டு அடுக்கிய பூஜைகள் செய்ததெல்லாம் கைக்கொண்டு சாசனத்திலே இருந்து கொண்டு பவுடியந்த மகாராசாவை அழுகை ஆசீர்வாதங்கள் பண்ணின பிறகு நமக்குக் குருதட்சணை கொடுக்க வேண்டி இருக்குது. உன்னுடைய பிராண நாயகியாகிய மகாலட்சுமி நிகரான ஸ்ரீயினுடைய காதிலே தரித்திருக்கிற குண்டலத்தின் பேரிலே அபிலாஷையை என்னுடைய பத்தினியானவள் ஆசைப் பட்டு என்னை உம்மிடத்திற்குப்போய் குருதட்சிணங்கள் வாங்கி வரச் சொன்னாள்.

முடிவு

மணிமுடிக் குரிய நிருபனுங் கடிகொள்
மாதர் தங்களை மகிழ்ச்சியால்
அணிபெறத் தழுவி யின்ப வேலையி
னழிந்து நாள்பல கழிந்தபின்

பிணிகளுக் கரசெனும் பெரும்பிணி
பிணிற்று வாழ்வினில் நனித்தெனப்
பணிமு டிப்புவி யிரங்க வைகியொரு
பற்றி லாதனெறி பற்றினான்.

எ.து.- இரத்தின மணி பிரகாசிக்கப்பட்ட கிரீடம் தரித்துப் பட்டத்துக்குரியவனாகிய சித்திரவீரியன் என்று பேருள்ள ராசனானவன் விவாகம் செய்த பெண்களுடனே கூடி மகிழ்ச்சியாகச் சேர்ந்து தழுவி இன்ப சமுத்திரத்திலே அழுந்தி வாழும் நாள் கழித்து இருக்கிற போது வியாதிகளுக்கெல்லாம் அரசனாகிய பெருவியாதி கொண்டு கைகால் குறைந்து இனிமேல் பூலோகத்திலே பிழைத்து வாழ்ந்திருக்க மாட்டானென்று சகலரும் சொல்லவும் ஆதிசேஷன் முடியினாலே தாங்கப்பட்ட பூலோக மெல்லாங் கிலேசத்தை அடைய பிறந்து ஒருவருக்குக் கிடையாத பதவியிலே சேர்ந்தானென்றவாறு. 115 முடிவு. சந்தனுச் சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் 19, செய்யுள் 985.

### குறிப்புரை

**பாடலும் உரையும் உள்ளன.** வில்லிபாரதம் ஆதிபருவம் மட்டும் உள்ளது. பரிசித்துச் சருக்கம், வியாச உற்பவச் சருக்கம், சிறப்புப் பாயிரமுரைத்த சருக்கம், துட்டியந்த சருக்கம், கந்தமாதன சருக்கம், காருட சருக்கம், பிரபஞ்ச உற்பவச் சருக்கம், யயாதி சருக்கம், பாரத வீரர் உற்பவச் சருக்கம், சந்தனுச் சருக்கம் முதலான சருக்கங்கள் முழுமையாக உள்ளன.

## 285. பாரதம் நிரை மீட்ட சருக்கம்

**அ. 47:72; ஆ.** 221-450 ஏடுகள்; **இ.** 32.5 x 3செ.மீ.; **ஈ.** 6 வரிகள்; **உ.** நல்ல நிலை; ஒன்றிரண்டு ஏடுகளில் ஒரு சில துளைகள் உள்ளன; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

### முற்குறிப்பு

சௌமிய வருசம் ஆடிமாதம் 11 ந் தேதி உத்திர நட்சத்திரம் பஞ்சமி மங்கல வாரம் ஆரம்பிச்சது.

தொடக்கம்

அண்டர்தம் துயரம் தீர
அயோத்திமா நகரம் சென்று
தண்டகா ரண்ணியம் சென்று
சமுத்திரம் அணையாய்க் கட்டி
கொண்டல்ரா வணனை மாட்டிக்
கோதண்டங் கையி லேந்தி
புண்டரிகக் கமலக் கண்ணன்
பொன்னடி வணக்கஞ் செய்வாம்

உத்திரன் நிரை மீட்ட சருக்கம்

உருவ மாயரு வாயகம் புறத்தினு முலாவு
மொருவன் மூவுல கோரடி யளந்தசே வடிகள்
வருவ தாகியும் போவ தாகியுந்தடு மாறுங்
கருவெ னும்பெருங் கடற்கரை யேத்தலாங் கலமே. எ.து...

முடிவு

மற்றய வரசன் மைந்தன்
மலிகனை புட்டிற் றங்கும்
அற்புதக் கணைக ளியாவு
மகலவா துலனாய் நின்றான்
முற்பவ முரையயாற் செல்வ
முரகற்பால் இடையில் எய்தி
பற்பல அகந்தை நல்கிப்
பயன்படா தகல்வே போல

குறிப்புரை

**பாடலும் உரையும் உள்ளன.** வில்லிபாரதத்தின் விராடபருவ நிரைமீட்சிச் சருக்கம் மட்டும் கொண்டுள்ளது இச்சுவடி. ஆனால், ஒன்று முதல் 382 பாடல்கள் தொடர்ச்சியாக உள்ளன. பல பாடல்கள் வில்லிபாரதப் பாடல்களில் இருந்து வேறுபடுகின்றன. கீசகன்கதை, மற்போர்ச் சருக்கம் போன்றவையும் தொடர்ச்சியாக உள்ளன. பாட்டின் எண்ணிக்கையாலும் பிறசெய்திகளாலும் இச்சுவடி வில்லி பாரதத்தினின்றும் வேறுபடுகிறது, முதலிலுள்ள ஏட்டில் ஏடு

எழுதத் தொடங்கின நாள் பற்றிய குறிப்பும், கடவுள் வணக்கப்பாடலும் உள்ளன.

## 286. பாரத வசனம்

**அ. 114: 221; ஆ.** *86 - 220* ஏடுகள்; **இ.** 37 x 3செ.மீ.; **ஈ.** *6* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; ஏடுகள் சிதைந்துள்ளன; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

ராசாக்களும் மடிஞ்சுபோனார்களென்று சேதிகேட்டு அடிச்சு விழுந்து புரண்டு அடித்துக்கொண்டு அழுகிறபோது அந்தச் சத்தம் ஊர்வசியாளும் கேட்டு அப்பி அறைஞ்சு கொண்டு அழுது தங்கச்சியான சித்திராங்கதையாள் அண்டைக்கு வந்து இருவரும் கட்டிக்கொண்டு அழுகிற சேதி மணிப்புரத்திலே இருக்கும் பிறவாகனனும் கேட்டுச் சீக்கிரமாய் அரண் மனையை விட்டுத் தன்னிட மந்திரியும் தானுமாகப் புறப் பட்டு மதுராபுரியிலே வந்து அந்தப் புரத்திலே யிருக்கிற தாயிமார் அண்டையிலே வந்து சாஷ்டாங்கமாய் நமஸ் கரித்துத் தெண்டனைப் பண்ணி கையி கட்டிக்கொண்டு வாரும். அம்மா தாயே என்னிட மாதாவே தேவரீர் அவர்களே நீங்களிருவரும் அழுகுறக் காரணம் என்ன நான் செயித்து உற்சாகத்துடனே வந்தபோது உங்களுக்கும் குறை என்னயிருக்கு. நீங்கள் சந்தோசமாயிருக்க வேணுமே. ஒழிய இப்படி நீங்களிருவரும் வியோகலப்படுவது ஏதென்று சொல்லுகிறபோது சித்திராங்கதையாள் கேட்டுப் பிற வாகனா சொல்லுகிறேன் கேளும், முன்னாலே குருவை சீஷன் கொன்னாப் போலே ஆச்சுது. நீ ஆர்ச்சுன சண்டைக்குப் போனாயே. அவனை எந்த விதத்திலேயாவது பிடித்துக் கொண்டு வருவாய் என்றெண்ணியிருந்தோம்.

### முடிவு

அந்தக் கிருஷ்ண தேவனை ஒரு தட்டிலே வைத்து ஒரு தட்டிலே பொன்னை வைத்து நிறுத்தி அந்தப் பொன்னை எனக்குக் கொடுத்து விடுகிறேன், போறேன் என்று ராதா சொன்னார். அதுகேட்டுச் சத்தியபாமா சந்தோசப்பட்டு

வாரும் ஐயாசுவாமி அப்படியே தருகிறேன் என்று பெரிய திராச்சுக் கொண்டு வந்து ஒரு தட்டிலே தன் புருசனை உட்காரவைத்து, ஒரு தட்டிலே தன்னிட வீட்டிலே உண்டான ரொக்கங்கள், உடமைகள் சகலத்தையும் கொண்டு வந்து போட்டு வைச்சாள். அதுகண்டு ஸ்ரீகிருஷ்ண தேவர் மனது சந்தோசமாயி இவளைப் பங்கம் பண்ண வேணுமென்று மனத்திலே எண்ணி, தான் அந்தத் தட்டிலே உறுதியாய் நின்றருளினார். ஈரேழு பதினாலு லோகத்தையும் இருத்தியபடி யினாலே எப்போதும் இருக்கிறாப்போலே யிருக்குது. அதுகண்டு சத்தியபாமா ஆச்சிரியப்பட்டு பின்னையும் தன்னுடைமையும் தன் தோழிமா ருடைமையும் கொண்டு வந்து போட்டாள். அதிலேயும் ஸ்ரீகிருஷ்ணதேவர் தட்டு எழும்பாமல் போச்சுது.

குறிப்புரை

நாட்டுப்புறக் கதை வடிவில் உரைநடையில் பாரதம் அமைந்துள்ளது. தொடக்கமும் முடிவுமில்லை. பாரதத்தைச் சார்ந்த துணைக்கதைகளே முழுமையும் இடம் பெறுகின்றன.

## 287. மகாபாரதம் - ஆதிபருவம்

**அ.** **471:720;** **ஆ.** *158* ஏடுகள்; **இ.** 45 x 3செ.மீ.; **ஈ.** *6-8* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

மறைமாமுனி அன்னவள் தன்னை மகிழ்ந்து புல்கி
குலைமாறிடவே
......................................... ங்குமரா யந்தான்
திறமாகிய வெம்புயக் காலினர் சேர்தல் கண்டே
இவை மாமென நொந்தனன் மாதவன் துகைப்பான்

என்றது - சகலமான வேதங்களும் தெரிந்த அவளிடத்திலே சேர்ந்து சுகிக்கும்போது இராசாவினுடைய குடையெல்லாம் தீரும்படிக்குப் பதினோரு பிள்ளைகளைப் பெறும்படி செய்தார். அந்தப் பதினோரு பிள்ளைகளும்....

முடிவு

ஆதலால் ஒருவன் தீமை அவன்குலத் தன்னவர்க் கில்லா
நோதல்கள் புரியு மென்று நொடித்தமா தவனை நோக்கி
................................... உருபொழிந் துரைத்த சாப
மேதுகா ரணத்தா லென்றான் இராசன்மா தவன்
இசைப்பான் என்றது-

உதங்க மகாரிசியானவர் சனமே ஜய மகாராசன் கதையைச் சொல்லி ஆனபடியினாலே ஒருவன் செய்த தீமை அவன் குலமுச்சூடும் நோகச் செய்து பழிசுத்தும் என்று உதங்கமகாரிசி சொன்ன அளவிலே மகாராசனானவன் பிராமணாளுக்கெல்லாம் இராசனாய் இருக்கப்பட்ட மகாரிசி ஈசுவரனே.. கேட்க உதங்க மகாரிசி அந்தக் கதையைச் சொல்லத் தொடங்கினா ரென்றவாறு.

**பிருகு வங்கிசச் சருக்கம் முற்றும்.**

குறிப்புரை

**மூலமும் உரையும் காணப்படுகிறது**. மகாபாரதத்தின் ஆதி பருவக்கதை அடங்கியது இச்சுவடி. உரை மிகவும் கொச்சை நடையில் உள்ளது. வசிஷ்ட புத்திரச் சருக்கம், வாரணாவதாரச் சருக்கம், பிருகு வங்கிசச் சருக்கம் போன்ற சருக்கங்கள் அடங்கியது இச்சுவடி.

## 288. வில்லிபாரதம்

**அ. 96:198; ஆ.** *3-322 (148)* ஏடுகள்; **இ.** 40 x 25செ.மீ.; **ஈ.** *4-6* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; ஏடுகள் இடையிடையே இல்லை; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

கேட்டு மைந்தனும் தாயருள் கொண்டவண் கிட்டி
நீட்டுந் தீயறை விழுங்கினன் நெஞ்சிடைப் புழுக்கம்
காட்டு வேதியன் ஒருவனைக் கண்டுநீ கடிதின்
மீட்டும் வாவென மீண்டனன் விளங்கிழை யோடும்

..... .... ....
காருடச் சருக்கம் முற்றும்
ஆகச் சருக்கம் 7க்கு விருத்தம் 293.

முடிவு

மாத வத்தநீ மொழிந்திட யயாதிதன் வளமை
பூதலத்திலே உணர்ந்தனன் பூருவீகச் செயலு
மீது தித்தெழும் மன்னவர் இயற்கையும் அவிழ்ந்த
காத லுத்தனன் கட்டுரைத் திடவெனப் புகன்றார்

குறிப்புரை

வில்லிபாரதத்தைச் சார்ந்த இச்சுவடியில் 44 ஆவது ஏட்டில் காருடச் சருக்கம் முடிவுபெறுகிறது. அதேபோல 130 ஆவது ஏட்டில் துட்டியந்த சருக்கம் தொடங்குகிறது. இடையிடையே பிரபஞ்ச உற்பவச் சருக்கம், சர்ப்பயாகச் சருக்கம், பாரதவீரருற்பவச் சருக்கம், சந்தனுச் சருக்கம், வதிட்டர் புத்திரர் சோகச் சருக்கம், பராசரச் சருக்கம், பாயிரச் சருக்கம், துட்டியந்தச் சருக்கம் போன்றவை முறைமாறிக் காணப் படுகின்றன. 336 ஆவது ஏட்டிற்குப் பிறகு சிறப்புப் பாயிரம் உரைத்த சருக்கம் என்று தொடங்கி,

'அந்தணர்கள், சூதுலர்கள் யாரு மகிழ்வெய்தி
முந்துநெறி மன்னன்முறை யாலினிய பூசை'

என்னும் பாடல் முதலாகச் சில ஏடுகள் தொடர்கின்றன. ஏடுகளின் எண்களும் மாறி மாறி ஒரே எண் இரண்டு, மூன்று முறை என்ற அளவில் கலந்து கிடக்கின்றன. ஏடுகள் சிலவற்றிற்கு எண்கள் இல்லை. மொத்தத்தில் இது, வில்லிபாரதம் ஆதிபருவம் என்பது மட்டும் விளங்குகிறது. இறுதியில் ஒரு வெற்றேடு உள்ளது.

## 289. வில்லிபாரதம்

**அ.** 139:297; **ஆ.** *2-139* ஏடுகள்; **இ.** 44 x 3செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங்களில் வெளியாகியுள்ளது.

தொடக்கம்

பதினான்காம் போர்ச் சருக்கம்

பாப்புவெம் பதாகைப் பார்த்திபன் பணியாற்
பத்திரண் டியோசனைப் பரப்பில்
தீப்புறஞ் சூழ நடுவநிற் பதுபோல்
செயித்திர தனையிடை நிறுவி
கோப்புறப் பரிதேர் குஞ்சரம் பதாதி
கூறுநூன் முறையணி நிறுத்திக்
காப்புறத் திசைகள் எட்டினு நெருங்கக்
காவலர் யாவரையும் நிறுத்தி (5)

முடிவு

இருள்ப ரந்தனி யமையு மிற்றையம
ரென்று துன்றுகழ லிட்டதாள்
அருள்ப ரந்தவிழி யறனின் மைந்தனொடு
சேனை பாசறை யடைந்தபின்
உருள்ப ரந்தரதத் துரக குஞ்சரப
தாதி யோடுகடி தோடினான்
மருள்ப ரந்ததினி நெஞ்ச னாகிடன்
மன்னர் மன்னனெனும் மன்னனே (46)

குறிப்புரை

**பாடலும் உரையும் உள்ளன**. வில்லிபாரதம் பதினான்காம் போர்ச்சருக்கமும் பதினைந்தாம் போர்ச்சருக்கத்தின் முதல் 46 பாடல்களும் ஏடு 2 முதல் 80 முடிய உள்ளன. முதல் ஏடு இல்லையாதலின் ஐந்தாம் பாடல் முதலே காணப்படுகிறது. மீண்டும் ஏடு 29 முதல் தொடங்கி 67 முடியவும், 1 முதல் தொடங்கி 39 முடியவும் காணப்படுகின்றன. அவற்றுள் பதினெட்டாம் போர்ச்சருக்கம் 'மீனாமை கோலநெடு' என்னும் முதற்பாடல் தொடங்கி முழுவதும் உள்ளது. சிலபாடல்கள் முறைமாறி அமைந்துள்ளன.

## 290. வில்லிபாரதம் - கிருட்டிணன் தூதுச் சருக்கம்

**அ**. 434;680; **ஆ**. *1-151* ஏடுகள்; **இ**. 27.5 x 2.5செ.மீ.; **ஈ**. *7-8* வரிகள்; **உ**. ஓரளவு நல்ல நிலை; **ஊ**. தெளிவு; **எ**. குறை; **ஏ**. இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பொருப்பிலே பிறந்து தென்னன்
புகழிலே கிடந்து சங்கத்து
இருப்பிலே யிருந்து வைகை
ஏட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர்
நினைவிலே நடந்து ஓரென
மருப்பிலே பயின்ற பாவை
மருங்கிலே வளரு கின்றாள் (1)

பேர்படைத்த விசயனுடன் மும்மைநெடும்
பிறவியினும் பிரியா னாகிச்
சீர்படைத்த கேண்மையினாற் தேரூர்தற்
டசைந்தருளுஞ் செங்கண் மாலைப்
பார்படைத்த சுயோத னற்குப் படையிடே
னமரிலெனப் பணித்த கோவை
கார்படைத்த நிறத்தோனைக் கைதொழுவார்
பிறவாழிக் கரைகண் டாரே (2)

முடிவு

தூதுபோ யரவத் துவசனோ டுறுதி
சொன்னது மறுத்தவன் சினந்து
மோதுபோர் புரியத் துணிந்ததும் விதுரன்
மூரிவில் லிறுத்ததுங் கங்குல்
போதுபோர் வஞ்சம் விளைத்ததுங் கன்னன்
புரந்தரற் கீந்ததும் பயந்த
மாதுபோய் வரங்கள் பெற்றவை யொழிய
மற்றெலா மைத்துனர்க் குரைத்தார் (20)

குறிப்புரை

வில்லிபாரதம் - கிருட்டிணன் தூதுச்சருக்கத்தைக் கூறுவது இச்சுவடி. 'பொருப்பிலே பிறந்து' என்ற சிறப்புப் பாயிரப் பாடல் நூல் தொடக்கத்திலே எழுதப்பட்டுள்ளது. 'பேர் படைத்த' என்னும் கிருஷ்ணன் தூதுச் சருக்கத்தின் கடவுள் வணக்கப்பாடல் முதலாக **201 பாடல்கள் உரையுடன் காணப்படுகின்றன.** அச்சு நூலினின்று பலவகையான வேறுபாடுகளையுடையதாக அமைகிறது.

## 291. வில்லிபாரதம் - விராட பருவம்

**அ. 123:236; ஆ.** *1-554 (302)*; **இ.** 3.4 x 3செ.மீ.; **ஈ.** *5-6* வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு; ஏடுகள் பல முறை மாறி சரிசெய்ய இயலா வகையில் உள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது. அச்சு நூலினின்றும் இச்சுவடி சற்று வேறுபட்டது.

தொடக்கம்

பன்னிரண்டு வருசம்வன வாசம் செய்து
பஞ்சவருந் துரௌபதியக் கியாத வாச
முன்னியொரு வருசமது விராட தேசம்
உருமாறி யெவரென்று ஒருவர் காணா
மன்னியது காலமது போக்குங் காலை
மன்னனுக்கு மைத்துனனாங் கீசகன்தான்
கன்னிகையைக் கண்டுமைய லாகி யேதான்
காற்றுமைந்தன் கரத்திலவன் மாய்ந்தா னம்மா

முடிவு

வந்தோர் பலர்க்குங் கரியமுகில்
வண்ணன் தனக்குங் குந்தியவள்
தந்தோர் தமக்கும் நகரிலுறு
சனங்கள் தமக்கும் வெவ்வேறாய்
முந்தா யமுது கந்தமெலா
முதன்மை யடைக்காய் பணியாடை
நந்தா தளித்துப் பூரித்தான்
நாமவிராட னெனுநலத்தோன்

குறிப்புரை

**பாடலும் உரையும் உள்ளன**. வில்லிபுத்தூரார் பாரதத்தின் விராடபருவம் முழுமையும் அடங்கியது இச்சுவடி. ஆயினும் அச்சு நூலினும் பல பாடல்கள் வெவ்வேறாக உள்ளன. தெஷ்ஷணன் நிரைமீட்ட சருக்கம், உத்தரன் நிரைமீட்ட சருக்கம், தக்கன் நிரைமீட்ட சருக்கம் முதலான சருக்கங்கள் உள்ளன. இறுதியில் 3 வெற்றேடுகள் உள்ளன.

# 2. புராணம்

## 292. அரசவனப் புராணம் முதலியன

**அ.** 118:230; **ஆ.** 4 ஏடுகள்; **இ.** 28.5 x 3 செ.மீ.; **ஈ.** 9-10 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

இனி, இந்தத் திருக்கோவலூர் புராணத்துக்குள்ளானது அரசவனப் புராணமாகையால், இரண்டும் ஒன்றாய் விளங்கியதை அறிவிப்பது.

திருவளர் கோவலில் வாசமிரு கண்டோர்
சதுர்யுகம் செய்யுமந்நாள்
அரசவனச் சிகாசிகாமணி இறையை ஐயனி
ருடிகளும் மால்வெய்யோன்
உரைஅவனோடு ஒன்பதுபோ் இந்திரன் அக்கினி
எமனுமோதும் வலயுபரி
பூசைஎனக் கேட்குமிரு கண்டும் பூசித்தப்
புரியில் வாழ்ந்தார்

முடிவு

ஞானந் தன்னுண்மை தத்துவா
தீதநடு சிவபுரத்துள் வீரட்டா
கானந்த மென்னும் உயர்பிணாகினி
னீராட்டி யம்மலர் கொடர்சித்து
யானென்ற வார்மார்பன் நிவேதன
மெய்யகம் புரம்நாம ரூபங்கள்
ஆனந்த புரணசிவம் பிரகாசிப்பது
சிவாதது வைத்த அர்ச்சனையாம் (18)

குறிப்புரை

திருவருட் பயன் செய்யுட்குறள் (118:228) எனும் நூலின் நூறாவது குறட்பா முடிவில் அதே ஏட்டில் 'வாதவூர்

புராணம்’ என்று தொடங்கி ஓர் ஏடு மட்டும் உள்ளது. அடுத்துத் திருக்கோவலூர்ப் புராணத்து ஒரு பகுதியான அரசவனப் புராணத்தில் 18 பாடல்கள் மட்டும் காணப்பெறு கின்றன.

## 293. அரிச்சந்திர காவியம் மூலமும் உரையும்

**அ. 466 : 714; ஆ.** *1-312* ஏடுகள்; **இ.** 36.3 x 5 செ.மீ.; **ஈ.** 7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகான தெளிவான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

பரிதிதன் மரபில்வரு பார்த்திபன்
விரிதரும் புகழ்மேவரிச் சந்திரன்
சரித மன்னுந் தமிழுக்குத் துணைசெயக்
கரிமு கன்பதங் கைதொழு தேத்துவாம்

நாட்டுச்சிறப்பு - கலித்துறை

முன்னார் யறிய பிறவிக் குருடான மூடன்
தன்னார் தொடுசா கரத்தினிடம் சாரு மாபோல்
என்னா லறிதக்க தன்று என்னினும் மன்னர்மன்ன
நன்னாட்டு அணியான சிலவல்ல நடத்த லுற்றேன்

### முடிவு

மன்னர் வாழிய மாமறை வாழிய
செந்நெல் மன்னுக செந்தமிழ் ஓங்குக
அன்ன தான அரிச்சந் திரன்கதை
தன்னைக் கேட்பவர் வாழ்வு தழைக்கவே (26)

உத்திரகாண்டம் முற்றும்

### பிற்குறிப்பு

ஆகக் காண்டம் 14க்கு விருத்தம் 1215 எழுதி முடிந்தது. முற்றும். இவை கையொப்பம் ஆதமங்கலம் உபாத்தியாயர் வெங்கடாசலம் படி அக்கிரகாரம் கணக்கு நாகப்பிள்ளை குமாரன் பரசுரானாதிறன் நாகப்பன் வாசிக்கின்ற அரிச்சந்திர காவியம்.

குறிப்புரை

**பாடலும் உரையும் உள்ளன.** 'அரிச்சந்திரபுராணம்' எனும் பெயரில் வெளிவந்துள்ள அச்சு நூல்களுள் பத்து காண்டங்கள் குறிப்பிடப்படுகின்றன. ஆனால் தற்சிறப்புப் பாயிரம், நாட்டுச் சிறப்பு, நகரச்சிறப்பு ஆகிய மூன்றும் காண்டங்களாக இச்சுவடியில் எடுத்துக் கொள்ளப்பட்டுள் ளதால், மொத்தம் 13 காண்டங்கள் ஆகின்றன. இடையே 12 ஆவது காண்டமாகக் காட்சிக் காண்டம் ஒன்று இதில் அமைகின்றது. எனவே 14 காண்டங்களாக நூற்செய்தி அமைகின்றது.

விவாக காண்டம், இந்திர காண்டம், வேட்டஞ்செய் காண்டம், சூழ்வினை காண்டம், நகர் நீங்கிய காண்டம், காசிக்காண்டம், மயான காண்டம், பால காட்சி காண்டம், மீட்சி காண்டம், உத்தர காண்டம் முதலான தலைப்புகள் உள்ளன. முதலில் நூல் தலைப்பு எழுதப்பட்ட சட்ட ஏடு ஒன்றும் இறுதியில் 3 வெற்றேடுகளும் உள்ளன.

நல்லூர் வீரை ஆசுகவிராயர் என்பார் இதனை இயற்றியவர். இந்நூல் இட்டா குப்புசாமி நாயக்கர் திருவேங்கட முதலி ஆகிய இருவரால் சென்னை இயற்றிமிழ் அச்சுக்கூடத்தில் 1869 இல் பதிப்பிக்கப்பட்டுள்ளது. கழகம் 1962, 1976 ஆகிய ஆண்டுகளில் இந்நூலைப் பதிப்பித்துள்ளது.

வாய்மை தவறாத மன்னவனான அரிச்சந்திரனை எவ்வாறேனும் பொய்க்கச் செய்வேன் என விசுவாமித்திரன் சூளுரைத்துக் கொடிய பல துன்பங்களைத் தரலானான். எத்துனை முறை எத்தனைத் துன்பங்கள் தந்தாலும் அரிச்சந்திரன் தன் கொள்கையினின்று விலகவில்லை. ஒரு பக்கம் அரிச்சந்திரனின் மனைவியான சந்திரமதி தன் மகன் லோகி தாசனோடு ஒரு வேதியனிடத்துச் சொல்லொண்ணாத் துயர் அடையவும், புல் அரிந்து வரச் சென்ற லோகிதாசன் அரவம் தீண்டி மரணம் அடையவும், செய்தி கேட்டுச் சந்திரமதி சிந்தை தடுமாறி மகனின் உடலோடு அடக்கம் செய்வதற்காகத் தன் கணவன் பணியாற்றும் சுடுகாட்டிற்கே வரலானாள். உற்ற பணம் தந்தாலன்றிப் பிணத்தை எரிக்க அனுமதி தர முடியாது என அவன் மறுக்க இவள் அவ்விடம் விட்டு அகலாத போது வாள் கொண்டு அவள் கழுத்தை

வெட்டத் துணிய அவன் கண்ணுக்கு மட்டுமே புலப்படும் தன்மையுள்ள மங்கள நாணின் உதவியால் அதனை அணிந்து இருப்பவள் தன் மனைவி சந்திரமதி என அறிந்தும் கடமை தவறா மன்னனாக அவன் விளங்க, இறைவன் எழுந்தருளி அவர்களை வாழ்த்தி, நற்பேறு அமைவதாக இக்கதை விளங்குகிறது.

குசேல உபாக்கியானம், நைடதம் போன்ற நூல்கள் அக்காலத்து மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்தன. இந்நூல் வந்தபின் அவையெல்லாம் கதிரவன் கண்ட நிலவென ஆயிற்று. மகாபாரதத்தில் துணைக் கதைகளாக விளங்கும் சுபத்திரை திருமணம், விராட பருவம், அல்லி அரசாணி மாலை, அருச்சுனன் தபசு, கர்ணன் கதை, துரோபதை சபதம், கடோத் கஜன் வம்பு இது போன்ற கதைகளில் ஒன்றாக அரிச்சந்திரன் கதையும் இடம் பெறுகிறது. இக்கதையைத் தன் அன்னையின் வழியாகக் கேட்டுத் தான் வாழ்நாள் முழுவதும் வாய்மையை மேற்கொள்ள வேண்டும் என்ற கோட்பாட்டை நம் தேசபிதாவான காந்தி அவர்கள் மேற் கொண்டார் என அவரது சத்திய சோதனை நூல் மூலம் அறிய முடிகிறது.

## 294. அரிச்சந்திர புராணம்

**அ. 52:77; ஆ.** *8-178 (114)* ஏடுகள்; **இ.** 35 x 2.5 செ.மீ.; **ஈ. 5-***6* வரிகள்; **உ.** நன்று; முதலில் இடையில் இறுதியில் ஏடுகள் பல இல்லை; **30**க்கும் மேற்பட்ட ஏடுகளில் ஏட்டெண்களை அறிய முடியவில்லை; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

**தொடக்கம்**

நகரப்படலம்

மகரத் தோரண வாயிலும் நாஞ்சிலுஞ்
சிகர மாமதி லும்செறி போர்களுஞ்
சகர வன்புகழ் சாற்றும் அயோத்திமா
நகர வன்மை சிறிது நத்துவாம் (1)

முடிவு

கண்டனள் தீமெனக் கருத்துள் வேற்றுக்
கடவுளர்தம் காதலிற்றன் மகனை வைத்து
பண்டுவெந்து கரிந்தகுறைக் கட்டை யெல்லாம்
பலதிசையும் விரைந்தோடி பார்த்தெ டுத்துக்
கொண்டுவந்து பிணங்கள்சுடும் சுடலை நண்ணி
கொள்ளியெடுத் தோடிஅழல் கூட்டி மூட்டி
மண்டுதழற் கட்டையின்மேல் மகனை வைத்தாள்
வளந்தெரியும் தணல்விளக்கை மன்னன் கண்டான்

குறிப்புரை

நாட்டுப்படலத்தின் ஈற்றுப்பாடலை உடைய ஓர் ஏடு முதலில் உள்ளது. அடுத்து நகரப்படலம், அரசியற்கைப் படலம் என்பன தொடங்கி வஞ்சனைக் காண்டம், சூழ் வினைக்காண்டம், நகர்நீங்கு காண்டம், இந்திர காண்டம் என்பன காணப்படுகின்றன. இறுதியில் தன் மகனைச் சுடலை யில் வளர்த்துகின்ற 36 ஆவது பாடல் முடிய மட்டுமே காணப்படு கின்றது. அடுத்துக் 'காசிக்காண்டம் முற்றும்' எனும் உடைந்த ஏடு ஒன்று இறுதியில் உள்ளது. ஒவ்வொரு காண்டத்தி லுள்ள பாடல்களும் வரிசை எண்ணைப் பெற்றுள்ளன. காண்ட இறுதியில் தொட ரெண்ணும் சுட்டப்பெறுகின்றது.

## 295. அரிச்சந்திர புராணம்

**அ.** **154:334; ஆ.** *1-139* ஏடுகள்; **இ.** 32 x 3 செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நல்லநிலை; சில ஏடுகள் இல்லை; **ஊ.** அழகான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பெரும்புகழ் பெறும்படி அருந்துயர் கெடும்படி
பிரியம் பலவரும் படியுளம்
விரும்பிய தனம்பெற மிகுபெறு பதம்பெற
விளங்கி யதவஞ் செயநெடுங்
கரும்பவல் பெரும்பய றருங்கனி ரசங்கொடு
கவர்ந்தெனிடம் வந்தருள்செய

இருங்கரி முகன்சிறு சதங்கையொடு கிண்கிணி
இலங்கிய பதம்பெறுவனே (1)

முடிவு

விடுகின்ற கொடும்படை யத்தனையும் விறல்கொண் டுயர்தண்டம்
விளங்கிடவே
அடுகின்ற வெமக்கரி தாமெனவே யமரால மகவாசை யடர்ந்துறவே
தடுகின்ற மனத்துடனூ ரணுகித்துற வோர்வலியோ ரிறையோ ரிலெனக்
கொடுவெந் தொளிநாடு துறந்தகலக் குணபாலணுகித்தல
முற்றனனே (16)

குறிப்புரை

கடவுள் வணக்கத்தை அடுத்து நாட்டுச் சிறப்பு, நகர் சிறப்பு காண்டம், கலியாண காண்டம், வஞ்சினைக் காண்டம், மிருக வேட்டை காண்டம், சூள்வினை காண்டம், நகர் நீங்கு காண்டம், மயான காண்டம், காசிக் காண்டம், காட்சிக் காண்டம், மீட்சி காண்டம் முதலான காண்டங்கள் முறையாக உள்ளன. இறுதிக் காண்டமாகிய உத்தர காண்டத்தில் 16 ஆவது பாட்டுடன் சுவடி முடிகின்றது. ஆனால் நூலின் முடிவுச் செய்திகள் ஏதும் குறிக்கப் பெறவில்லை. தொடர்ந்து பல ஏடுகள் இருந்திருக்க வேண்டும். அச்சுநூலுடன் சிற்சில இடங்களில் வேறுபடுகிறது. முதலில் 3 வெற்றேடுகள் உள்ளன.

## 296. அருணாசலபுராணம்

**அ.** **71:142;** **ஆ.** *1-93* ஏடுகள்; **இ.** 33 x 2.5 செ.மீ.; **ஈ.** *6* வரிகள்; **உ.** *1-16* ஏடுகள் சிதைவும் முறிவும் பெற்றுள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

இந்திரநீ லச்சிலையால் இசைகடந்தத் தெரியாமல்
எழுதிச் சேர்த்து
மந்திரமா மென்வயிரத் தூணிறுத்தி வச்சிரத்தால்
மாணிக்க மதலைகூட்டிச்

செந்துகிரால் போதிகையு மரகதத்தால் உத்திரமும்
செறிது மீதே
சந்திரகாந் தத்தகடு பரப்பியமண் டபமுளதற்
சயில மீதில் (4)

என்பது........ என்றவாறு

(எ.து) அப்படி வீரதீர சுவாமி ரதத்திலே ஏறிக்கொண்டபோது சில பூதங்கள் ஆனையின் சொரூபமானது. சில பூதங்கள் ரதங்களானது. சில பூதங்கள் குதிரையானது. மாலை பாடு கொண்டு சில பூதகணங்கள் மனிதர் போலவும் தேவர்கள் போலவும் ஆனது. பேயின் கூட்டங்களும் அந்தப்பூதக் கணங்களைப் போல அளவில்லாத வேஷம் கொண்டது (எ.று.)

## குறிப்புரை

பாயிரப் பகுதிப் பாடல்களின் ஏடுகள் முறிந்துள்ளன. அடுத்துள்ள திருஅருண மாநகர்ச்சருக்கம் நான்காவது பாடல் முதல் முழுமையாக உள்ளது. இந்நான்காவது பாடலே தொடக்கப் பாடலாகக் கொடுக்கப்பட்டுள்ளது. அடுத்துத் திருமலைச்சருக்கம் முழுமையாக உள்ளது. திருஅவதாரச் சருக்கத்தின் முதல் பன்னிரெண்டு பாடல்கள் மட்டுமே உள்ளன. அனைத்துப் பாடல்களுக்கும் பொழிப்புரை போன்ற உரை காணப்படுகிறது.

அருணாசல புராணத்தின் ஆசிரியர் சைவ எல்லப்ப நாவலர் என்பார் ஆவார். இவர் 16 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர். திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானின் அருட் செயல்கள் பற்றி இறை மனமும் இயற்கை நலனும் ஒருங்கே இணையப்பெற்ற இத்திருத்தலம் சைவ சமயத்தாருக்கு எவ்வாறெல்லாம் சிறப்புடைத்து என்பதையும், வேதாகமங்கள் சிவபிரானைப் போற்றித் துதிக்கும் முறைமைகள் பற்றியும் வல்லாள மகராசன் போன்ற மன்னர்களைப் பற்றிய செய்திகளைப் பற்றியும் இந்நூல் விளக்கிக் கூறுகிறது.

பஞ்சதலம் என்று போற்றப்படுகின்ற தலங்களில் இது நெருப்புக்குரிய தலமாகும். மண்ணுக்குத் திரு ஆரூர்,

விண்ணுக்குச் சிதம்பரம், காற்றுக்குத் திருக்காளத்தி, புனலுக்குத் திரு ஆணைக்கா ஆகியன பிறவற்றின் தலங்களாக விளங்குகின்றன. இத்தலத்தில்தான் மணிவாசகர் திருவாசகப் பதிகங்களில் பெரும்பாலானவற்றைப் பாடியுள்ளார். அவற்றுள் சில: 1. திருவெம்பாவை, 2. திருத்தெள்ளேனம், 3. திருப்பொன்னூசல்.

சோழ நாட்டுக் காவேரிப் பூம்பட்டினத்துக்கு அருகே உள்ள ஐராத நல்லூர் இவ்வாசிரியரின் ஊராகும். ஆனால் அபிதான சிந்தாமணி யாழ்ப்பாணத்து நல்லூர்க்காரர் எனச் சுட்டுகிறது. சைவ என்ற தலைச்சொல் தல புராணத்தில் சைவ சமயம் தொடர்பாக எழுந்த முதல் தல புராணம் என்பதால் இவ்வாசிரியருக்குச் சைவ என்ற அடை கொடுத்துப் போற்றப்படுகிறது.

தேவாரத் தல வரலாற்றில் திருவண்ணாமலை நடு நாட்டைச் சார்ந்ததாகக் குறிக்கப்பெற்றுள்ளது. இத்தலத்தை ஞானசம்பந்தர், நாவுக்கரசர் ஆகிய தேவார முதலிகளில் இருவரும் மாணிக்கவாசகரைச் சேர்த்துச் சொல்லப்பெறும் சமயக் குரவர் மூவரும் பாடியுள்ளனர். அருணாசல புராணத்தில் சமகாலத்து நூலாக எழுந்தது மறைஞான சம்பந்தர் அருளிச் செய்த அருணகிரிப் புராணம் என்பதும் ஒன்று. இந்த அருணகிரிநாத புராணத்துக்கு மாறுபட்டது புராணத் திருமலை நாதர் செய்த அருணகிரி புராணம் ஆகும்.

திருவண்ணாமலையை அருணாச்சலம், சோண சைலம் என்ற பெயர்களிலும் அழைப்பர். ரமணாசிரமத்தைத் தொடக்கிய ரமணர் நாம் வாழும் காலத்தில் அண்ணா மலையார் மீது அன்பு கொண்டு, சித்தராக இயங்கி அங்கேயே சீவன் முத்தி அடைந்தார் என்பது குறிப்பிடத் தக்கது.

கார்த்திகைப் பெருநாளன்று பொதுவாக முருகன் தலங்களில் சொக்கப்பன் என்ற பெயரில் எரியூட்டி மகிழ்வர். சிவ தலத்தில் திருவண்ணாமலையில் இறைவன் நெருப்பாகக் கருதப்படுவதால் திரு விளக்கேற்றுதல் என்ற பெயரில் இறை நேயர்கள் மாலை நேரத்தில் ஒன்று கூடி விளக்கேற்றி இறைவனை வழிபடுதலை இன்றும் காணலாம்.

செவ்வந்தி புராணம், திருவெண் காட்டு புராணம், திருவருணைக் கலம்பகம் ஆகிய நூல்களையும் இந் நூலாசிரியர் எழுதியுள்ளார். இந்நூலை வடிவேலு முதலியார், சென்னை வித்யாரத்னாகர அச்சுக் கூடத்தில் 1904 இல் பதிப்பித்துள்ளார்.

இப்புராணத்தைப் பற்றிய தொன்மக் கதை ஒன்று உண்டு. பிரம்மாவும் விஷ்ணுவும் தம்மில் யார் உயர்ந்தவர் என்ற கருத்து வேறுபாட்டுடன் சிவபிரானை அணுகினர். சிவபிரான் அவர்களிடம் யார் அவருடைய அடி முடிகளைக் காண வல்லாரோ அவரே சிறப்புற்றவராவர் என விளம்பினார். அவ்வகையில் நான்முகன் அன்னமாகவும், திருமால் வராகமாகவும் உருவெடுத்து அடிமுடி காணத் தலைப்பட்டனர். இறைவனோ ஊழித் தீயாக நீண்ட நெடும்பிழம்பாக விளங்கினார். அவ்விருவரும் அவரது அடிமுடி காண இயலாது போயினர். அப்பொழுது அங்கு எழுந்தருளிய தேவர்கள் அனைவரும், இறைவனை ஓர் இலிங்க வடிவமாக அவ்விடத்திலேயே எழுந்தருளி மக்களுக்கு அருள் பாலிக்க வேண்டினர். அன்று முதல் அவ்வகையில் இறைவன் அங்கு எழுந்தருளியுள்ளார். இம்மலையைத் தொலைவில் இருந்து நோக்கினால் ஓர் இலிங்கம் அமர்ந்திருப்பது போல இன்றும் காட்சி தரும்.

## 297. அருணாசல புராணம்

**அ.** 280:502; **ஆ.** *1-243* ஏடுகள்; **இ.** 34 x 3 5 செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; இடையில் *159* முதல் *195* வரையுள்ள ஏடுகளில் *36* ஏடுகள் இல்லை; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை. **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

மிக்க வேத வியாசர் விளம்பிய
விக்க தைக்கியை பின்றருள் செய்திட
முக்கண் வெற்பினை மும்மத வாரியைக்
கைக்க ளிற்றினைக் கைதொழு தேத்துவாம்

முதிருஞ்சுவை மதுரம்பெற
 மொழியுந்தமிழ் விரகன்புகழ்
பதிகம்புனை பவனம்பினர்
 பவபஞ்சன னமலன்கதி
ருதிரும்படி பகிரண்டமு
 முடையும்படி யிலகும்படி
யதிரும்படி நடனம்புரி
 யதிருங்கழ லதிருங்கழலே

## முடிவு

இந்த அருணாசல புராணக் கதையைப் படித்த பேருங், கேட்டபேரும், எழுதின பேரும், எழுதிவைத்த பேரும் மைக் கடலாகிய சமுத்திரமுஞ் சூழ்ந்த பூலோக முழுவதும் ஒருகுடைக்கீழ் சந்தான சவுபாக்கியமும் பெருகும்படிக்கு வாழ்ந்திருந்து பின்பு திக்காகி ரெட்சிக்கப்பட்ட அருணா சலயீசு பரனுட அன்பினாலே சிவபதவி பெருவார்களென்ற வாறு *(8)*.

புளகாதிபச் சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் பதிமூன்றுக் குங்கூடிய திருவிருத்தம் 585.

## குறிப்புரை

சருக்கம் *13*. விருத்தம் *588*. முதலிலுள்ள சட்ட ஏட்டில் நூல் தலைப்பும், அடுத்த ஏட்டில் 'எடுத்தவர் பார்த்துப் படித்துக் கொடுக்க வேண்டியது' என்ற குறிப்பும் உள்ளன. அடுத்த இரண்டு ஏடுகளில் ஏடு எழுதிய, எழுதத் தொடங்கின விபரமும், கடவுள் வணக்கமும் உள்ளன.

## 298. அருணாசல புராணம்

**அ.** 281:503; **ஆ.** *1-336*; **இ.** *35X2.9* செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

முற்குறிப்பு

படியக்கிரார் மகனுக்குச் சிரஞ்சீவி விருத்தாசலப் பிள்ளை மன மகிழ்ச்சியாகப் படிக்கப்பட்ட அருணாசல புராணம் என்று அறிய வேண்டியது.

விக்கிரம வருஷம் வையாசி மாதம் 2ஆம் தேதி திங்கட் கிழமை, சோமவாரம், பிரதமை திதி, உத்திர நட்சத்திரம், அமிர்தயோகம் இந்தச் சுபதினத்தில் எழுத ஆரம்பம் செயிதது.

சிரஞ்சீவி நாகப்பிள்ளை மனமகிழ்ச்சியாக வாசிக்கப் பட்ட அருணாசல புராணம்.

தொடக்கம்

அருணா சலதுதி புகுணமுதே
சரணாகம வென்றது சாத்திடவே
மருணா சமதாக்கிய வாக்குதவும்
கருணா முதஞான கழற்றொழுவாம்.

மிக்க வேத வியாசர் விளம்பிய
விக்க தைக்கியை பின்றருள் செய்திட
முக்கண் வெற்பிளை மும்மத வாரியைக்
கைக்க ளிற்றினைக் கைதொழுது தேத்துவாம்

பாயிரச்சருக்கம்

முதிருஞ்சுவை மதுரம்பெற
மொழியுந்தமிழ் விரகன்புகழ்
பதிகம்புனை பவனம்பினர்
பவபஞ்சன மைலன்கதி
ருதிரும்படி பகிரண்டமு
முடையும்படி யிலகும்படி
யதிரும்படி நடனம்புரி
யதிருங்கழ லதிருங்கழலே

முடிவு

இந்த அருணாசல புராணத்தின் கதையைப் படித்தபேரும் கேட்ட பேரும் எழுதின பேரும் அந்தக் கதையை எழுதி

வைத்த பேரும் மைக்கடலாகிய சமுத்திரஞ் சூழ்ந்த பூலோக முழுதும் ஒரு குடைக்கீழாய் அரசாட்சியாண்டு, சந்தான முதலான சவுபாக்கியமும் அமையும்படி வாழ்ந்திருந்து பின்பு திக்காகி ரட்சிக்கப்பட்ட அருணாசல யீசுபரனுட அன்பினாலே சிவபதவி பெற்று வாழ்ந்திருப்பார்களென்ற வாறு (8). புளகாதிபச் சருக்கம் முற்றிற்று.

### பிற்குறிப்பு

சித்திரபானு வருஷம் ஆவணி மாதம் **15**–ம் தேதி மங்கள வாரம் பிரதமை திதியும் உத்திரட்டாதி நட்சத்திரமுங் கூடிய அமுர்த சித்தி யோகத்தில் சுபமுகூர்த்த தினத்தில் அருணாசல புராணம் எழுதி நிறைவேறியது. இந்தச் சுவடி சிறியோர்கள் எழுதினதைப் பெரியோர்களாயிருக்கப் பட்டவர்கள் அதை அவிழ்த்துப் பார்த்துப் படிக்கும் வேளையில் ஓர் அட்சரம் விட்டிருந்தாலும், தப்புப் பிழைகளிருந்தாலும் அதை மன்னித்துப் பொறுக்க வேண்டியது. இவை எழுத்து கணக்கு கந்தசாமிப் பிள்ளை கை எழுத்து.

### குறிப்புரை

இந்நூல் 280:502 என்ற எண்ணில் உள்ள நூல் போன்றதே. ஆயினும் உரை விரிவாகவும், கூறும்முறை வேறுபட்டும் உள்ளன. இந்நான்கு ஏடுகளை அடுத்து ஏட்டு எண் ஒன்றிலிருந்து நூல் தொடங்குகின்றது. நூல் எழுதி முடித்த காலம், சிவன் பேரில் விருத்தம், மத்தியமாவதிசாகம், சரணங்கள், தில்லை நடேச மூர்த்தி சுவாமி பேரில் கீர்த்தனை, சிதம்பர சுவாமிபேரில் கீர்த்தனை முதலியன நூல் முடிந்தபின் இறுதியில் இடம் பெறுகின்றன.

## 299. அருணாசல புராணம்

**அ. 478:727; ஆ.** 240 ஏடுகள், **இ.** 42X3 செ.மீ.; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** சிதைவு; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஒரு மானைக் கரத்தினில்வைத் தொருமானைச்
சிரத்தினில்வைத் துலக மேழுந்
தருமானை யிடத்தினில்வைத் தருள்வானைப்
பவளநெடுஞ் சயிலம் போல
வருமானை முகத்தானை யளித்தானைப்
பெருமானை மகிழ வெறும்
பெருமானை யருணகிரிப் பெம்மானை
யடிபணிந்து பிறவி தீர்ப்போம். (8)

முடிவு

இக்கதை படித்தோர் கேட்டோ
ரெழுதினோ ரெழுதி வைத்தோர்
மைக்கடல் சூழ்ந்த விந்த
வையக முழுதுங் காத்துத்
தக்கசந் தான போக
சவுக்கியந் தழைய வாழ்ந்து
தீக்கரு ணேச ரன்பாற்
சிவபதம் பெறுவர் தாமே

குறிப்புரை

ஏட்டு எண் மூன்றில் எட்டாவது பாடல் தொடங்கி வாழ்த்துப் பாடல் முடிய முழுமையாக உரையுடன் உள்ளது. அச்சு நூலினும் பல பாடவேறுபாடுகள் காணப்படுகின்றன.

## 300. இருஷிவந்திய புராணம்

**அ.** **145:321;** **ஆ.** *1-125* ஏடுகள்; **இ.** *34.5X2.5* செ.மீ.; **ஈ.** 5 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

ஆய்ந்த பல்பொரு ளாயின மல்குவான்
வாய்ந்த நன்முனி விந்தை விளம்பதி
வேய்ந்த னெந்தைபொன் வேய்ந்த வினாயகன்
பூந்து ணைப்பதம் போற்றி யிறைஞ்சுவாம்

பூமலி குழன்மா வாணி புலேமிசை முதலோர் கண்டத்
தேமபங் கலநாண் மாறா திலங்கவன் கடுவ யின்ற
காமரு கயிலை யாளி கருணைவா ருதிமின் பாகன்
தாமரை யனைய பொற்றா டலைமிசை யிருத்தி வாழ்வாய் (1)

முடிவு

வான்முகில் பெய்க நல்வளம் பொருந்துக
நான்மறை யோங்குக நன்னகை தேங்குக
பான்மதி முடித்தவன் பாதம் போற்றிசெய்
மேன்மைதோ ளடியவர் மிகுந்து வாழ்கவே(37)

*இராமர் பூசித்தச் சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் 12 க்குத் திருவிருத்தம் 622.*

குறிப்புரை

முதலில் நான்கு வெற்றேடுகள் உள்ளன. முதல் ஏட்டில் ஒரு காப்புப் பாடல் உள்ளது. அடுத்த ஏட்டில் 'ரிஷிவந்திய புராணச் சுருக்கம்' என்ற தலைப்பில், தலச் சருக்கம், இராமர் சருக்கம், ஆதிவராகச் சருக்கம், பிரம்ம சருக்கம், இந்திர சருக்கம், அர்த்தனாரீசுவர சருக்கம், கலியாண சருக்கம், மணக்கோலங் காட்டிய சருக்கம், புரவரச்சருக்கம், புரூருவச் சருக்கம், தீர்த்தச் சருக்கம், இராமர் பூசித்த சருக்கம் ஆகச் சருக்கம் 12க்குத், திருவிருத்தம் 622 எனப்பொருளடக்கம் தரப்பட்டுள்ளது.

இந்நூல் சிவபெருமானின் கருணைத் திறத்தையும், இருடிகள் இறைவனைப் பூசித்து இறைப்பேரு பெற்ற செய்தியையும், சந்திரன், இந்திரன் போன்றோர் பாவவி மோச்சனம் பெற்ற செய்திகளையும் எடுத்தியம்புகிறது. ரிஷிவந்தியம் என்ற இத்திருத்தலம் தென்னாற்காடு மாவட்டம் கள்ளக் குறிச்சி தாலூக்காவில் திருக்கோவிலூருக் கும், கள்ளக் குறிச்சிக்கும் இடையே ஆன நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது. சுயம்புலிங்க மூர்த்தி என்ற பெயரில் இறைவனும், முத்தாம்பிகை என்ற பெயரில் அம்பாளும் எழுந்தருளியுள்ளனர். இக்கோவிலின் இராசகோபுரம் சிவ கணகோபுரம் என அழைக்கப் பெறுகிறது. இச்சிவகண கோபுரத்தின் தென்பாகத்தின் உட்பகுதியில் முனீஸ்வரர்

காட்சி அளிக்கிறார். பிரதி செவ்வாய், வெள்ளி நாட்களில் வடமாலை சாத்தி அபிடேகம் செய்தால் குழந்தைகளுக்கு ஏற்படும் தோடம் முதலான பலவித வியாதிகள் நீங்கும் என்ற நம்பிக்கை மக்களிடையே இன்றும் உள்ளது. அபிடேகம், வடமாலை சாத்தல் போன்றவை இம்மேற்குப்பார்த்திருக்கும் முனிஸ்வரருக்கு அருகே உள்ள விநாயகருக்கு நடத்தப் பெற்ற பிறகே முனிஸ்வரருக்கு நடைபெறும்.

இத்தலம் பஞ்சதீர்த்தங்களைக் கொண்டது. அவையாவன: அக்கினித் தீர்த்தம், சங்கர தீர்த்தம், அகத்திய தீர்த்தம், இந்திர தீர்த்தம், ஞான போக புஷ்கரணி. அக்கினித் தீர்த்தத்தில் சூரிய பகவான் தனக்கு ஏற்பட்ட ஒரு சாபத்தைத் தீர்த்துக் கொள்ள நீராடினதால் இத்தீர்த்தத்தில் தொன்று தொட்டுப் பெண்கள் நீராடுவதில்லை என்பது குறிப்பிடத் தக்கது. ஞானபோகபுஷ்கரணித் தீர்த்தக் குளம் ஐயாயிரம் வண்டி கற்களைக் கொண்டு கட்டப்பட்டதாலும், ஐயாயிரம் சதுரக் குழிப் பரப்புக் கொண்டதாலும் இதற்கு ஐயாயிரம் குளம் என்றும் பெயர் உண்டு. இத்தீர்த்தத்தில் இராமபிரான் நீராடி எழுந்து கீழ்த்திசை நோக்கும் போது லிங்க சோதியைக் கண்டு ஞானம் பெற்றதால் இதற்கு ஞானபுஷ்கரணி என்ற பெயர் ஏற்பட்டது. இத்தலம் ரிசிவனம், இருடிவனம், முனீஸ்வரர் கோவில், இராஜநாராயணப் பட்டினம் போன்ற பெயர்களால் இன்றும் அழைக்கப் பெறுகின்றது.

## 301. ஏகாதசிபுராணம்

**அ.** 451; 698; **ஆ.** *122* ஏடுகள்; **இ.** *33X2.5* செ.மீ.; **ஈ.** 5-7 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை, இறுதிப் பகுதியில் சில ஏடுகள் பாதியாக முறிந்துள்ளன; ஏடுகளில் துளைகள் உள்ளன; **ஊ.** படிக்கக்கூடிய எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

**தொடக்கம்**

அரிதின மாகும் வேதத்து
  அமர்ந்திடும் விண்ணோர் மண்ணோர்
புரிரத மாகும் ....
  ..... புராணம் தன்னை

விரிதமி ழாலே நாயேன்
விளங்கவே நடையாய்ச் சொல்ல
... கழிறே யுந்தன்
கழலினைக் காப்ப தாமே.

ஸ்ரீ வேத வியாசருடைய பாத பத்மங்களுக்கு அனேக நமஸ்காரங்கள் பண்ணி ஸ்ரீ பரமபாகவதாளுடைய அனுக் கிரகத்தினாலே அரிதினமாகிய ஏகாதசி விரத மகிமையை, வட மொழியாக இருக்கிறதைத் தமிழ் வசனத்தினாலே எழுது கிறோம். இந்தப் புராணக்கதைக்கு ஒரு விக்கினங்களும் வாராமல் ரட்சிக்கச் சொல்லி விக்கினேஸ்வர மூர்த்திக்கு நமஸ்காரம் பண்ணி....

முடிவு

புத்திர காமேட்டி யாகம் பண்ணி, புத்திரனைப் பெறுவார்கள். அப்படியென்றால் ... கலைக்கோட்டு முனியை வரவ ழைத்துப் புத்திர காமேட்டி யாகம் பண்ணி, புத்திரனைப் பெற்றார்கள்... காமதேனுவைப் பூசித்து அசுவமேதயாகம் பண்ணிப் புத்திரனைப் பெற்றான். இராசாவானவன் பல தேவதையாள் ஆராதனைப் பண்ணி புத்திரனைப் பெற்றான்.

குறிப்புரை

அரிதினமாகிய ஏகாதசி விரத மகிமையின் சிறப்புகளைக் கூறும் புராணமாக அமைவது ஆதலின் இது ஏகாதசிப் புராணம் எனும் பெயர் பெற்றிருக்கிறது. தொடக்க ஏட்டின் இடதுபக்க ஓரத்தில் சுப்பம் செட்டி ஏடு என்ற குறிப்பு காணப்படுகிறது. இறுதி ஏட்டில் இந்நூலால் பெறும் பயன் கூறப்பட்டுள்ளது. அது முழுமையாக இல்லை. வடமொழியி லிருந்த இந்நூல் தமிழில் பெயர்த்து எழுதப்பட்டுள்ளதாக நூலிலுள்ள தொடக்கக் குறிப்பின்விழி அறியமுடிகின்றது. பாடலுக்கு உரை தரப்பட்டுள்ளது.

## 302. கந்தபுராணச் சுருக்கம் மூலமும் உரையும்

**அ.** 43:67; **ஆ.** *1-56* ஏடுகள். **இ.** *34X2.5.* செ.மீ.; **ஈ.** *4* வரிகள்; **உ.** பிற்பகுதியிலுள்ள ஏடுகள் சற்று முறிந்துள்ளன; **ஊ.** அழகான தெளிவான எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

## தொடக்கம்

### விநாயகர் காப்பு-வெண்பா

திங்களணி செஞ்சடிலத் தேவளித்த வாறுமுகத்
தெங்களம லன்காதை யேத்துதற்குத் - துங்கமுடன்
அந்திபக லென்றனிடத் தஞ்சலென வந்தருளுந்
தந்திமுகன் செங்கமலத் தாள் (1)

## நூல்

என்னவே முறையிட் டேத்து மிமையவர் தம்மை நோக்கி
யுன்னருந் துயர முங்கட் குற்றதென் னுரைமி னென்னா
மின்னமிர் சடையான் கேட்ப வெய்யசூர் விளைத்த வெல்லாஞ்
சொன்னபோ தஞ்ச லீர்நுந் துயரகற் றிடுவோ மென்றே
இதன்பொருள் ...... என்றவாறு. (4)

## முடிவு

கேட்ட வவுணன் சரமழையாற் கிளரும் வீரர் பூதரெலா
மோட்ட மெடுக்கப் புரிந்ததுகண் குருத்து வாகு வாட்படை
கோட்ட முறுமங் கவன்சிலையைக் கூறு படுத்த வுரத்தறைத்து
மீட்டுங் ககன மிசையெறிந்தான் விழுந்தான் மூர்ச்சை
கொடுமண்மேல்

## குறிப்புரை

தேவர்கள் சூரபதுமனால் தங்களுக்கு ஏற்பட்ட இன்னல் களைச் சிவபெருமானிடம் முறையிட்டது முதலாகத் தொடங்கி, வீரவாகு முதலான சகோதரர்கள் உடன் இருக்க முருகப்பெருமான் கயிலையில் வீற்றிருத்தல், நாரதர் செய்த யாகத்தில் வந்த ஆட்டுக்கிடாய் உலகை அழிக்க முருகப் பெருமான் அதன் மீது ஏறி அதனை அடக்குதல், சூரபதுமன் முதலான அசுரரை அழிக்குமாறு பல ஆயுதங் களைக் கொடுத்து ஏவ, அதன்படி முருகப்பெருமான் பலவகைச் சேனைகளோடு சூரபதுமன் மீது போருக்குச் செல்லுதல், போரில் தாருகாசூரன், சிங்கமுகாசூரன் முதலான அரக்கர்களை அழித்தல், இறுதியாகச் சூரபதுமனோடு போரிடுதல் முதலானவற்றின் சுருக்கமான செய்திகளடங்கிய 114 பாடல்கள் உள்ளன. 108-ஆவது பாடல்களுக்குப் பிறகுள்ள பாடல்களின் ஏடுகள் முறிந்துள்ளன.

இதனை இயற்றியவர் கச்சியப்ப சிவாச்சாரியார். இவரது காலம் 12–ஆம் நூற்றாண்டு. கார்த்திகேயன் என்று புகழப்படும் முருகப் பெருமானின் தோற்றம், வளர்ச்சி, அருட்செயல்கள் போன்றவற்றை எடுத்துக் கூறும் நூல் ஆகும். சூரனை வதைத்த நிகழ்ச்சியும், வள்ளி தெய்வா னையர் திருமணச் சிறப்பும், முருகன் தமிழ்க்கடவுளான முறைமையும் இந்நூலில் கூறப்பெறுகிறது.

வடமொழியில் அமைந்த சங்கர சங்கிதை ஆகிய ஸ்காந்தபுராணத்தின் சிவரகசியக் காண்டம் என்ற பகுதியே கந்தபுராணமாக மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளது. இந்நூலின் தொடக்கப் பாடலான 'திகடச் சக்கரம்' என்ற பாடலை முருகப்பிரான் அசீரிரியாக வழங்கியதாகக் கூறுவர். இது போன்ற செய்திகள் தமிழில் பல உண்டு. சுந்தரருக்குப் 'பித்தா' என்ற சொல்லையும், சேக்கிழாருக்கு 'உலகம்' என்ற சொல்லையும், கம்பனுக்கு 'உலகம் யாவையும்' என்ற சொல்லையும், அருணகிரிநாதருக்கு 'முத்தைத் தரு பத்தி' என்ற சொல்லையும் தந்தமை அவற்றுள் சிலவாகின்றன.

யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர், சென்னை, சிவப்பிரகாச அச்சு இயந்திர சாலையில் 1883–இல் இந்நூலை வெளியிட்டுள்ளார். காசி வாசி திருப்பனந்தாள் மடம் இந்நூலை 1972–இல் வெளியிட்டுள்ளது.

கந்தபுராணத்தை அடிப்படையாகக் கொண்டு கந்தனுக்கு எழுந்த சில நூல்கள்: 1. கவிகுஞ்சரபாரதி இயற்றிய கந்த புராணக் கீர்த்தனை, 2. நெல்லை அப்பாசாமி உடையார் இயற்றிய கந்த புராண சங்கிரகம், 3. முத்துக்குமாரதாசர் இயற்றிய கந்தபுராணச் சதகம், 4. தங்கவேலுச் சாமித் தேவர் இயற்றிய கந்தபுராணச் சருக்க வசனம், 5. சண்முகம் பிள்ளை என்பார் இயற்றிய கந்த புராண வசனம்.

## 303. கந்த புராணம்

**அ.** 388:631; **ஆ.** 15 ஏடுகள்; **இ.** 35.5 x 3.5 செ.மீ; **ஈ.** 7 வரிகள்; **உ.** நன்று; ஓரப்பகுதிகள் இலேசாக உடைந்துள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

மகா ரகசியம் அயிசுவரியத்தைக் கொடுத்துச் சகல ஆபத்தை யும் போக்கி வைக்கிற இந்த உச்சவ கதையை யேவான் கேட்குறாளோ யேவாள் செய்து வைக்குறார்களோ அவாள் புண்ணியங் கீர்த்தி அயிசுவரியம், ஆரோக்கியஞ்சுபம் இது களையடைவார்கள் என்றவாறு. இது கந்த புராணத்தில் சண்பகாடவி மகாமியத்தில் சொல்லியிருக்குற தேவேந்திரன் செய்த மிறுகசாரெச்சவம் எம்பத்தினாலமத்தியாயம்.

### முடிவு

...மாகாந்த தினத்தில் வாசிச்சால் உங்கள் பாவங்கள் நசித்துப் பொழிதற்குச் சமுசயமில்லை யென்று மிப்படிச் சொன்ன வார்த்தையைக் கேட்டுச் சகல தீர்த்தங்களும் செண்பகாரணி யத்திலே போய்ப் புரட்டாசி மாசாந்த... தினத்திலச் சகல தீர்த்தங்களும் சூரிய தீர்த்தத்திலே வசிச்சுக் கொண்டிருக்குது. ஆகையினாலே இந்தச் சூரிய தீர்த்தத்திலே ஸ்தானம் தானம் பண்ணும் தீர்த்தப் பிரதெஷ்சணஞ் செய்யுறது சகல பாபத்தையும் போக்கி வைத்து மோட்சத்தைக் கொடுக்குற துக்குச் சமுசயமில்லையே. ரோகிணி அன்மையத் தினத்திலே போய்ஸ்தானம் பண்ணினியானால் சகலமான பாபத்தை எல்லாம் போக்கி வைக்கும். இது ரகசியம். பாவனத்துக் கெல்லாம் பாவனமாயிருக்கப் பட்டது...

### குறிப்புரை

தொடக்கத்திலுள்ள ஐந்து ஏடுகளுக்கு எண்கள் இல்லை. பின் 251 முதல் 258 வரை ஏட்டெண்கள் தொடர்ச்சியாகவுள்ளன. பின் 261, 274, 181 என்ற ஏட்டெண்கள் உள்ளன. ஐம்பதாவது ‘விறும தாண்ட புராணத்தில்’ நாகராசாக் கதை என்ற உட்தலைப்பு உள்ளது.

## 304. காசிக் காண்டம்

**அ.** 110:214; **ஆ.** *1-119* ஏடுகள்; **இ.** *32.5X3.5.* செ.மீ; **ஈ.** 6-7 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; சில ஏடுகள் சிதைந் துள்ளன; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

## தொடக்கம்

சீர்பூத்த சேதாங்கத் தீம்புனல்மந் தாகினிதண் டேனார் கொன்றைத்
தார்பூத்த செஞ்சடையில் அணிந்துமதன் மேல்விழைவு தணியா னாகிக்
கார்பூத்த விருவிசும்பிற் கங்கை நதிசூழ்கிடந்த காசி வாழும்
பேர்பூத்த தனிமுதலி னிணையடிப்பூங் கமல மலரேத்து வாமே (1)

## முடிவு

யிருளைவகிர்ந்து முடித்தகுழ லிமையாக் கருங்கண் முலைப்பேதை
குருதிவடி வேலிறை யளித்த கோதில்காசிப் படமதனை
முருகுவிரி காந்தளங்கை முகிழ்த்து வாங்கி முகமலர்ந்து
தெருளி நோக்கி விழிபனிப்ப சிந்தைகளிப்பதும் தெளிந்தால் (51)

## குறிப்புரை

முதல் மூன்று ஏடுகளில் பாயிரமும் தெய்வ வணக்கமும் இடம்பெறுகின்றன. அடுத்துப் பின்வரும் 33 அத்தியாயங்கள் உள்ளன.

| அத்தியாய எண் | அத்தியாயம் |
|---|---|
| 1. | விந்தவரையை நாரதர் கண்ட அத்தியாயம் |
| 2. | தேவர்கள் பிரமலோகம் அடைந்து வந்த அத்தியாயம் |
| 3. | தேவர்கள் ஆசிரமத்துக் கதிவந்த அத்தியாயம் |
| 4. | அகஸ்தியர் விந்தவரை அடைந்த அத்தியாயம் |
| 5. | கற்பியல்பு கூறிய அத்தியாயம் |
| 6. | தீர்த்த மகிழ்மை உணர்த்திய அத்தியாயம் |
| 7. | சிவன் மரபின் சரிதம் சத்தபுரியின் சிறப்பு ரைத்த அத்தியாயம் |
| 8. | ஆன்மாவை எமன் எதிர்கண்ட அத்தியாயம் |

9. சிவசன்மர் சூரியனுலகங் கண்ட அத்தியாயம்
13. வாயு பொன் உலகு கண்ட அத்தியாயம்
15. சிவ சன்மர் தாரகையுலகும் புதன் உலகுங் கண்ட அத்தியாயம்
16. சிவசன்மர் சுக்கிர னுலகுங் கண்ட அத்தி யாயம்
17. சிவசன்மர் செவ்வாயுலகு, வியானுமுலகு, சனியுலகுங் கண்ட அத்தியாயம்
18. சிவசன்மர் சத்த விருச்சங்களுலகு கண்ட அத்தியாயம்
19. துருவன் தவஞ்செய்யப் போன அத்தியாயம்
20. துருவன் தவஞ் செய் அத்தியாயம்
21. துருவன் பதம் பெத்த அத்தியாயம்
22. சிவசன்மாவுக்கு அண்டத்தளவுஞ் சொல்லி மாலுக்கு முடி சூட்டிய அத்தியாயம்
23. சிவ சன்மர் முத்தி பெற்ற அத்தியாயம்
30. வாராணாசியின் சிறப்புரைத்த அத்தியாயம்
31. வயிரவன் தோன்றிய அத்தியாயம்
32. தண்டபாணி தோன்றிய அத்தியாயம்
33. காசிப் படலங் கண்ட அத்தியாயம்

ஆக அத்தியாயம் 3க்குத் திருவிருத்தம் 909. இடையிடையே ஒரு சில அத்தியாயங்கள் குறைவு பட்டும் ஏடுகள் முறை மாறியும் உள்ளன. எனவே மேலே ஒன்றிரண்டு அத்தியாயங்கள் விடுபடுகின்றன.

அதிவீரராம பாண்டியர் இயற்றி அச்சான 'காசிக் காண்டம்' என்ற நூலினைப் போன்றதே. 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. ஆயினும் இச்சுவடி அச்சு நூலினின்றும் பல வேறுபாடு

களைக் கொண்டுள்ளது. நூறு அத்தியாயங்களை யுடைய இந்நூலின் முதல் 33 அத்தியாயங்களே இச்சுவடி யில் உள்ளன. தொடக்கத்தில் ஒரு வெற்றேடு உள்ளது.

இந்நூல் வடமாநிலத்தில் அமைந்துள்ள காசி எனும் தலத்தின் சிறப்புகளைக் கூறுவது. இந்நூல் சைவ சமயக் குரவர் நால்வரைப் போற்றியும், தமிழ் முனியான அகத்திய னின் பெருமைகளைச் சுட்டிக் காட்டியும், சைவ சமயத்தை ஒழுகுவார் இறை அருளால் எவ்வகையில் எளிதில் வீடு பேற்றைப் பெறுவர் என்ற விளக்கத்தினை எடுத்து இயம்புகிறது. விநாயகன், முருகன், பார்வதி போன்ற பிற தெய்வங்களும் இந்நூலில் சிறப்பித்துப் பேசப்பட்டுள்ளனர்.

அதி வீரராம பாண்டியன் தென்பாண்டி நாட்டில் தென்காசியைத் தலைமையகமாகக் கொண்டு ஆட்சி செய்தவன். சிறந்த அறிஞன். இவனது சகோதரன் வரதுங்க பாண்டியன் என்று பெயர் பெற்றவன். வட நூல் வல்லுநன். சிறந்த தமிழ்ப் புலவன். இவர் இயற்றிய சில நூல்களாவன: 1. லிங்கபுராணம், 2. கூர்ம புராணம், 3. கலித்துறை அந்தாதி, 4. திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி, 5. திருக்கருவை வெண்பா அந்தாதி, 6. நறுந் தொகை (வெற்றி வேட்கை), 7. நைடதம். இந்நைடதத்திற்கு உரை செய்த பெரியோர்கள் தி. சரவணப் பெருமாள் அய்யர், க. வேதகிரி முதலியார் ஆகியோர் ஆவர்.

காசியைப் புகழ்ந்து பேசும் பிற நூல்களாவன: 1. காசிக் கலம்பகம், 2. காசி மான்மியம், 3. காசி ரகசியம், 4. காசி விசுவ நாத சுவாமி பேரில் பதிகம், 5. காசி விசுவநாதர் பேரில் ஆசிரிய விருத்தம், 6. காசிக் கோவை.

## 305. காஞ்சிபுராணம்

**அ.** 50:75; **ஆ.** 1-209 ஏடுகள்; **இ.** 37X3.செ.மீ. **ஈ.** 5 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

காஞ்சிபுராணம் பாயிரச் சுருக்கம்

பொன்மதிற் காஞ்சியெம் புராணஞ் செப்புவான்
தொன்மையிற் செந்தமிழ் தொடையில் மதிப்புற
மின்மணிப் பணிபுணை விகடச் சக்கரச்
சின்மயக் களிதனைச் சிந்தை செய்குவாம்

சீர்பரவு பரஞான வொளியாகி வெளியாகித் தெளித றேற்றம்
வேர்பரவி யுருவெனவு மருவெனவு முருவருவ மெனவுந்தானாம்
நீர்பரவி மறைமுடிவுக் கப்பாலா யானந்த நிருத்தஞ் செய்தே
பார்பரவ வருமேகாம் பரத்தொருவ ரிருபதமே பணிதல்
செய்வோம். (1)

முடிவு

முந்து பாயிர சிவாலய மரிதிரு முற்ற
மெந்தை தீர்தமே அபிதானம் கயிலையெம் பிராட்டி
வந்து மேவுனன் மாநகர் புறம்புகன் மாது
தந்த பூசனை திருவிழா தருமமீ தத்தால் (5)

சிவசண்முக மெஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க - எழுதி நிறைவேறியது.

பிற்குறிப்பு

காமக்கநல்லூர் கணக்கு சோலையம்பிள்ளை குமாரன் கந்தப்பன் எழுதின காஞ்சிபுரப்புராணம். யிந்தத் திருமறை சுபயோக சுபதினத்தில் சுக்கிரவாரத்தில் எழுதி நிறைவேறினது. விஷுவருடம், புரட்டாசி மாதம் 7ம் தேதி.

| | | | |
|---|---|---|---|
| பாயிரச்சருக்கம் | - 62 | நகரச்சருக்கம் | - 62 |
| சிவாலயச் சருக்கம் | - 531 | நகர்காண் சருக்கம் | - 12 |
| திருமுற்றச் சருக்கம் | - 54 | பூசைச் சருக்கம் | - 79 |
| தீர்த்தச் சருக்கம் | - 98 | திருவிழாச் சருக்கம் | - 103 |
| அபிதானச் சருக்கம் | - 107 | தருமச் சருக்கம் | - 47 |
| கயிலாயச் சருக்கம் | - 76 | உமைவரு சருக்கம் | - 44 |

ஆகிய சருக்கம் 12க்குக்கூடின திருவிருத்தம் 1275. சிவசண்முக மெஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

குறிப்புரை

பாயிரச்சருக்கம் முதலாகத் தருமச்சருக்கம் ஈறாக 12 சருக்கங்கள். 1275 பாடல்கள் உள்ளன. காமக்கநல்லூர் கணக்கு சோலையம்பிள்ளை அவர்களின் மகன் கந்தப்பன் இவ்வேடு எழுதியதாக இறுதிக் குறிப்பால் தெரிய வருகிறது. விஷு வருடம் புரட்டாசி மாதம் எழுதியதாகக் காலமும் தெரிகிறது.

## 306. குலால புராணம்

**அ.** **479:728;** **ஆ.** *1-121* ஏடுகள்; **இ.** *37X3.5.* செ.மீ.; **ஈ.** *5-6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகிய தெளிவான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

விருத்தம்

பொன்னிறமாம் பிருதிவியின் கூற தாகிப்
புவ்னங்க ளெவையெவையும் படைத்துக் காத்த
மன்னுமலர் கமலத்தோன் கிளைக ளாகி
வையகத்தின் முதற்குலமாய் வந்தோ ரென்று (1)

வேறு விருத்தம்

ஆதியொளிர் பரஞ்சுடரா யதனி லைந்து
பூதமுமா யணுவாதாரச்
சோதியொளி யாதவன்கீ ழண்டங் கள்பகிர்ந்
துருளுஞ்சூழ லுங்காற்றாய்
நீதியாய் பகலிரவாய் மேகமாய் சலைமலிக
ணிலத்திற் றோன்ற
கோதிலா திமைத்தருளுங் குய்யத்தின் பொருளதனைக்
கூறுவோமே (52)

முடிவு

...இன்பமுடன் மனுவாதி யீரொன்ப ரானவர்க்கும் கும்பமுனி பிரமகுரு சே... கருடன் மூவருக்கும் (மங்களம்) பஞ்சவர் களத்திசெய்யப் பதிலுக் கிடங்கொடுத்து அஞ்சாத வீமனை அடிமைகொண்ட அங்கிஷருக்கும் (மங்களம்)

சீர்கலிங்கம் மைசூர் சீனங் குடகு கண்டி
பேர்பெறு குலாலமன்னர் பெருங்கிளை வாழ்ந்திவருக்கும்
அருள்பெற்ற தேவருக்கும் இஷ்டமுடன்
பாடல் கேட்போ ரெல்லவரும் வாழ்ந்திருக்க (மங்களம்)

குறிப்புரை

பாயிரம் தொடங்கி மங்கள வாழ்த்துடன் முடிகின்றது. குலால புராண சரித்திரம் புராண வரலாறு, பதினெண் கணங்களுதித்த வகை, சுவாயம்புவ மனுவம்ச வரலாறு, யாகஞ்செய்த விதம், குலாலமுனி விவாகச் சிறப்பு, வீமனை வேலை கொண்ட படலம், காமாட்சி பீடமிட்டுக் காத்த படலம், திருநீல கண்டப்படலம், சாலிவாகனப் படலம் சித்தகுரு வாகிப் போகாப் படலம், குருவி நம்பிப் படலம், முத்தாசியப் பன் சூளையில் வெந்து தெய்வீகமான படலம் முதலான தலைப்புகளில் நூற்செய்தி விரிவாகக் கூறப்பட்டுக் குலால இனத்திற்குப் பெருமை சேர்க்கிறது. இது நிறுவன ஆய் வேடாக அளிக்கப் பெற்றுள்ளது.

## 307. குலால புராண சரித்திரம்

**அ. தாள். 8:37; ஆ.** *1-235* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகவில்லை. இந்நூல் *479:728* என்ற சுவடியிலிருந்து படியெடுக்கப் பட்டதாகும்.

## 308. சரபபுராணம் முதலியன

**அ.115:225; ஆ.** *38* ஏடுகள்; **இ.** *41.5X2.5* செ.மீ; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நன்று; ஏட்டெண் உள்ள பகுதிகள் சிதைந் துள்ளன; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

வையம் யாவையும் பவமெனும் வாரிவாய்ப் பட்டுப்
பொய்யின் வீழ்ந்திடா வகையருள் புணர்ந்துமை காண
வைய நாடொறும் அம்பலத் தாடிய கமலச் செய்ய
தாண்மலர்ப் ... தையும் செந்நியும் சேர்பாம் *(1)*

## முடிவு

> தரும மாதவம் புகழறி வொளிதமர் புதல்வர்
> பெருகு ஞானமும் சாந்தமும் போகமும் பெருக்கும்
> மருவு மட்டமே சதுர்த்தசி மகச் சிவப் பிரதிட்டை
> திருவிழா வினில்நிறை மிகுத்திடுந் திருவருள் புரியும்

ஏழாவது நரசிங்க வதைச் சருக்கம் முற்றும். ஆகத் திருவிருத்தம் 671.

## பிற்குறிப்பு

ருத்ரோத்காரி வருசம் மார்கழி மாதம் 15ஆம் தேதி குரு வாரமும் அசுவினி நட்சத்திரமும் தசமியும் கூடின சுபதினத்தில் சரபபுராணம் எழுதி நிறைவேறியது முற்றும்.

பாயிரம் திருவிருத்தம் 16, நரசிங்க உற்பத்தி 68; கடவுளர் முறையீடு 69; வீரபத்திர நாயனார் திருவெழுச்சி 98; அறிவுறுத்தியது 109; சலந்தானவதை 94; சக்கரம் பெற்றது 155, நரசிங்கவதை 62 ஆகத் திருவிருத்தம் 671.

## குறிப்புரை

நரசிங்க உற்பத்திச் சருக்கம், தேவர்கள் முறையிட்ட சருக்கம், வீர பத்திர நாயனார் திருவெழுச்சிச் சருக்கம், நரசிங்கவதைச் சருக்கம் முதலான ஏழு சருக்கங்கள் உள்ளன. இறுதியிலுள்ள எட்டு ஏடுகளில் திருவெழு கூற்று அகவல் என்ற நூல் எழுதப்பட்டுள்ளது. அவற்றின் இடது பக்க ஓரப்பகுதிகள் உடைந்துள்ளன. அடுத்து 4 வெற்றேடுகள் உள்ளன.

திருமால் இரணியன் ஆகம் பிளந்து உதிரம் குடித்த வெறியால் மிகவும் தறுக்கி உலகையே அழிக்கத் தலைப்பட்டார். அப்போது தேவர்களின் துதிக்கு இறங்கிய சிவபெருமான் சரப மூர்த்தியாகத் தோன்றி செருக்கு அடக்கிய விதத்தை விளம்புவதே சரப புராணமாகும்.

சரபம் என்பது இதிகாசங்களால் மட்டும் அறியப்படும் ஒரு பிராணி. நான்கு கால்களும், இறக்கைகளும் உடைத்தாய் பறக்கும் வலிமையுடைய பிராணி போலக் காட்சி தரும். திருமால் எடுத்த அவதாரங்களில் ஒவ்வொன்றையுமே பரமேசுவரன் ஆட்கொண்டதாகச் சிவபுராணங்கள் சித்தரிக்கும். சரப உரு எடுத்ததும் இது கருதியே.

## 309. சானந்த கணேசபுராணம்

**அ.**179:377; **ஆ.**1-78 ஏடுகள் **இ.** 37X3 செ.மீ. **ஈ.** 6-7 வரிகள் **உ.** நன்று; **ஊ.** தெளிவு **எ.** முழுமை; **ஏ.**அச்சாகவில்லை.

தொடக்கம்

பாயிரம்

பாண்டிற் கிணங்க நிறையத்து னாழும் பாவரெலாம்
பாண்டிற் படவொருங் கேற்றிய மாதவப் பாலகனாந்
பாண்டிபிற் குரியவ னூரில்வைத் தானெனும் பான்மைமலைப்
பாண்டிற் பெரும்புகழ் பெற்றோன் சரிதைப் பகருவனே

இரண்டாவது உற்பத்திச் சருக்கம்

ஆரண வுரைக்கு மெட்டா திருத்திடுங்
காரண முணர்ந்தவற் காத லாலுறுஞ்
சீரணி வதிரிகாச் சிரமந் தன்னிலோர்
பூரண வித்தெனும் புனிதன் வாழ்ந்தனன் (1)

முடிவு

நிருமல முடையவெண் ணீறு வாழ்கவே
வரமருள் கண்டிகை மாலை வாழ்கவே
ஒருநிரு வஞ்செழுத் தோங்கி வாழ்கவே
அரனருள் பெற்றபே ரன்பர் வாழ்கவே (45)

கயிலைச்சருக்கம் முற்றிற்று. ஆகச் சருக்கம் எட்டுக்குத் திருவிருத்தம் 496.

தருமத்தின் கதையைக் கேட்கத் தக்கின பேர்களெல்லாம்
ஒருமித்த மனத்த ராகி யுதவுவ ரணந்தூ சத்தம்
பெருமக்காய் செயலும் நாமப் பேர்களைக் காப்போ மென்றே
அருமைத் தங் கரங்க ணான்கி னனலொரு கரமேற் றானே

குறிப்புரை

வதரிகாச் சிரமம் என்னும் வனத்தில் வாழ்கிறார் பூரணவித்து என்னும் முனிவர். அவருடைய மனைவி பத்திரதத்தை என்பவள். மகப்பேறு இல்லாத அவர்கள் பலகாலம் இறைவனை வேண்டி சிவபெருமான் அருளால் ஒரு மகவினைப்

பெறுகின்றனர். அக்குழந்தைக்குச் சானந்த முனிவன் என்று பெயர் சூட்டுகின்றனர். அம்முனிவரின் வாழ்க்கையைக் கூறுவதே இந்நூல். பாயிரம், உற்பத்திச் சருக்கம், நல்வினைச் சருக்கம், தீவினைச் சருக்கம், நரகவாதைச் சருக்கம், யமபுரிச்சருக்கம், சிவமகிமைச்சருக்கம், கயிலைச்சருக்கம் என்ற எட்டுச் சருக்கங்கள் இதிலுள்ளன.

நூலின் பயனாக இறுதியில் சில பாடல்கள் அமைகின்றன. அவற்றுள் முதல் பாடல் முடிவுப் பாடலாகக் கொடுக்கப் பெற்றுள்ளது.

'பரசிந்தை தனிற்செல் லாமல்' எனத் தொடங்கும் பாடல் முடிவு பெறவில்லை. ஈற்றில் வெற்றேடு ஒன்று உள்ளது.

## 310. சிவக்கொழுந்தீஸ்வரர் புராணம்

**அ. 112: 219; ஆ.** *1-250* ஏடுகள்; **இ.** *37.5X3* செ.மீ. **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நல்லநிலை; முன்பகுதியிலுள்ள ஏடுகளில் சில இலேசாக அரிக்கப்பட்டுள்ளன; **ஊ.** தெளிவான அழகிய எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

திருத்தினைப் புராணம்

இந்தவக லப்பாட் டிசைப்பான் மதுரமொழி
தந்தருளும் என்பார் றமியேனுக் கிந்தனியும்
வேணியான் ஈன்றளித்த வேடிருச்செந் தூர்இளவேற்
பாணியான் செம்பொற் பதம்

நனைவி ளைந்தம லர்குடி னாரிபங்
கனவை ளைந்துக வர்கனித் தந்திசெந்
தினைவி ளைந்ததி ருத்தல மான்மியம்
தனைவி ளம்பத் தரும்பொரு டன்னையே (1)

முடிவு

மருவளர் இதழிச் சடைச்சிவக் கொழுந்தே
மருவுநின் திருவருள் அதனால்
பரிவுறும் உனதுதலமகி மையதாய்ப்
பசர்தரும் இணையவான் புராணத்

திருமுறை எனக்கெய் துறும்அறி வதனால்
இனிதுதேர்ந் தெழுதினன் அந்த
உரைதனை உளங்கொண் டருள்சுரந் தெனநல்
உவகையின் இனிதருந்தருளே

சிவமயம், திருச்சிற்றம்பலம் திருத்திணை நகரிலிருக்கும் சுப்பிரமணியர் துணை.

குறிப்புரை

திருத்திணை நகரிலுள்ள சிவக்கொழுந்தீஸ்வரர் பேரில் பாடப்பட்ட தலபுராணம். சிறப்புப்பாயிரம், முதலாவது பாயிரம், இரண்டாவது நயினிசாரணியச்சருக்கம், மூன்றாவது பிரணவோபாசனைச் சருக்கம், நான்காவது திருத்தினைநகரச் சருக்கம், ஐந்தாவது துருவாசச் சருக்கம், ஆறாவது சிவாங் குரச் சருக்கம், ஏழாவது பிருங்கி சாபம் தீர்த்த சருக்கம், எட்டாவது சாம்புவந்தன் உற்பத்தி உரைத்த சருக்கம், ஒன்பதாவது விண்டுவலி பெற்ற சருக்கம், பத்தாவது வயினதேயச் சருக்கம், பதினொன்றாவது சாம்பவான் தீர்க்காயுசு அடைந்த சருக்கம், பனிரெண்டாவது விசுவ நிறுபன் சருக்கம், பதிமூன்றாவது நத்தபூசைச் சருக்கம், திணை விளைந்த சருக்கம், இந்திரன் பூசைச்சருக்கம், கருத்தமச்சருக்கம் முதலான சருக்கங்களைக் கொண்டதாய் ஏனைய புராணமரபிலேயே இயன்றுள்ளது. முதலில் மூன்று வெற்றேடுகளும், இறுதியில் ஒரு வெற்றேடும் உள்ளன.

## 311. சிவபுராணம் என்னும் பிரமாண்ட புராணம்

**அ.** 421:665; **ஆ.** 54 ஏடுகள்; **இ.** 35.5 X 3.5 செ.மீ. **ஈ.** 7-8 வரிகள்; **உ.** இடையிலும் இறுதியிலும் ஏடுகள் உடைந்துள் ளன; **ஊ.** படிக்கக்கூடிய எழுத்து; எ. குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

அன்பத்தொன்றாவது சூரிய தீர்த்த ஸ்தானக்கதை சூத மகாரிசி யேஸ்வரர் முனியேஸ்வராளைப் பார்த்து ஓகோ ரிசியேஸ்வராளே உங்களுக்குத் திரும்பவும் என்ன ஆசை இருக்குதோ அதையும் நான் சொல்லுகிறேன். கேளுங்கோள் என்ற மாத்திரத்திலே ரிசிகள் கேட்கிறார்கள். செண்பகா சரணியன் மகாரண்ணியத்திலே நாலு ஸ்தல மகிமையை

ஆக்கிஞாபித்தீர். சூரியதீர்த்த மகிமையையும் தெரியும்படி சொல்லவேணும். அந்தத் தலத்திலே சிவனுக்கு நேர்மையான பத்திசேசன் என்ன செய்தான். அவனுக்கு மனோபீட்டமாய் இருக்கிற அந்தச் சேத்திரத்திலே காரியசித்தி என்ன வாச்சுது. அதை யாவத்தையும் தயவு வைத்துச் சொல்ல வேணு மென்று கேட்டமாத்திரத்திலே தூதர் சொல்லுகிறார்.

முடிவு

சரவண அதிசக்கரதீர்த்தம், பரமதீர்த்தம், அஸ்த தீர்த்தம், கூர்மதீர்த்தம், கணபதி தீர்த்தம், சுப்பிரமணியதீர்த்தம், தண்டேசுவரர் தீர்த்தம், ஆகாசுவரகங்கை இதுமுதலாய் இருக்கிற தீர்த்தங்களும் பிரம்மாவினிடத்திலே போய் நமஸ் காரம் பண்ணிச் சொல்லுது...

குறிப்புரை

சிவபுராணம் அல்லது பிரமாண்ட புராணம் எனும் இந்நூல் ஆங்காங்கே நூற்பகுதியில் சைவபுராணம் என்றும் குறிப் பிடப்பட்டிருக்கிறது. 51ஆவது சூரிய தீர்த்த ஸ்தானக் கதை, 52ஆவது சூரிய தீர்த்தக் கரையிலே தானங்கொடுத்த கதை, 53ஆவது சம்பு மாலிகதை தீர்த்தச் சரிதம், ஈசுவரி தபோகதை, கிரிகன்னிகை அர்த்தநாரி சுவாமி கதை, சூரிய தீர்த்தக்கதை, புண்டரிகத்து இராசாக்கதை, சந்திரவனம் ராசாக்கதை முதலான கதைகள் மட்டுமே யுள்ளன.

## 312. சிவானந்த கணேச புராணம்

**அ.** **168:361; ஆ.** *1-86* ஏடுகள்; **இ.** *27.5.5X2.5* செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; *71* முதல் ஏடுகள் உடைந்தும் சிதைந் தும் உள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

சிவானந்த யோகி சரித்திரம்
பாயிரம்

அஞ்சு காவனை வீச மலர்கொடு
நெஞ்சில் நினைபவர் வஞ்ச மகல்வரே
ஆறு முகவனை நாறு மலர்கொடு
கூறு மடியவர் பேறு பெறுவரே...

முதலாவது - புண்ணியபாவ வியிலுரைத்த அத்தியாயம்

பொன்னெடுஞ் சடில மணியொளி விரிப்பப்
புண்டர மதிக்கதிர் பரப்ப
வன்னருத்தி ராக்க மாலிகைப் புயமேல்
வயங்கமற் றெதிர்வரக் கண்டோர்
நின்னலும் விளையுந் திசைதிசை யிரிய
விறைவனஞ் செழுத்தொரு வடிவாஞ்
சென்னெறிந் தவத்துச் சூதமா முனிவன்
நன்மிசா ரணியத்தைச் சேர்ந்தான் (1)

முடிவு

மற்றது கவடல வள்ள லென்னுழை
குற்றமொன் றிலையவை குறித்து நோக்கநீ
பற்றினை யேலபண் படாதி யென்றனன்
நற்றவன் நன்றிசை வாயி னண்ணினான் (186)

இரண்டாவது யிமபுரம் புகுந்த வத்தியாயம் முற்றும். ஆகவத்தியாயம் இரண்டுக்குத் திருவிருத்தம் 446. மூன்றாவது தென்புலத்தார் சிவகதியடைந்த அத்தியாயம் (ஏடு.70).

குறிப்புரை

சிவானந்த யோகி என்பவரால் இயற்றப்பெற்றது. புண்ணிய பாவவியல், இமபுரம் புகுந்தது, தென்புலத்தார் சிவகதி யடைந்தது என்ற மூன்று அத்தியாயங்கள் மட்டுமே உள்ளன. மூன்றாம் அத்தியாய ஏடுகள் உடைந்துள்ளன. இரண்டாம் அத்தியாயத்தின் இறுதிப்பகுதியே மேலே முடிவுப் பகுதியாக உள்ளது. முதலில் 3 வெற்றேடுகளும் இறுதியில் உடைந்த ஒரு வெற்றேடும் உள்ளன.

## 313. திருஏரகப் புராணம்

**அ. தாள். 19:50; ஆ.** 45 பக்கங்கள்; **இ.** முழுமை, **ஈ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

காப்பு

எண்கொ டுத்தம நெஞ்சக மெண்ணிய
வண்கொ டுத்த வரம்பெறு வாய்மையாற்

கண்கொ டுத்த கணபதி தன்மலர்ப்
பண்கொ டுத்த மொழியிற் பரவுவாம்

பாயிரச் சருக்கம்
சுவாமிநாதன் துதி

பூமாது புணர்மாலும் போற்றரிய மூவிலை வேற்புனிதன் கேட்ப
ஓமாதி மந்திரத்தி னுண்மையெலாம் உணர்த்துமுறை
யுரைத்துக்காட்டி
யாமாதி யந்தமிலா தைந்தொழிலுங் கடவியப் பாலறிவாய்
நிற்குங்
கோமானை யேரகத்திலுறை சாமிநாயக எனக்குறித்து
வாழ்வாம்

முடிவு

ஆதியார்திரு வஞ்செழுத் தன்புடன் வாழி
பூதிசாதன முருத்திரம் புனைபவர் வாழி
நீதியாகிய வேந்தனும் மக்களும் வாழி
மாதுசேர்திரு வேரகம் வாழி வாழியவே

தீர்த்தச் சருக்க முற்றிற்று

ஆகச் சருக்கம் 11க்குத் திருவிருத்தம் 499.

கோமானை யேரகத்திலுரை சாமிநாயக எனக் குறித்து வாழ்வோம்

குறிப்புரை

காப்புப்பாடலை அடுத்து அமைந்துள்ள பாயிரச்சருக்கத்தில் சுவாமிநாதன், சுப்பிரமணியர், பரமசிவன், வினாயகர், திருஞானசம்பந்தசுவாமி, சுந்தரமூர்த்திநாயனார், மாணிக்கவாசகர் முதலானோர் பெயரில் துதி அமைகிறது. நைமிசாரணியச் சருக்கம், திருவேரகச் சிறப்புரைத்த சருக்கம், கைலாசச் சருக்கம், உபதேசச் சருக்கம், அட்டோத்தரசத நாமச் சருக்கம், இந்திரன் சம்மோகனாஸ்திரம் பெற்ற சருக்கம், மகா பாதக மோசனச் சருக்கம், மூகன் வாக்கு பெற்ற சருக்கம், பிதிர்மோசனச் சருக்கம், தீர்த்தனச் சருக்கம் ஆகிய சருக்கங்கள் உள்ளன.

முருகனின் அருளிச் செயல்களையும், பிரணவ மந்திரமான ஓம் என்ற ஓங்காரத்தின் சிறப்புகளையும் இந்நூல் விதந்து கூறுகிறது. திருவேரகம் என்பது ஸ்சுவாமி மலையைக் குறிக்கும், முருகனின் அறுபடை வீடுகளில் ஒன்று. சோழ நாட்டின் தஞ்சை மாநகருக்கு வடகிழக்கே காவிரியின் வடகரையின்பால் அமைந்துள்ள திருக் குடந்தைக்கு மேற்கே மூன்று கல் தொலைவில் இத்தலம் அமைந்துள்ளது.

இத்திருவேரகப் புராணம் என்பதன் பதிப்புச் செய்தியில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது. ''இஃது திருவேரக தேவஸ்தானம் பஞ்சாயத்தார் வேண்டுகோள்படி சுவாமி மலையில் ஒண்ணாவது வாக்ஸ்னேட்டராகப் பணியாற்றும் பி.சி. சுப்பிரமணிய முதலியாரால் விரோதி வருஷம் அற்ப்பசி மாசத்தில் ஜி.வெ.ப. கிருஷ்ண செட்டியார் அவர்களது லார்டு ரிப்பன் பிரஸ் ஆபிசில் பதிப்பிக்கப்பட்டுள்ளது.''

திருவேரகச் சேத்திரத்தின் மான்மியமானது பதினென் புராணங்களுள் ஒன்றாகிய சூரிய புராணமான பிரம்ம கைவர்த்தத்தில் 16 அத்தியாயங்களால் கூறப்பட்டுள்ளது. அவற்றில் தீர்த்த விருட்ச மகிமைகளைக் கூறும் சில அத்தியாயங்களை யாது காரணத்தாலோ விட்டு விட்டு 11 சருக்கமாக 500 கவிகள் அடங்கிய தமிழ்ப் புராணமாக உரையுடன் ஆன்றோரால் செய்யப்பட்டிருக்கிறது என்ற குறிப்பு மேற்கண்ட நூலின் பதிப்புரையில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. இதன் வழி இந்நூல் இதுவரை கிடைக்கப் பெறவில்லை என்பது தெரிகிறது.

நான்முகன் சொல்லமாட்டாத குடிலைப் பொருளை அரனாருக்கு முருகன் இத்தலத்தில் உணர்த்தியதால் இத்தலத் திற்கு ஸ்வாமிமலை என்றும், இத்தலத்தில் எழுந்தருளியுள்ள முருகப்பிரானைத் தகப்பன் சாமி என்றும் அழைக்கின்றனர்.

நக்கீரர் திருமுருகாற்றுப் படையிலும், அருணகிரியார் திருப்புகழிலும், குமர குருபரர் கந்தர் கலி வெண்பாவிலும் இத்தலத்தைப் போற்றுகின்றனர். திருவேரக மான்மிய சங்கிரகம் என்ற பெயரில் புராணச் சுருக்க நூல் ஒன்று சு. அப்பாச் சுவாமி சிவாச்சாரியார் பேருதவியினால் வடமொழி தென்மொழி மூலங்களை நன்கு ஆராய்ந்து சுவாமிநாத

தாசரால் செய்யப்பட்ட ஒரு பழைய நூல் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையத்தில் இருக்கிறது.

## 314. (திருக்கழுக்குன்றபுராணம்)

**அ.** 25:45; **ஆ.** *112* ஏடுகள்; **இ.** 25X3 செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** சிதைவு, **ஊ.** படிக்கக் கூடிய எழுத்து, **எ.** குறை; **ஏ.** இந்தச்சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

இந்நூல் திருக்கழுக்குன்றப் புராணமாக இருக்கலாம் என்று ஊகிக்க முடிகிறது. ஏடுகள் அனைத்துமே மிகவும் சிதைந்துள்ளன. நகர, கைலாய, காருட, வேதகிரி, ருத்ர கோடி – சருக்கம் போன்ற சில சருக்கங்களைஅவற்றின் முடிவிடங்களால் மட்டுமே அறிய முடிகிறது.

## 315. திருக்கோவலூர் புராண சாரம்

**அ.** 118:228; **ஆ.** *1–10* ஏடுகள்; **இ.** 28.5 x 3 செ.மீ.; **ஈ.** *9–10* வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

பல்லவி

தெரிசிக்க வேணுங் – கனகசபை
தெரிசிக்க வேணும்

அனுபல்லவி

தெரிசித்த போதங்கே வரமுத்தி பெறலாகும்
<u>பரதத்தத்</u> துடனேயான் பாதத்தாண் டவரூபை – (தெரி)

**சரணம்**

சாஸ்திர மாறுநல் வேதமதில் தூணாக
சமயமிருபத் தெட்டா கமமுமன் பெரும்பூதம் ...

முடிவு

திருக்கரத் தொளிர்தீமுனைச் சூலத்தின் வதையால்
உரைத்தசற் குணத்த நகனிடத்தரு ளோங்கு
முருச்சிவார்ச் சனையொருபத் தொன்றுருத்திரர் செயுநா
ளுருத்திரப் புவனமெனச் சிவபுரம் ஒளிரும் (34)

குறிப்புரை

இச்சுவடியில் முதல் இரண்டு ஏடுகளில் கனகசபை நடராசப் பெருமான் மீது சில பாடல்கள் கீர்த்தனை வடிவில் இயன்றுள்ளன. 3–ஆவது ஏட்டில் மாணிக்கவாசகர் மீது ரெகுபதி ராகம், யேக தாளம் கொண்ட ஒரு கீர்த்தனை அமைகிறது, 4–ஆவது ஏட்டில் திருக் கோவலூர்ப் புராணசாரம் என்னும் தலைப்பில் 34 பாடல்களும் காணப்படுகின்றன. 35–ஆம் பாடல் குறையாக உள்ளது. அடுத்து, திருவருட் பயன் செய்யுட் குறள் எனும் தலைப்பில் 100 வெண்பாக்கள் அமைகின்றன. அடுத்து, அரசவனப் புராணத்தில் 18 பாடல்கள் உள்ளன. திருக்கோவலூரில் தெய்வீக ராசனிட வதுவைச் சிறப்பு, திருக்கோவலூர் திருவிராகம பண்நட்ட ராகம், திருக்கோவல வீரட்டந் திரு நேரிசை முதலான தலைப்புகளில் திருகோவலூர் புராண சாரத்தின் செய்திகள் தொடர்ந்து கூறப்பட்டுள்ளன. திருக்கோவலூரில் எழுந்தருளியுள்ள வீரட்டேசரின் அருட்செயல், புகழ் கூறுகிறது. ‘திருக்கோவலூர் புராண சாரத்தின் வயனம்’ எனும் தலைப்பிலமைந்த ஏட்டின் வழி இந்நூலின் அமைப்பு முறை பின்வருமாறு இருப்பது தெரிய வருகிறது. ஆயின் இப்பகுதிகள் முழுமையாக நூலில் இல்லை.

கடவுள் வணக்கஞ் செய்யுள்–6, போதனை பாரம்பரியஞ் செய்யுள்–1, அஷ்ட வீரட்டத் திருத்தலம்–1, கோவல வீரட்ட லிங்க பூசா பலன்–5, அந்தகாசூரனுற்பத்தி யாதிப்பேறு–13, தலமேன்மை–4, தலவாசமும் பூசையுஞ் செய்தோர் சதுர்யுகத் தோகை வயணம்–12, திருக் கோவலூர்ப் புராணத்துட் சேர்ந்த அரசவனப் புராண விளக்கம்–23, தெய்வீக ராசன் தீர்த்த யாத்திரை–8, அவ்வையம்மாள் திருவுள்ளம் மகிழ்வினால் அங்கவை சங்கவை என்னும் இருவரையுந் தெய்வீக ராசனுக்குத் திருக்கலியாணஞ் செய்து வைத்துந் தலத்திற் செய்யுந் தவமேன்மைக்கிமையும்–17, தீர்த்த விசேடமுஞ் சிவபூசா பலனும்–19, வாழிச் செய்யுள்–2 ஆக அகோரம்–12க்குச்

செய்யுள் *21*. திருக்கோவலூர் திருக்கடைக்காப்பு–*11*, திருக்கோவலூர்த் தேவாரம்–*10*, அவ்வையம்மாள் திருவாக்கு–*14*, திருக்கோவலூரென்னும் சிவபுரவாச மேன்மை–*1* ஆகத் திருப்பாடல் *147*.

## 316. திருக்கோவலூர் வீரட்டேசர் புராணம்

**அ.**30:52; **ஆ.** *1-88* ஏடுகள்; **இ.** *31*x*2.5* செ.மீ.; **ஈ.** *6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** படிக்கக் கூடிய எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

சுருதிவனத் துலவுசுக மதம்பொழியும்
    ஒருகுவட்டுத் துகடீர் வெள்ளக்
கருணைமிகு மதமாவை எனதிதயக்
    கமலத்தின் கணத்தி னன்பு

பருதிமதி வலம்புரியும் பாரவரை வரைகுனித்துங்
கிரசிதலால் வரையிலிருந் திமையவரை யுயிர்த்தமணி
மரகதமால் வரையினிரு வனச்சுவற்க வரையை
யெண்டோட் டிருவரையிற் புணர்கோவில் வீரட்டா
                                        னஞ்சேர்வாம்; (1)

முடிவு

மறைவாழி மனுவாழி மழைவாழி ரவிவாழி மதிவாழியிம்
முறைவாழி மகிழ்கோ வனசர்வாழி முத்திக்கண் முதுசைவநூல்
நெறிவாழி சிவனும் மிகவாழி யின்னூலி னிறைஅன்பினார்
வழியுட ளாளுமிக வாழி வீரட்ட னருள்வாழியே (35)

ஆகச் சருக்கம் பதினேழுக்குச் செய்யுள் - 550
பரமகுருவேநம திருமுக செயம்
கணபதிசகாயம்

திருக்கோவலூர் வீரட்டேசர் புராணம் எழுதி நிறைவேறியது

முற்றும்

குறிப்புரை: திருக்கோவலூர் ஸ்தல புராணம்

விநாயகர் துதி, பாயிரம், கடவுள் வணக்கம், நூன்முகம் ஆகியவற்றையடுத்து நூல் தொடங்குகிறது. அந்தகன் வதைச் சருக்கம், திருமுகச்சருக்கம், கிருட்டனச் சருக்கம், இந்திராதிச் சருக்கம், கபிலச் சருக்கம், இராகவச் சருக்கம், பரசுராமச் சருக்கம், கண்ணுவச் சருக்கம், தெய்வீகச் சம் பவச்சருக்கம், காரண்டன் வல்லூரி வதைச் சருக்கம், தெய்வீகன் அரசாட்சிச் சருக்கம், கானவி செயச்சருக்கம், தீர்த்த விசேடச் சருக்கம் முதலாக **17** சருக்கங்கள் உள்ளன. அச்சு நூலில் **17**ஆவது சருக்கமாக வரும் பூசச்சருக்கப் பாடல்கள் இந்நூலிலில்லை. சிவபெருமான் செய்த எட்டுவீரச் செயல்கள், இத்தல வரலாறு, இத்தலத்தைத் தரிசித்த முனிவர், அரசர் ஆகியோர், கிருட்டினன் சிவனைப் புகழ்ந்து பாடியது, முருகன் சிவனை வணங்குவது, இந்திரன் சிவனை வணங்குவது என்றவாறு நூற்செய்தி விளக்கம் பெறுகிறது. முதலில் ஒன்றும் இறுதியில் மூன்றும் வெற்றேடுகள் உள்ளன.

## 317. திருத்தொண்டர் புராணம்

**அ. 67:95; ஆ.** *1-130* ஏடுகள்; **இ.** *37.5X2 செ.மீ.;* **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

திருத்தொண்டதொகை

தில்லைவா ழந்தணர்தம் மடியார்க்கும் அடியேன்
 றிருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே னென்னாத யியற்பகைக்கும் அடியேன்
 இளையோன்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மழுவல்ல மெய்பொருட்கும் அடியேன்
 விரிபொழில்சூழ் குன்னரயூர் விரல்மிண்டர்க் அடியேன்
அல்லிமென் முல்லையத்தார் மாநீதிக் கடியேன்
 ஆரூர னாரூரில் அம்மானுக்காளே (1)

முடிவு

என்று முள்ள வின்னகர
    கலியு கத்தி விலங்கு
வன்றி ஆடி இமையமால் வரைமேல்
    வைக்கவெரு வொன்றனக் கிதன் வளமை
சென்றவேடன் முன்கண்டுரை செய்யத்
    திருந்துகாத நான்குட்பட வகுத்த
குன்றுபோலு மாமதில்புடை போக்கிக்
    குடியிருந்தநின் கொள்கையின் விளங்கும் (85)

குறிப்புரை

**'உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்'** என்ற பாடலுடன் நூல் தொடங்கப் பெறினும், திருநாட்டுச் சிறப்பு, மனுசக்கரவர்த்திப் புராணம், திருக்கூடச் சிறப்பு, தடுத்தாட்கொண்ட புராணம், தில்லை வாழ் அந்தணர் சருக்கம், திருக்குறிப்புத் தொண்டர் நாயனார் புராணம் என்ற சில பகுதிகளின் மூலம் மட்டுமே உள்ளன.

## 318. திருத்தொண்டர் புராணம்

**அ. 92:193; ஆ.** 53 ஏடுகள்; **இ.** 40.5X2.5. செ.மீ.; **ஈ.** 8-10 வரிகள்; **உ.** சிதைவு; இடையிடையே ஏடுகள் இல்லை; **ஊ.** தெளிவின்மை; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாக வில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகி யுள்ளது.

குறிப்புரை

முனையமுவார் நாயனார் புராணம், ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம், திருமூலநாயனார் புராணம், கனம்புல்ல நாயனார் புராணம், மூர்க்க நாயனார், சோமாசி மாற நாயனார், ஆதிபத்த நாயனார், நரசிங்க முனைய நாயனார், காரிகை நாயனார், கலக்கி நாயனார், வாயிலா நாயனார், நின்ற சீர் நெடுமாற நாயனார், காடவர் கோன் கழற்சிங்க நாயனார், இடங்கழி நாயனார் முதலான நாயனார் வரலாறுகள் அடங்கியுள்ளன. ஆயினும் ஒரு புராணமேனும் முழுமை யாக இல்லை. ஏடுகள் பல சிதைந்துள்ளதால் தொடக்கம்,

முடிவு எழுதற்கியலா நிலைமை காணப்படுகிறது. இதனைத் தொடர்ந்து ஒன்பது ஏடுகளில் நன்னூல் இடம் பெற்றுள்ளது.

## 319. (திருப்பனந்தாள் புராணம்)

**அ.** 178;376; **ஆ.** 7-78 ஏடுகள்; **இ.** 37X3 செ.மீ; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; தொடக்கம், இடை, இறுதி ஆகிய மூன்று பகுதிகளிலும் ஏடுகள் விடுபடுகின்றன; **ஊ.** தெளிவு; **எ.** குறையானது; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

தலச்சுருக்கம்

அத்தலத்தி விசிட்டமுரைப் பரிதரிதே யரியயற்கு மரிதே யாருஞ்
சித்தமகிழ் வுறவோற்காற் பனைசையென மனத்தினிடர் சென்றி பாதால்
வித்தகவன் னகர்காணிற் பவமகலு மெல்லையினை மெரித்தா ராகில்
அத்தனருட் டகமையினா லமரருல கனைத்துமிவ ராள்வ ரன்றே

முடிவு

அருகினின் முனிவ ரிருகரங் குவித்தே
யதிசய மதிசய (மென்னப்)
பொருடெரிந் துரைத்த சூதமா முனிவன்
புகன்றிட வதிசய மீதோ
தெருளுறு கான வேருவன் முதலாய்த்
திருப்பனைந் தாளின்வந் (தெய்தி)
அருள்புரி பதவி பெற்றன னென்றான்
அக்கதைவியம்பென வியம்பும் (17)

மூலபலச் சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் 13க்குத் திருவிருத்தம் 540.

குறிப்புரை

ஒன்பதாவது ஏட்டில் அனுபூதிச்சருக்கம் முடிந்து, தலச் சருக்கம் தொடங்குகிறது. தொடர்ந்து, தீர்த்தச் சருக்கம், நான்முகச் சருக்கம், அயிராவதச் சருக்கம், தாடகைச்சருக்கம், நாககன்னிச்சருக்கம், காகச்சருக்கம், எச்சக்குனிந்தன் சருக்கம் ஆகியவை உள்ளன. மூலபலச்சருக்கத்தோடு நூல் முடிகிறது.

நூல் முடிவு பெற்றதாகத் தெரியவில்லை. பிறவாகிய தலபுராணங்களைப் போலவே இந்நூலின் தலைப்புகளும் பிறவும் அமைகின்றன.

காவிரியின் வடபால் விளங்கும் 63 தேவாரத் திருத்தலங்களுள் இதுவும் ஒன்று. இந்நூலை இயற்றியவர் செஞ்சடை வேதிய தேசிகர். இந்நூல் 24–ஆவது குருமகா சந்நிதானம் சண்முக தேசிக ஞான சம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் திருவுள்ளம் கொண்டு திருப்பனந்தாள் தேவஸ்தானத்தின் வாயிலாக அருணசடேசுவர சுவாமிகள் அச்சுக் கூடத்தில் 1944–இல் வெளியிடப் பெற்றது. இத்தல இறைவனை அருணசடேஸ்வரர், செஞ்சடை வேதியர், சடையப்பர், தாளவனநாதர் என்ற பெயர்களில் மக்கள் அழைப்பர். இறைவியைப் பிரகன் நாயகி, பெரிய நாயகி, பெரிய பெருமாட்டி, தாளவன நாயகி என அழைப்பர். இத்தலத்தில் உமையவள் சிவபூசை செய்து ஞான வுபதேசம் பெற்றது, தாழைமலரைச் சான்று கொண்டு திருமுடியைக் கண்டதாகப் பொய் கூறிய பிரம்மனுக்கு அதனால் ஏற்பட்ட பாதகத்தைப் போக்கியது, கௌதமர் மனைவியைக் களவாற் சேர்ந்ததால் இந்திரனுக்கு ஏற்பட்ட பழியையும், விருதாசுரனைக் கொன்றதால் ஏற்பட்ட பாவித்தையும் போக்கி அருள்பாலித்தது, குரு பத்தினியைக் கூடின சந்திரனுக்கு ஏற்பட்ட பாவப் பழியை நீக்கினது போன்ற அருளிச் செயல்கள் இறைவனால் செய்யப்பட்டதாக இத்தலவரலாறு கூறுகிறது.

63 நாயன்மார்களில் ஒருவரான குங்குலியக்களைய நாயனார் இத்திருத்தலத்தில் திருமுடி சாய்ந்து இருந்த இறைவனை அன்புக் கயிற்றால் இழுத்து நேர் செய்த வரலாற்றினைப் பெரியபுராணம் வழியாக அறியமுடிகிறது.

இத்திருத்தலத்தின் தலவிருட்சம் பனைமரம். ஆதலின் இத்தலத்தைப் பனசை என்றும், பனந்தாள் என்றும் வழங்குகின்றனர்.

## 320. திருவக்கரை புராணம்

**அ.** 90:191; **ஆ.** *1-154* ஏடுகள்; **இ.** *37x2.5* செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை. பல ஏடுகளில் துளைகள் உள்ளன; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

முற்குறிப்பு

நெற்குன்றம் தமிழ்ப்பாடகச்சாலை உபாத்தியாயர் ஆகிய குமாரசுவாமி உபாத்தியாயர் அருளிச்செய்த திருவக்கரை புராணம்.

தொடக்கம்

காப்பு

வேத வல்ல வியாதன்மா ணாக்கனாம்
சூதர் சொற்றவிற் றோல்கதை முற்றுவான்
நாத வந்த யைந்தளி சுந்தரப்
போத கந்தனைப் புந்தி யிருத்துவாம்

சீர்கொண்ட விறற்பெயர் சுந்தர ராய்திகழ்
வல்லபை யால்ஒரு பாகமதாய்
தார்கொண்ட .... வ... ராய்
தாயர் பழிவரத் தனிப்பொருளாய்
தேர்கொண்ட வலங்கிருத வீதிகள் சூழ்திரு
வக்கரை மேவுசி கரம்....
பார்கொண்ட செழுந்தன மாதுஉமை யாள்மக
வாமி மாமுக னைப்பணிவாம்

முடிவு

எழில ரம்பையர் நடித்திடக் கவரிகள் இரட்டதுந் துமிமோதப்
பழுதிற் றும்புரு நாரதர் வீனைகள் பண்போ டின்னிசைபாட
கழுவிலாச ஸ்ரீமா தனத்தின்மீது திருந்தனன் அழகொரு
வறியென்பான்
வழுவி லாகுரு வந்தனன் உருகென உழைத்திவா
மறைந்தானே (29).

முற்றிற்று.

குறிப்புரை

பாடலும் அதற்கான உரையும் உள்ளன.

முதலாவதுகாப்பு

ஒன்னாவது தெய்வ வணக்கம் கூறிய அத்தியாயம்.
இரண்டாவது புலவோர் வணக்கம் கூறிய அத்தியாயம்
மூன்றாவது பாயிரம் சொல்லிய அத்தியாயம்
நான்காவது சூதரைச் சனகர் கேட்ட அத்தியாயம்

ஐந்தாவது நந்தி சிறப்புரைத்த அத்தியாயம்
ஆறாவது நாட்டுச்சிறப்புரைத்த அத்தியாயம்
ஏழாவது நகரச் சிறப்புரைத்த அத்தியாயம்
எட்டாவது விருந்திரன் உற்பவ அத்தியாயம்
ஒன்பதாவது தவசு அத்தியாயம்
பத்தாவது அரசு செய்த அத்தியாயம்
11ஆவது வக்கிரன் உற்பல அத்தியாயம்
12ஆவது விருத்திரன் சண்டை அத்தியாயம்
15ஆவது கலியாண அத்தியாம்
27அரசு செய்த அத்தியாயம்

முதலான *27* அத்தியாயங்கள் உள்ளன. முதலில் ஒன்றும் இறுதியில் இரண்டுமாக வெற்றேடுகள் உள்ளன.

## 321. திருவாதவூரார் புராணம்

**அ. 39:63; ஆ.** *1-20* ஏடுகள்; **இ.** *39X3.5* செ.மீ.; **ஈ.** *7-9* வரிகள்; **உ.** நல்லநிலை; இறுதி ஏடுகள் சற்றுச் சிதைந்துள்ளன; **ஊ.** சுமாரான அழகான தெளிவான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பவளமால் வரையினில் வெறிப்பதுபோல்
பரந்தநீற் றழகுபச் சுடம்பி
றிவளமா துடனின் றாடிய பரமன்
சிறுவனைப் பாரதப் பெரும்போர்

நூல்

முதலாவது, சுபமஸ்து

துங்கமத கும்பஉயர் தும்பிமுகன் மதிசீர்
அங்கைமலர் கொண்டுமிகும் அன்புடன் இறைஞ்சுவாம்
தென்பொதியின் மாமுனி சிறக்கஅரு ளெண்ணி
இன்பவிளை யாடல் தெனும்கடவுள் ஆயேன்
மின்பயிலு மாமதுரை மேவுதமிழ் மாரன்
துன்பமற வன்பர்கதை சொல்லலுறு கின்றேன (3)

முடிவு

என்பது, பூதலமாதான பூமாதேவியும் வாழ்க வென்ற தினாலே அந்தப் பூமிக்குள்ளே இருக்கும் சகல சீவராசிகளும் வாழ்க. பொன்மழை பொழிந்து வாழ்க. வேதமும் ஆகமமுமாகிய கலை சாஸ்திரப் புராணக் கலைஞானமும் வாழ்க. வேந்தரானார் சாவினிட செங்கோலில் நிதியுற வாழ்க. தீதுகுற்றமில்லாத அஞ்செழுத்தான பஞ்சாஷ்சரமுந் திருநீறுஞ் சிவ சமயமுஞ் சிவனடியாரும் வாழ்க வென்றது. எதனாலே என்றால், இந்த வாதவூராருட புராணத்தை யோதிப் படித்துப் பொருட் சொல்லக் கேட்டவர்கள் மகட்சியாய் வாழ்ந்திருப்பதாக இவையெல்லாம் வாழ்க வென்றவாறு.

கனகசபையிலே திருவடி பெற்ற சருக்கம் முற்றும், ஆகச் சருக்கம் ஏழுக்குத் திருவிருத்தம் **543** முற்றும்.

குறிப்புரை

மந்திரச்சருக்கம், திருப்பெருந்துறைச்சருக்கம், குதிரையிட்ட சருக்கம், மண்சுமந்த சருக்கம், திருவம்பலச் சருக்கம், புத்தரை வாதுவென்ற சருக்கம், திருவடி பெற்ற சுருக்கம்.. ஆகிய ஏழு சருக்கங்களும் **543** திருவிருத்தங்களும் உள்ளன. 'கடவுள் மாமுனிவர் இயற்றிய திருவாதவூரடிகள் புராணம்' என்னும் நூல் புன்னைவனநாத முதலியார் உரையுடன் வெளியிடப் பட்டுள்ளது. முதலில் இரண்டும், இறுதியில் ஒன்றுமாக வெற்றேடுகள் உள்ளன.

## 322. திருவிளையாடற் புராணம்

**அ. 174:368; ஆ.** *1-345* ஏடுகள்; **இ.** 26.5 x 4.5 செ.மீ.; **ஈ.** *10-12* வரிகள்; **உ.** நல்லநிலை; தாழிப்பனை; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

மதுரைத் திருவிளையாடற் புராணம்

சத்தி யாய்ச்சிவ மாகித் தனிப்பர
முத்தி யான முதலைத் துதிசெயச் (1)

மல்குக வேத வேள்வி வழங்குக சுரந்து வானம்
பல்குக வளங்க ளெங்கும் பரவுக அறங்க ளின்பம்
நல்குக வுயிர்கட் கெல்லாம் நான்மறைச் சைவ மோங்கிப்
புல்குக வுலக மெல்லாம் புரவலன் செங்கோல் வாழ்க (2)

முடிவு

ஏத்தியருச் சனைசெய்து நினைவிலரி தாயன்பி லெளிய வட்ட
மூர்த்தியையங் கயற்கண்ணி யன்பனைமுப் போதும் நோய்
முடிதாழ்ந்தின்பம்
பூத்தமனத் தினராகிக் கருவித்தேன் பொதிந்தசிறு புட்போ லந்த
மாத்தலனில் வசிட்டாதி முனிவர்தபோ வனஞ்செய்து
வதிந்தார் மன்னோ (53)

ஆகப்படலம் 75க்குத் திருவிருத்தம் 3359.

பிற்குறிப்பு

*1022* ஆம் வருஷம் ஆனிமாதம் *19* ஆம் தேதி குருவாரமும் திருதியையும் திருவோண நட்சத்திரமும் மிதுன லக்கினமும் கூடின சுபதினத்தில் திருவிளையாடற் புராணமெழுதி முடிந்தது.

குறிப்புரை

பரஞ்சோதி முனிவர் இயற்றிய இந்நூல், அச்சுநூல்களினும் மாறுபடாது அமைந்துள்ளது. அனைத்துப் படலங்களும் முழுமையாக இருப்பினும் ஏடுகளின் எண்கள் சிதைந்தும் முறைமாறியும் உள்ளன.

## 323. திருவிளையாடல் புராணம்

**அ. 468:716; ஆ.** *1-220* ஏடுகள்; **இ.** 40 x 3 செ.மீ.; **ஈ.** *10-12* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; ஏடுகளின் நுனிப்பகுதிகள் முழுமையும் சிதைந்துள்ளன; **ஊ.** படிக்கக் கூடிய எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாக வில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகி யுள்ளது.

தொடக்கம், முடிவு 174:268 போன்றது.

## பிற்குறிப்பு

விசைய வருஷம் சித்திரை மாதம் 28 ஆந் தேதி புதன் கிழமை இருபத்தஞ்சு நாழிகையளவில் இந்தத் திருவிளையாடற் புராணம் எழுதினேன்.

நாதானனூரிலிருக்கும் சிவாயபிள்ளை எழுதினது

திருவாவடுதுறை யாதீனத்துப் பொத்தகம் பார்த்து எழுதினது.

## குறிப்புரை

பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணம் முழுமையாக உள்ளது. சுவடி எழுதப்பெற்ற ஆண்டு முதலிய குறிப்புகள் தெளிவாக உள்ளன. 174:368 என்ற நூலினைப் போன்றே தொடக்க இறுதிப் பாடல்கள் இந்நூலிலும் அமைகின்றன. ஆயின் இந்நூலிலுள்ள விருத்தச் செய்யுள் 3362; அந்நூலில் 3359.

இதனை இயற்றிய பரஞ்சோதியாரின் காலம் 17–ஆம் நூற்றாண்டு. மதுரையில் சொக்கனாக எழுந்தருளிய சிவபிரான் தன் அடியார்களை உய்வித்து அருள நடாத்திய 64 அருளிச் செயல்களே இந்நூலாக அமையப் பெற்றுள்ளது.

இவ்வாசிரியர் பரஞ்சோதி முனிவர் திருத்துறைப் பூண்டிக்கு அருகே உள்ள குறுக்கை என்ற இடத்தைச் சார்ந்தவர். அக்காலத்து மக்கள் ஒரு கிராமத்திற்குப் பரஞ்சோதிபுரம் என்று பெயரிட்டு ஒரு சிவத் தலத்தை நிறுவி அங்கு எழுந்தருளிய இறைவனுக்குப் பரஞ்சோதி லிங்கம் என்று பெயரிட்டனர்.

இறைவன் செய்தருளிய திருவிளையாடலை அடிப் படையாகக் கொண்டு எழுந்த பிற நூல்கள்: 1. பெரும்பற்றப் புலியூரார் இயற்றிய திருவிளையாடற் புராணம், 2. வீமநாத பண்டிதர் இயற்றிய கடம்பவன புராணம், 3. அனதாரி என்பார் இயற்றிய சுந்தர பாண்டியம், 4. வீரபத்திரக் கம்பர் இயற்றிய திருவிளையாடல் பயகர மாலை, 5. பரஞ்சோதி முனிவர் செய்த திருவிளையாடல் போற்றித் திரு அகவல், 6. ஆறுமுக நாவலர் உரைநடையாற் செய்த திருவிளையாடல் புராணம். கிருஷ்ண பாரதி என்பார் இப்புராணத்தைத்

திருவிளையாடல் நாடகம் என்ற பெயரில் எழுதியதாக மு. அருணாசலம் பிள்ளை கூறுவார். இந்நூலில் அசரீரி என்பதற்கு விசும்பொலி என்றும், விசுபரூபம் என்பதற்கு விசுவ உருவன் என்றும், இராச்சிம்மன் என்பதற்கு அரச சிங்கம் என்றும் சில தமிழ்ப் பெயர்ப்புகள் காணப்படுகின்றன.

## 324. திருவெண்காட்டுப் புராணம்

**அ. 468:717; ஆ.** *221-323* ஏடுகள்; **இ.** 40 x 3 செ.மீ.; **ஈ.** *10-12* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; தொடக்க இறுதிப் பகுதிகள் சிதைந்துள்ளன; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பூமேவு திசைமுகமும் திருமகளும் போற்றி செய்ய
.... .... .... .... ....
மாமேவு மிதழினரு மழைதுளிப்ப மணிமன் றன்தான்
தாமேவி நடம்புரியும் தனிப்பொருளை.....
.... .... ..... ..... .....
பிஞ்சுமதி சடாமகுடப் பெருமானைப் பிரியாத
வஞ்சியிம வான்தவத்தின் வருபேழை மயில்உதவு
மஞ்சிறைவன் டிறைத்துவிழும் அருவிமத யொழுகுகவுட்
குஞ்சரவெண் புகர்முகத்துக் குருசிலடி யிணைத் தொழுவாம்

முடிவு

தேவர்தம் பெருமான் சிறந்தவஞ் செழுத்தின்
சீர்பெறும் மாக்கதை முதலாய்
பாவநின் றகற்றும் புராணநூல் கேட்பார்
பலன்பெறும் மொழிக்கதை யுட.....
மேவறப் புகன்ற சிவகதை முழுதும்
விழைவுடன் கேட்குநர் அவர்தாம்
... .... மாலயன் முதலோர்
எய்தரும் சிவபதம் அடைவார் (10)

திருச்சிற்றம்பலம்

சிவகதை கேட்டவன் பேறுபெற்ற புராணமகிமை முற்றும்

ஆக அத்தியாயம்....

## குறிப்புரை

இந்நூல் 'சூதர் ஓது சுவேதனப் பெருங்காதை தன்னையான்' என்னும் அடியோடு தொடங்குகிறது. ஆனால் அந்த ஏட்டின் பிறபகுதி வெற்றேடாகவே விடப்பட்டுள்ளது. பிரமோத்தர காண்டம் பாயிரம், முதலாவது பஞ்சாக்கர அத்தியாயம் இரண்டாவது கண்மாடபாதம் சரிதை, சிவசாதன மகிமை என பதினான்காவது அத்தியாயம் வரை உள்ளன. முதலும் முடிவுமாகிய ஏட்டின் பகுதிகள் சிதைந்து தலைப்பு முதலியனவற்றைக் காண இயலாத நிலையுள்ளது.

இதனை இயற்றியவர் இராதா நல்லூர் சைவ எல்லப்ப நாவலர். இந்நூல் பண்டித மித்ர எந்திர சாலையில் 1905–இல் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

வேதங்கள் பூசித்ததால் வேத வெண்காடு; சுவேதன் என்ற மன்னவன் வழிபட்டமையால் சுவேத வனம்; இயமன் வலி இழந்தமையால் காலஞ்சரம்; வில்வம் தல விருட்சமானதால் வில்வவனம்; சங்கார நடனத்தின் பின் உலகம் உய்ய எடுத்த ஞான தாண்டவம் மறு சங்கார காலம் வரை செய்கிறபடியால் நவதிருத்தகனம் – பேரரங்கம், மகாவரங்கம்; ஞானவனம் தமோ குணத்தையும் பாவத்தை யும் அழித்தலின் தமோ நாசபுரம் அல்லது பாபநாசபுரம்; முருகன், கணபதி ஆகிய இவர்கள் வழிபட்டதால் முருகன் பூண்டி கணபதி நகரம்; பிரமனுக்கு இவ்விடம் மயான மானதால் பெரியமயானம்; இத்தலத்தில் செய்யும் தருமம் கோடியாகும் தன்மையால் தருமகோடி; தில்லைச் சிதம்பரத் திற்கு முன்பே இப்பகுதியில் ஆண்டவன் தாண்டவம் புரிந்து அருளினபடியால் ஆதி சிதம்பரம்; எல்லா நன்மைகளையும் உயிருக்குப் பயித்தலின் சித்தி நகர் எனப் பலவாறாக இத்தலம் சிறப்பிக்கப் பெறுகிறது.

காசிக்குச் சமமான தமிழகத்து ஆறு தலங்களுள் இதுவும் ஒன்றாகும். பிற தலங்களாவன: திருவையாறு, திருமயிலாடு துறை, திருவிடை மருதூர், திருச்சாய்க்காடு, திருவாஞ்சி.

திருவெண்காட்டுக் கோயிலில் பல தமிழ் கிரந்தக் கல்வெட்டுகள் உள்ளன. இவற்றை அன்றைய அரசு *1896*–ஆம் ஆண்டில் *110* முதல் *122* வரை *13* எண்களில் *1918*–ஆம் ஆண்டில் *442* முதல் *521* வரை *80* எண்களிலும் படியெடுத்திருக்கின்றனர். *1896*–இல் எடுத்தவற்றைத் தென்னிந்தியக் கல்வெட்டுகள் ஐந்தாம் பகுதியில் வெளியிட்டுள்ளனர். முதலாம் இராசராசன் முதலாம் இராசேந்திரன் இரண்டாம் வீர ராசேந்திரன், முதலாம் குலோத்துங்கன், விக்கிரம சோழன், முதலாம் ராசாதி ராசன் மற்றும் குலசேகரப் பாண்டியன், கோ. மாறவர்மன், விக்கிரம பாண்டியன், சடா வர்மன் சுந்தர பாண்டியன், பராக்கிரம பாண்டியன், ஸ்ரீ வல்லப தேவன், விருப்பன்ன உடையார், கிருஷ்ண தேவராயர், துக்கோஜி போன்ற மன்னவர்களின் கல்வெட்டுகள் இதில் அடங்கும்.

## 325. (பதினெண்புராணத் தெளிவு)

**அ.** **148:326;** **ஆ.** *21-69 (37)* ஏடுகள்; (இடையே பல ஏடுகள்; **இ.** 22 x 2.5 செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** தெளிவான எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

பணிந்து பணிந்து வலம் வருதல்
பயிலும் பாதப் பிதக்கணத்திற்
தணிந்த நல்லப் பலனதிகள்
தலத்துள் வீதி கோயிலினுந்
துணிந்த அங்கப் பிதக்கணந்தான்
சூழ்வார் பலனுக் களவின்றே
அணிந்த மதிவே ணியன் பாத
மடைவார் பவங்க ளடையாரே (ஏடு 30; பா.23)

முடிவு

திருவருட் சூதர் சொல்வார்
செகத்தினுக் குறுதி யாக
மருவுநீர் வினாய தல்லால்
மாதவ முனிவீர் நீவிர்

தெருள்கிலாப் பொருளொன் றுண்டோ
தெளிந்தருள் வியாசர் வாக்கின்
வருமுறை சொன்னே னென்னே
மகிழ்ந்துவீற் றிருந்தார் தாமே (12)

மானிலம் வாழ்க பெய்யு மழைமுகில் வாழ்க வென்று
மானிரை வாழ்க மேன்மை யந்தணர் வாழ்க மன்னர்
கோனெறி வாழ்க வீசன் குலவிய பூசை வாழ்கத்
தானமுந் தவமும் வாழ்க சங்கர னடியார் வாழ்க (13)

கற்பகன் துணை

## குறிப்புரை

நூற்பெயர் குறிப்பிடப்பெறவில்லை. எனினும் 23 ஆவது ஏட்டின் பின்புறம் மூர்த்திச்சருக்கம் முற்றும் என்று முடித்து அடுத்து 'தர்மம் பூசைச்சருக்கம்' என்று தொடங்குகிறது. அதன் முதற் பாடலில்

''.... செல்வத் தவமா மலையே
சிவனா ரருளிச் செய்த
சொல்லிற் பன்ம ரொன்பான்
றூய புராணத் தெளிவே
கல்வித் தகமெஞ் ஞான
நயக்குஞ் சூத முனியே'' (1)

என்னும் பாடலில் பதினெண்புராணத் தெளிவைக் கூறுமாறு பிறமுனிவர்கள் வேண்டுவதாக அமைகிறது. எனவே இந்நூலுக்குப் 'பதினெண்புராணத் தெளிவு' என்று பெயர் கொடுக்கப்படுகிறது.மூர்த்திச் சருக்கம் முடிந்து 'தர்மம் பூசைச் சருக்கம்' என்ற தலைப்பு காணப்பெறுகிறது. (ஏடு-23). ஆனால் அச் சருக்க முடிவில் (ஏடு. 41-பின்புறம்) ராம பூசைச்சருக்கம் முற்றும் என்று எழுதப்பெற்றுள்ளது. இடையில் அச் சருக்கம் தொடங்குவதாக இருக்க முடியும் (ஏடுகள் இல்லை). அடுத்து 'அரம்பை சாபந்தீர் சருக்கம்' (ஏடு 51) யாழ்ப்பாணருக்கருளிச் செய்த சருக்கம் (ஏடு-61) என்னும் சருக்கங்கள் உள்ளன.

## 326. பரஞ்சோதி திருவிளையாடல்

**அ.** 140:298; **ஆ.** *1-348* ஏடுகள்; **இ.** 38 x 3.6 செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** சில ஏடுகள் சற்று சிதைந்துள்ளன; முதலிலும் இடையிலும் சில ஏடுகள் இல்லை; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

திருநகரச் சிறப்பு

**திரைய ளிப்பவுந் திரைபடு தீம்புனல் வேலிக்**
**கரைய ளிப்பவுங் கரையிலா நிரைபடு கானத்**
**தரைய ளிப்பவுந் தரைகழித் தூன்றிவிண் டாங்கும்**
**வரைய ளிப்பவும் வாங்கிவாய் மடுப்பன மாடம் (60)**

### முடிவு

63. சமணனைக் கழுவேற்றுப் படலம்

**அவ்விரு பேருங் கூட வடைந்துபொற் கமலம் பூத்த**
**திவ்விய தீர்த்தந் தோய்ந்து சேனெடுங் கண்ணி பாக**
**நவ்வியங் கமலச் செங்கை நாதனைத் தாழ்ந்து வேந்தன்**
**வெவ்விய வெப்பு நீத்தார் தொழுதிது வினவு கின்றார் (4)**

### குறிப்புரை

திருநகரச் சிறப்பின் *60* ஆவது பாடல் முதல் நூல் இருக்கிறது. தொடர்ந்து வரும் சங்கப் பலகை கொடுத்த திருவிளையாடல் படலம், திருவாலவாயன் திருளையாடல் படலம், பலகையிட்ட படலம், பரிநரியாக்கி வையை அழைத்த படலம், குண்டோதரனுக்கன்னமிட்ட படலம், ஏழு கடல் அழைத்த படலம், மலையத்துவசனை அழைத்த படலம், இந்திரன் முடி காத்த படலம், ஆனை யெய்த திருவிளை யாடற் படலம், பழியஞ்சின படலம், மாயப்பசு வதைத்த படலம், அட்டமாசித்தி உபதேசித்த படலம், தண்ணீர்ப் பந்தல் வைத்த படலம், விறகு விற்ற படலம், வேதத்துக்குப் பொருளுரைத்த படலம், வருணன் விட்ட கடலை வற்றச் செய்த படலம், பலகை கொடுத்த படலம், சமணனைக் கழுவேற்றுப் படலம் முதலான படலங்கள் முழுமையாக

உள்ளன. 63 ஆவது படலமாகிய சமணரைக் கழுவிலேற்றிய படலத்தில் நான்காவது பாடல் முடியக் காணப்பெறுகிறது. அச்சு நூலினும் சிற்சில வேறுபாடுகள் காணப்படுகின்றன.

## 327. நளன் கதை

**அ.** 65:93; **ஆ.** 1–124(108) ஏடுகள்; **இ.** 38.5 x 3 செ.மீ.; **ஈ.** 7–8 வரிகள்; **உ.** ஏடுகளில் சிதைவும், துளைகளும் உள்ளன; இடது பக்க ஓரப் பகுதிகள் சிதைந்துள்ளன; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

நளச்சக்ரவர்த்தி மகானுபாவனுடைய
புண்ணிய சரித்திரம்

மிக்க வேத வியாசர் விளம்பிய
இக்க தைக்கிய லீன்றருள் செய்திட
முக்கண் வெற்பினை மும்மத வாரியை
கைக்குள் ஐக்கனை கைதொழு தேத்துவாம்
.....

தோத்திரப் பாயிரம் முற்றும்.

நூல்

.. வதிஷ்டர், வால்மீகர் மற்றுமுண்டாகிய ரிஷி ஈஸ்வரர்கள் .. முதலாகிய பேரையும் மனத்திலே தானம் பண்ணி ஸ்ரீஹரி மகா விஷ்ணுவாகிய மூர்த்தியைத் தண்டம் சமர்ப்பித்து செனமே ஜெயமகாராஜன் சொன்ன அஞ்சாம் வேதமாகிய பாரதக் கதையிலே சாரமாய் இருக்கும் நவரசம் போல ருசிக்கப்பட்ட நளச் சக்கரவர்த்திக் கதையைக் கீர்த்திச்சுச் சொல்லுகிறோம்.

### முடிவு

.. மந்திரி பிரதானிகள் மற்றும் உண்டான ஜனங்களையும் பார்த்து நளச்சக்ரவர்த்தி ராசா சொல்லுகிறார். .... சனங்களே அந்த நாளிலே சனியேஸ்பரர் என் பேரில் சலம் பிடித்து, பகைகள் வைத்துச் சாதிச்சார். அதை நான் அறியமாட்டாமல் போனேன். நீங்கள் அறிய மாட்டீர்களா, நாங்கள் பண்ணின

கர்மத்தை நாங்கள் தானே அனுபவிக்க வேணும். அதுக்கொன்றும் நீங்கள் கிலேசப்பட வேண்டியதில்லை. அதுக்கு முன்னே பூமியிலே மனுஷர்கள் பிறக்குறவர் யிறக்குறவர் தவிர குறவர்யென குறவர் யெங்கற ஞாயம் நீங்கள் அறியீர்களா? அவரவர் விதியினுள்ளப் பிறகாரம் அனுபவிக்க வேணும் புஷ்கரராசா தானென்ன செய்வார் சனியீஸ்பரர் தானென்ன செய்வார். யெங்கள் கர்ம வசத்தினாலே நாங்களகப்பட்டோம். விறுதாபிலே நீங்களேன் துயரப்படுகுறீர்கள். ஆயாசப் பட வேண்டாம். நாங்கள் வெகு கஷ்டப்பட்ட படியினாலே நீங்களெல்லோரும்....

**குறிப்புரை: நளச் சக்கரவர்த்தி மகானு பாவனுடைய புண்ணிய சரித்திரம்**

நளச் சக்ரவர்த்தி கதை உரைநடையில் எழுதப்பட்டுள்ளது. நளவெண்பாவின் போக்கிலேயே முழுமையாகக் கதையெ ழுதப்பட்டுள்ளது. ஆயினும், பேசுகின்ற எளிய நடையில், பெரும்பாலும் கொச்சைச் சொற்கள் கலந்த நடையில் எழுதப்பட்டுள்ளது. காண்டம் முதலிய உட்தலைப்புகள் ஏதும் கொடுக்கப்பெறவில்லை. சுவடியின் இடது ஓரம் முழுமையும் சிதைந்துள்ளமையால், உட்தலைப்புகள் ஏட்டு எண்கள் போன்றவற்றை அறிய இயலவில்லை. நளன் தமையந்தி காதலும், அவர்களது திருமணமும், இவர்களுக்குக் குழந்தை பிறப்பதும், கலிபற்றிக் கொள்வதும் இக்கதையில் விளக்கப்பட்டுள்ளது.

## 328. நளன் கதை

**அ.** **160:343;** **ஆ.** *1–145* ஏடுகள்; **இ.** 26 x 3.5 செ.மீ.; **ஈ.** *9–10* வரிகள்; **உ.** ஓரளவு சிதைவு; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

ஆங்கது கேட்டவா னரசன் பொற்பினால்
வீங்குதோண் மாரனை வென்ற நீயலால்
யாங்குள ரவன் றொடுத் தெய்யு மின்னருப்
பூங்கணை யால்வருந் துயரம் போக்குவாய்

(ஏடு – 56 – பா.26)

முடிவு

ஆழி சூழ்புவி முழுவது மாழியொன் றுருட்டி
வாழி நல்லறம் புரிதரு மகம்பல வியற்றிச்
சூழி மால்வரைப் பிடருனு சுமையொழிந் தாற்றிப்
பாழி யம்புயத் துலகெலாம் பரித்தினி திருந்தான் (15)

அரசாட்சிப் படலம் முற்றும்

நளன் கதை முற்றும்

பிற்குறிப்பு

மாகத நாயகி சமேத ஸ்ரீபூமிநாத சுவாமி பாதார விந்தமே துணை. 988–ஆம் வருஷம் பங்குனி மாதம் 7–ஆம் தேதி குருவாரமும் அமரபட்சத்துத் த்விதியையுஞ் சுபயோக சுபகரணமுங் கூடின அத்த நட்சத்திரத்தில் எழுதிமுகிந்தது.

குறிப்புரை

நளன் வரலாறு விருத்த நடையில் பாடப்பெற்றுள்ளது. எனினும் முதல் 55 ஏடுகள் பழுதடைந்து முழுப் பாடல்களையும் காண முடியாத நிலையில் உள்ளன. நாட்டுப் படலம், நகரப் படலம், அன்னத்தைக் கண்ணுற்றப் படலம், அன்னத்தைத் தூது விட்ட படலம், கைக்கிளைப் படலம், சந்திரோ வாலம் பனப் படலம், மனந்தோவு வாலம் பனப் படலம், இந்திரப் படலம், நளன் தூது சென்ற படலம், போர்புரி படலம், மணம்புரி படலம், கலிதோன்று படலம், இளவேனிற் படலம், போது கொய் படலம், புனல் விளையாட்டுப் படலம், சூதாட்டுப் படலம், நகர்நீங்கு படலம், கானம் புகு படலம், பிரிவுறு படலம், வெற்றுருவமைந்த படலம், கலிநீங்கு படலம், தேவியைக் கண்ணுற்ற படலம், அரசாட்சிப் படலம் எனப் பல படலங்களாக இயன்று முடிவு பெற்றுள்ளது.

## 329. நளன் சரித்திரம்

**அ.** 106:210; **ஆ.** 8-89 (98) ஏடுகள்; **இ.** 33 x 4 செ.மீ.; **ஈ.** 9–10 வரிகள்; **உ.** நன்று; ஆங்காங்கே சில துளைகள்; முதலும் இறுதியுமான ஏடுகள் இல்லை; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

கொடியன மகளிர் தங்கள்
குழையும் நுண்மருங்கே வாளாற்
படுகொலை புரிவர் மாதர்
படைநெடுங் குவளைக் கண்ணே
அடிமிசை முறையிட் டென்று
மரத்துவ சிலம்பே சூழ்ந்து
கடிமது நுகர்வ தன்னோ
கருங்குழர் காமர் வண்டே

முடிவு

**எ-து –** அப்படி வந்த புட்கரண், வாருங்கொல் வாசல் காவல்காரரே நான் வருகிற சேதி ராசாவுக்கு அறியப் பண்ணுங்கள் என்று சொன்னான். அந்தப்படி அவர்கள் போய்ச் சொன்ன உடனே கூர்மை பொருந்தி வேற்கரனாகிய நளன் அவரை அழைத்து வாருங்கள் என்று சொன்னான். அந்த வார்த்தையை வாசல் காவலர் இவனுடனே சொல்லி, வாருமென்று அழைத்துப் போக புக்கரன் நளனிருக்கிற கொலு மண்டபத்திலே வந்தானென்றவாறு....

குறிப்புரை

**பாடல் உரையுடன் உள்ளது.** நளனுடைய வரலாறு கூறப்படுகின்றது. நாட்டுப் படலம், நகரப் படலம், சந்திரவால படலம், நகர் நீங்கு படலம், பதினாலாவது மணம் புரிபடலம், பதினைந்தாவது மீட்சிப் படலம், பதினாறாவது கலி தோன்று படலம், பதினேழாவது இளவேனிற் படலம், போது கொய் படலம், புனல் விளையாட்டுப் படலம், சூதாடு படலம் முதலான இருபதுக்கு மேற்பட்ட படலங்களால் இயற்றப்பட்டுள்ளது. பாடல்களுக்குத் தொடரெண் இல்லை. ஒவ்வொரு படலமும் வரிசை எண்களையே பெற்றுள்ளன.

## 330. நைஷதம்

**அ.** 501:762; **ஆ.** *1–161* ஏடுகள்; **இ.** 25 x 5 செ.மீ.; **ஈ.** *10,11* வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

தலைவிரி கடுக்கை மாலை தனிமுதற் சடையிற் சூடும்
குழவி வேண்டி களிற்ற கோட்டது குறையென் றெண்ணி
புழைநெடுங் கரத்தாற் பத்திபொற்புற் வினைத்து நோக்கும்
மழைமதக் களிற்றின் செய்ய மலரடி சென்னி சேர்ப்பாம்

கருவி மாமழை கலைமக ளுருவென விளங்கி
மிருவி சும்பிடை படந்து சென்றின மணிகொழிக்கும்
பரவை வெண்டிரை மெந்துயர் பனிவரை யுயிர்த
வுருவ வோடரித் தடங்க நாளுருக் கோடுமீண்ட (1).

முடிவு

ஆழிசூழ் புவிமுழுவது மாழியொன் றுருட்டி
வாழிநல் லறம்புரி தருமகம் பலவாற்றிச்
சூழிமால் வரைப் பிடருறு சுமையொழிந் தாற்ற
பாழியம் புயத் துலகெலாம் பரித்தவ னிருந்தான் (15)

ஆகப்படலம் 2க்குச் செய்யுள் விருத்தம் 1067.

குறிப்புரை

அதிவீரராம பாண்டியரின் 'நைடதம்' எனும் இந்நூல் நாட்டுப் படலம், நகரப் படலம், அன்னத்தைக் கண்ணுற்ற படலம், அன்னத்தைத் தூதுவிட்ட படலம், இந்திரன் படலம், கலிதோன்றும் படலம், புனல் விளையாட்டுப் படலம், சூதாடும் படலம், நகர் நீங்கு படலம், தேவியைக் கண்ணுற்ற படலம், போர்புரி படலம், அரசாட்சிப்படலம் என 28 படலங்களையும், 1067 பாடல்களையும் கொண்டது. அச்சுநூலினின்றும் வடிவில் பல இடங்களில் மாறுபடுகிறது.

## 331. பாகவதம்

**அ. 81:182; ஆ.** *1-37(34)* ஏடுகள்; **இ.** 25 x 3.5 செ.மீ; **ஈ.** *9-10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பதினோராம் காந்தத்தில் கண்ணனை
யுத்தவனத் தத்துவம் கேட்டது

களங்கனி வண்ணனைக் கண்டு காதல்கூர்
வளங்கொழும் வானவர் வனத்துப் போயபின்
விளைந்ததும் அவ்வழி விண்டு ராதனக்
குளம்கொள முன்னவ னோதி னானரோ (1)

முடிவு

தேமழை பொழியுந் தண்ணம்
செழுந்த ... ....
பூமழை பொழிய வீடு
பொருந்தினோன் புதல்வ னென்னும்
மாமழை ... ... ...
மதக்களித ணையான் பைம்பொ
னாமழை பொழியும் செங்கை
அரசுசெய் ... ... வாமே (25)

*பரீட்சித்து முற்றுப் பெற்றது.*
*(முற்றும்)*

குறிப்புரை

பாகவதம் 11 ஆம் காந்தம் மட்டும் அடங்கிய இச்சுவடியில் ‘‘கண்ணன் யுத்தவன தத்துவம் கேட்டது, தேத்தாத்திரேயர் ..... ஏதுவுக்குக் குருவைப் புத்தியினால் அடைந்து உரைத் தது, கண்ணன் உத்தவருக்கு ஞான கன்மம் உரைத்தது, கண்ணன் சனகாதியருக்குக் குணவிகாரம் உயிர்க்கில்லை என்றுரைத்தது, உத்தவருக்கு இயமம், நியமம் முதலான துரைத்தது, யோகசித்தி உரைத்தது, நான்கு வருணாச்சிரமுஞ் சுதனமும் பிறந்ததுரைத்தது, கண்ணன் கதை கேட்க மனது ஒருமைப்படும் என்று ரைத்தது, தேசகாலம் உரைத்தது, தத்துவமுரைத்தது, அந்தணன் நிந்தை பொறுத்தல், குணம் ஒன்றுடன் ஒன்று கலத்தல் உரைத்தது, பூசை உரைத்தது, கண்ணன் உத்தவனுக்கு ஞானம், உபசித்து நைமிசாரணியத்துக்கனுப்பினது, பரீட்சித்து முக்தி பெற்றது முதலான தலைப்புகளில் பாடல்கள் அமைந் துள்ளன. பதினோராம் காந்தம் முற்றுப் பெற்றுள்ளதாயினும் இடையிடையே பல பாடல்கள் காணப்பெறவில்லை.

## 332. பாகவதம்

**அ.** 97:199; **ஆ.** *1-195* ஏடுகள்; **இ.** 49 x 3 செ.மீ; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; இடையிடையே ஏடுகள் பல இல்லை; பல ஏடுகளில் துளைகள் உள்ளன; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

கடவுள் வாழ்த்து

பொன்னிறமா மெனப்புவனம் படைற்றுக் காற்றுப்
புயநிறமாய்த் தழநிறமாய்த் துடைதற்றுப் போந்து
முன்னிறவா திளைற்றுயர் முழங்கு நார
முடுகிடவே நீண்டவட விலைமெய் முந்தத்
தொன்னிறமா மண்டாண்ட மெண்ணில் கோடி
துலங்கிடவே வயற்றமைற் றுற்றூய தாய
தன்னிறமாங் குழவியெனப் பொலிந்து தோன்றுங்
தலைவனிரு தாளினையென் றலைமேல் வைப்பாம்(1)

முடிவு

விதியை யுந்தியினி னளிந்தவ னடியார்
விளம்பிய மொழியினைக் கேளாமே
வதனமே முயலும் சாமிள னிறையை
யைந்து வனற்றவனல் வெருவிச்
சுதனுடைப் பெயரை யறைந்தன் னதனா
லிவன்செயுந் துலைவிலாப் பாவங்
கதுமெனக் கெடுமோ கழறுவீ ரெனலுங்
கார்வண்ண பத்தர்கள் பகர்வார் (55)

குறிப்புரை

திருவரங்கப்படலம், ஆற்றுப்படலம், நகர்ப்படலம், நாச்சியார் திருவவதாரப்படலம், கசேந்திர மோட்சப்படலம், வராகப்படலம், கபிலப்படலம், கூர்மப்படலம், பிதுற்சக்கிர வந்திய படலம், அண்டப்படலம், வாமனப்படலம், மற்சியப்படலம், நைமிசாரணியப்படலம், அசாமிப்படலம் முதலான படலங்கள் காணப்படுகின்றன. ஆயின் இந்தப்

படலங்களின் பாடல்கள் பல காணப்படவில்லை. இறுதிப் படலமான அசாமிப் படலத்தில் மட்டும் முறையாக 55 பாடல்கள் உள்ளன. இறுதியில் 4 வெற்றேடுகள் உள்ளன.

## 333. பிரம்மோத்தர காண்டம்

**அ.** **115:224; ஆ.** *105* ஏடுகள்; **இ.** 41.5 x 2.5 செ.மீ; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; ஏட்டின் இருபக்க ஓரப் பகுதிகளும் சற்றுச் சிதைந்துள்ளன; **ஊ.** ஓரளவு கடினம்; சிறிய எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாக வில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

முதலாவது, பஞ்சாக்கரமான்மியம்

பூமேவு சதுர்முகனும் திருமாலும் போற்றிசெய்ய
தேமேவு குழலுமையாள் செழுங்குவளை விழிகளிப்ப
மாமேவு தமிழிநறும் மழைதுளிப்ப மணிமன்றந்
தாமேவு நலம்புரியும் தனிப்பொருளை வணங்குவாம் (1)

### முடிவு

தேவர்தம் பெருமான் சிறந்தவஞ் செழுத்தின்
சீர்புகழ் மாக்கதை முதலாய்
பாவநின் றகற்றும் புராணநூல் கேட்போர்
பலன்பெறல் மொழிக்கதை ஈறாய்
மேவரப் புகன்ற சிவகதை முழுதும்
விழைவுடன் கேட்குநர் அவர்தாம்
யாவர்மற் றேனும் மாலையன் முதலோர்
ஏய்தரும் சிவபதம் அடைவார் (108)

22 ஆவது புராண மகிமை கூறிய அத்தியாயம் முற்றும். பிரமோத்தர காண்டம் முற்றும். ஆகத் திருவிருத்தம் *1321*.

### பிற்குறிப்பு

ருத்ரோத்காரி வருசம், கார்த்திகை மாதம் 6ந் தேதி, சோமவார மும் மூலநட்சத்திரமும் திரிதகையும் மீனலக்கினமும் இந்தச் சுபதினத்தில் பிரமோத்தர காண்டம் எழுதி நிறைவேறினது.

முற்றும்.

குறிப்புரை

பஞ்சாக்கர மான்மியம், கன்மாடபாதன் சரிதை, சிவபூசை கண்டவன் பேறுபெற்ற அத்தியாயம், சிவபூசை கடைப் பிடித்த அத்தியாயம், பிரதோட பூசை அத்தியாயம், சிவபூசை மகிமை, உமாமகேஸ்வர பூசாபலன் முதலான 22 அத்தியாயங்கள் உள்ளன. சிவனியல்பும், பந்தபாசத்தை நீக்கும் பிரதோஷப் பூசையின் பலனும், சோமவாரத்தின் மான்மியமும், அடியவர் திறனும், சிவகவசமும், பூதியின் செயலும், பூசனைப் பொலிவும், கற்பினள் பழியகற்று மகேச்சுரம், வேத நான்கினும் விளங்கு சீருத்திரர் வீறுமோது கெணிகள் கேண்மின்களெனத் தொகுத்துச் சூதமாமுனி சொன்னதாக நூலில் குறிக்கப்பட்டுள்ளது. கேரளப் பல்கலைக் கழகச் சுவடிகள் நூலகத்தில் இதே பெயரில் மூன்று நூல்கள் உள்ளன.

இதனை இயற்றியவர் வரதுங்க இராம பாண்டியர். இவரது காலம் 16–ஆம் நூற்றாண்டு. இந்நூல் அரசியலில் மனிதருக்கு இருக்க வேண்டிய நேர்மை பற்றியும், உடம்பு யோக மார்கத்தால் பெறும் மாற்றங்கள் பற்றியும் விதந்து கூறும் சிறப்பைப் பெற்றது. தமிழில் கவச நூல் எழுவதற்கு இதுவே முதல் நூலாக அமைகிறது. இந்நூலாசிரியர் அதிவீரராம பாண்டியரின் சகோதரர் ஆவார். இவரது துணைவியாரும் தமிழ் இலக்கியத்தில் நுண்மாண் நுழைபுலம் கொண்டவர் என்பது குறிப்பிடத்தக்கது.

இவ்வாசிரியர் இயற்றிய கொக்கோகம் என்பது அறிவியல் பார்வையில் புணர்ச்சிக் கலையை நோக்குகிறது. இந்நூலுக்கு முன்னும் பின்னும் இதுபோன்ற ஒரு நூல் இல்லை என்றே கூறலாம். போக மார்கங்களைப் பற்றிப் பகர்வதால் இந்நூல் தனக்குரிய தகுதியை இழந்து காணப்படுகிறது.

தஞ்சை பாபதி முதலியார் பிரமோத்ர காண்டத்துக்கு உரை செய்துள்ளார்.

## 334. பெரியபுராணம்

**அ. 98:200; ஆ.** 1-195 ஏடுகள்; **இ.** 29 x 3 செ.மீ.; **ஈ.** 9 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** படிக்கக்கூடிய எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவ
னிலவு லாவிய நீர்மலி வேணிய
னலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்

ஊன டைந்த வுடம்பின் பிறவியே
தான டைந்த வுறுதியைச் சாருமாற்
றேன டைந்த மலர்ப்பொழிற் றில்லையுண்
மாந டஞ்செய் வரதர் பொற்றாடொழ (2)

முடிவு

ஆங்கு மற்றவர் துணிவறிந் தவர்தமை யறிய
நீங்கு மாதவர் விசும்பிடைக் கரந்து நீண்மொழியா
லோங்கு நாவினுக் கரசனே யெழுந்திரென் றுரைப்ப
தீங்கு நீங்கிய யாக்கை கொண்டெழுந்தொளி திகழ்வார் (368)

குறிப்புரை

**1-386 பாடல்கள்.** திருத்தொண்டர் புராணம் திருமலைச் சருக்கத்தில் நாட்டுச் சிறப்பு, திருவாரூர் சிறப்பு, மனுச்சக்கர வர்த்திப் புராணம், திருகூட்டச் சிறப்பு, சுந்தரநாயனார் திருஅவதாரம் என்பன முதல் 49 ஏடுகளிலும், தொடர்ந்து தில்லைவாழ் அந்தணர் சருக்கம், திருநீலகண்ட நாயனார் புராணம் முதலாக அமர்நீதி நாயனார் புராணம் ஈறாக 71 ஏடுகளிலும், இலைமலிந்த சருக்கம், ஏனாதி நாயனார் புராணம் தொடங்கி ஆனாய நாயனார் புராணம் முடிய 116 ஏடுகளிலும், தொடர்ந்து வரும் திருநின்ற சருக்கம் முதலியன 117 முதல் 195 ஏடுகளிலும் காணப் பெறுகின்றன. இறுதியில் 3 வெற்றேடுகள் உள்ளன.

சைவ சமயத்தின் அடியார்களைப் பற்றிப் பேசும் சிறப்புறு நூல்களுள் இதுவே தலைசிறந்தது. திருதொண்டத் தொகையாகவும், நம்பியாண்டார் நம்பி அருளிய திருத்தொண்டர் திருவந்தாதியை வகையாகவும் கொண்டு இந்நூல் பெரியபுராண விரிநூலாக அமைந்துள்ளது.

பார்ப்பனர் முதல் பறையர் வரை சாதிப் பாகுபாடு இன்றித் தொண்டர்களின் பெருமை பேசப்படுகிறது.

இரண்டாம் குலோத்துங்கன் முதலில் தழுவியது சமண சமயமே. சேக்கிழார் பெருமான் தான் அவனைச் சைவ சமயத்திற்கு மாற்றினார். சோழ வேந்தனின் விருப்பிற் கிணங்கவே இந்நூல் சைவசமய அடியார்களின் பெருமை பேசும் நூலாகச் சேக்கிழாரில் படைக்கப்பட்டது.

இந்நூலுக்கு முதற்பாடலைச் சிவபிரான் அசரீரியாக நின்று உலகெலாம் என்ற சொல்லை அடியெடுத்துக் கொடுத்ததாக ஒரு செவிவழிச் செய்தி உண்டு. சமணசமயம் சேக்கிழார் காலத்தில் மறையும் நிலையில் இருந்த போதும் சேக்கிழார் எவ்விடத்திலும் நிந்தனை செய்யவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. சேக்கிழார் குலோத்துங்கச் சோழனுக்கு, கி.பி. *1133* முதல் *1150* வரை முதலமைச்சராக இருந்து பணியாற்றியவர். அக்காலக் கட்டத்தில் குன்றத்தூர் என்ற ஊரில் திருநாகேசுரம் என்ற பெயரில் ஒரு கோயிலை உருவாக்கி அக்கோயிலிலே தன் இறுதி வாழ்நாளைக் கழித்ததாக வரலாற்றறிஞர் மு. அருணாசலம் கூறுவர். அநபாயச் சோழன் இப்பெரிய புராணத்தைச் செப்புத் தகடுகளில் பதித்ததாக வரலாறு உண்டு. இந்நூலுக்கு ஆளுடைய நம்பி ஸ்ரீ புராணம் என்ற பெயரும் உண்டு எனத் திருவொற்றியூர் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது.

சுப்பிரமணிய முதலியார் இந்நூலை உரையோடு கூடிய ஆறு தொகுதிகளாக வெளியிட்டார் என மு. அருணாசலம் கூறுகிறார். சேக்கிழார் பெயரில் உமாபதி சிவம் சேக்கிழார் புராணம் என்ற பெயரில் ஒரு நூலையும், திரிசிபுரம் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, சேக்கிழார் பிள்ளைத் தமிழ் என்ற பெயரில் ஒரு நூலையும் படைத்து ஆசிரியரையும் ஆசிரியரது நூலையும் சிறப்பித்துள்ளார்.

பன்னிரு திருமுறையில் இந்நூல் *12*–ஆம் திருமுறையாக இயங்குகிறது. சோழ வேந்தனே இவ்வாறு இதனை *12*–ஆம் திருமுறையாக இணைத்தான் என்ற குறிப்பும் உள்ளது. யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர், சென்னை, வித்யானு பாலன எந்திர சாலையில் *1884*–இல் வெளியிட்டார்.

## 335. பெரிய புராணம்

**அ. 129:243; ஆ.** 37 ஏடுகள்; **இ.** 36 x 5.9 செ.மீ; **ஈ.** *17-18* வரிகள்; **உ.** தாளிப்பனை; நல்லநிலை; சிறுஎழுத்து; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

நூல், திருமலைச்சிறப்பு

பொன்னின் வெண்திரு நீறு புனைந்தெனப்
பன்னு நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கு மறிவரி யானென்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை (1)

### முடிவு

இலை மலிந்த சருக்கம்
மானக்கஞ்சார நாயனார் புராணம்

குழைக்கலையும் வடிகாதிற் கூத்தனா ரருளாலே
மழைக்குதவும் பெருங்கற்பின் மனைக்கிழத்தி யார்தம்பால்
இழைக்கும்வினைப் பயன்சூழ்ந்த இப்பிறவிக் கொடுஞ்சூழற்
பிழைக்குநெறி தமக்குதவப் பெண் கொடியைப்
பெற்றெடுத்தார் (12)

### குறிப்புரை

**'உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்'** என்று தொடங்கும் பத்துப் பாடல்களையுடைய பாயிரமும், திருமலைச் சருக்கத்தில் திருமலைச் சிறப்பு, திருநாட்டுச் சிறப்பு, திருநகரச் சிறப்பு ஆகியனவும் முதலில் உள்ளன. அடுத்துத் தில்லைவாழ் அந்தணர் சருக்கத்தில், மனுசக்கரவர்த்தியார் புராணம், வைகாச்சியார் புராணம், இயற்கை நாயனார் புராணம், அமர்நீதி நாயனார் புராணம் ஆகியவை காணப்படுகின்றன. முதலிரண்டு புராணங்களும் அச்சுநூல்களில் காணப் பெறாதவை. இதனை அடுத்தச் சருக்கமான இலைமலிந்த சருக்கத்தில், எரிபத்தநாயனார் புராணம், ஏனாதி நாயனார் புராணம், கண்ணப்ப நாயனார் புராணம் ஆகியவை காணப்படுகின்றன. இறுதியாக மானக்கஞ்சார நாயனார் புராணத்தில் முதல் 12 பாடல்கள் மட்டுமுள்ளன. வெற்றேடுகள் தொடக்கத்தில் இரண்டும். இறுதியில் ஐந்தும்உள்ளன. மரச்சட்டங்களில் அழகுற வர்ண ஓவியம் வரையப்பட்டுள்ளது.

## 336. பெரிய புராணம்

**அ. 171:364; ஆ.** *1-280* ஏடுகள்; **இ.** 35 x 4 செ.மீ; **ஈ.** *9-11* வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை; இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

திருத்தொண்டத்தொகை

தில்லைவா ழந்தணர்தம் மடியார்க்கு மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத வியற்பகைக்கு மடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கு மடியேன்

முடிவு

ஏயர்கோன்
கலிக்காமநாயனார் புராணம்
பாடிமிகப் பரவசமாய்ப் பணிவார்க்குப் பாவையுட
னீடியகோ லங்காட்ட நிறைந்தவிருப் புடனிறைஞ்சிச்
சூடியவஞ் சலியினராய்த் தொழுதுபுறம் போந்தன்பு
கூடியமெய்த் தொண்டருடன் கும்பிட்டங் கினிதமர்வார்

குறிப்புரை

திருத்தொண்டத்தொகை தொடங்கி ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம் ஈறாக உள்ளன. இடையிடையே சில புராணங்கள் மாறுபட்டமைகின்றன. சுவடியின் தொடக்கத்தில் உள்ளே உள்ள புராணங்களுக்கான அட்டவணை சில நாயனார்களுக்குரிய நட்சத்திரங்களுடன் கொடுக்கப் பெற்றுள்ளது.

## 337. பெரிய புராணம்

**அ. 220:430; ஆ.** *1-79* ஏடுகள்; **இ.** 21 x 4.5 செ.மீ; **ஈ.** *15-16* வரிகள்; **உ.** நன்று; தாளிப்பனை; **ஊ.** கடினம் ; சிறி எழுத்து. **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

வேக மாநெறி சேரும் வினைகளுந்
தாக போகம் விடாத தளர்ச்சியுஞ்
சோக வாரியி னால்வரு துன்பமும்
போக யானை முகத்தனைப் போற்றுவாம்

முடிவு

தீதுகொள் வினைக்கு வாரெஞ்
செஞ்சடைக் கூத்தர் தம்மைக்
காதுகொள் குழைகள் வீசுங்
கதிர்நில விருள்கால் சீய்ப்ப
மாதுகொள் புலவி நீக்க
மனையிடை யிருகாற் செல்லத்
தூதுகொள் பவராம் நம்மைத்
தொழும்புகொண் டுரிமை கொள்வார் (42)

ஆனாய நாயனார் புராணம் முற்றும்.

ஆகத்திருவிருத்தப்பா 971

குறிப்புரை

காப்புப் பாடல் இரண்டை அடுத்துத் **தில்லைவாழந்தணர்** என்ற பாடல் நூலின் முதலாக அமைகிறது. திருத்தொண்டத் தொகை, நம்பியாண்டார் நம்பி திருவந்தாதி, திருமலைச் சிறப்பு என்பன தொடங்கி ஆனாய நாயனார் புராணம் முடிய உள்ளன. இறுதியில் ஐந்து வேற்றேடுகள் உள்ளன.

## 338. பெரிய புராணம்

**அ. 464:712; ஆ.** 1-440 ஏடுகள்; **இ.** 42 x 3 செ.மீ.; **ஈ.** 5-7 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** படிக்கக்கூடிய எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

முடிவு

வைய நீடுக மாமழை மன்னுக
மெய்வி ரும்பிய அன்பர் விளங்குக
சைவ நன்னெறி தாந்தழைத் தோங்குக
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே (54)

வெள்ளானைச் சருக்கம் முற்றும்.

ஆகத் திருவிருத்தம் 4275

பிற்குறிப்பு

மங்கல வருசம் பங்குனி மாசம் 16 ஆம் தேதி சனிக்கிழமை துவாதசி மகம் பகல் நாழிகை 12 இல் மேல் வியாழ ஓரையில் எடுத்து.... குருசாமி நயினார் பெரியபுராணம் எழுதி நிறை வேறியது. மதுரை திருச்சுழி கணபதிக் கவிராயர் மேல் பிரதி பார்த்து எழுதினது... விசமர் பஞ்சதரைய சுப்பிரமணியம் எழுதியதைப் பார்த்து எழுதியது. பொன்னம்பலம்.

குறிப்புரை

'உலகெலா முணர்ந் தோதற்கரியவன்' (பாயிரம் - திருமலைச் சருக்கம்)
பொன்னின் வெண்திரு நீறு புனைந்தெனப்' (நூல் - திருமலைச் சருக்கம்)

என்று தொடங்கும் பாடல்களுடன் பாயிரம் தொடங்கி வெள்ளானைச் சருக்கம் முடிய முழுமையாக உள்ளது. 4275 பாடல்கள் உள்ளன அச்சு நூல்களினும் (4286) 11 பாடல்கள் குறைவாக உள்ளன. பாட வேறுபாடுகளும் மிகுதியாகக் காணப்படுகின்றன. இறுதியில் சருக்கங்களின் அட்டவணை முழுமையாக உள்ளது. அட்டவணையில் சருக்கத்திற்குரிய பாடல் எண்கள் கொடுக்கப்பட்டு ஆகத்திருவிருத்தம் 4280 என்ற குறிப்புக் காணப்படுகின்றது.

## 339. பெரிய புராணச் சாரம்

**அ.** 6:21; **ஆ.** 1-247 ஏடுகள்; **இ.** 28 x 2.5 செ.மீ.; **ஈ.** 8 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; சில ஏடுகள் சிதைந்துள்ளன; **ஊ.** தெளிவான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

தடுத்தாட்கொண்ட புராணம்

இன்னதன் மையன்என்ன அறிவரிய சிவனையுனன்
றெதிலுபம ணியபகவான்
றன்நிக றறிதருமருட் தருகுறவர் பாறகடல்
தனைஇறைவன் அருளினுண்டோர்

பன்னரிய கயிலையன் தாழ்வரையின் மாதவர்கள்
பல்லா யிரத்தர் சூழ

மன்னருள் புரிந்துவாழ் நாளினொரு நானினிற்
சிவசிவ மகாதேவனே

முடிவு

வெள்ளானைச் சருக்கம்

மாலுலகெலாம் நொடியினிற் புரந்திடும்
அரியமா தேவரா மவர்க்கு
மேலரு ளளித்தஉப மணியபக
வானுமிம் மேதினியில் உற்றெழுந்தே
சாலமகிழ் வாலங்கை கூப்பிவன்
தொண்டர்தனை யரன்தொழும் தன்மையரெனில்
சீலமிகும் ஆரூரர் பெருமையெவர்
பகருவார் சிவசிவ மகாதேவனே (28)

குறிப்புரை

பாயிரம் 8, தடுதாட்கொண்ட புராணம்-81, தில்லை அந்தணர்-2, திருநீலகண்டர்-18, இயற்பகை நாயனார்-18, ..... யாழ்பாணர்-7, வெள்ளானைச் சருக்கம்-36 முதலாகத் திருவிருத்தம் 1401 உள்ளன. 71 நாயனார் சரித்திரங்கள் சுருக்கமாகப் பாடப்பட்டுள்ளன. திருநீலகண்டர், தில்லையந் தணர், ஏனாதி நாயனார், கலையர், கஞ்ச நாயனார், அறிவாட்டாயனார், ஆயனார், மூர்க நாயனார், உருத்திர பசுபதி, முருகனார், திருநாளைப் போவார், திருநாவுக்கரை யர், மிழலைக்குறும்பர், காரைக் காலம்மை, அப்பூதி அடிகள், திருநீலநக்க நாயனார், நமி நந்தியார், சிறப்புவி நாயனார், சாக்கியர், சிறுதொண்டர், கண்ணாதர், கூற்றுவ நாயனார், நரசிங்க முனைவர், அதிபத்தர், கலிக்கம்பர், கலியனார், சத்தியார், காடவர்கோன், கனம்புல்லநாயனார், தண்டீசர், சோமாசி மாற நாயனார், நெடுமாற நாயனார், வாயிலா நாயனார், கழற்சிங்க நாயனார், திருவாரூர் பிறந்தார், முழுநீறு பூசுவார், பூச நாயனார், மங்கையற்கரசியார், சடையனார், திருஞான சம்பந்தர், யாழ்ப்பாணர், முப்போதுந் திருமேனி தீண்டுவார் முதலான உட்தலைப்புகள் உள்ளன. முதல்

ஏட்டில் ஒவ்வொரு நாயனாரைப் பற்றியும் எவ்வளவு பாடல்கள் என்றும், மொத்தப் பாடல் எண்ணிக்கை எவ்வளவு என்றும் எழுதப்பட்டுள்ளன.

எல்லாப் பாடல்களும் 'சிவசிவ மகாதேவனே' எனும் முடிவைக் கொண்டுள்ளன. சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணத்தினும் இது வேறானது.

## 340. மயிலை புராணம்

**அ.** **230:444;** **ஆ.** *1-128* ஏடுகள்; **இ.** 29 x 3 செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** மிக நன்று; **ஊ.** அழகிய எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

முற்குறிப்பு

சோபகிருது வருசம் தைமாதம் 22 ஆம் தேதி எழுதத் தொடங்கின திருமயிலாப்பூர் தலபுராணம்.

தொடக்கம்

கஞ்சரா னனத்தவர் கதிர்பொங் காழிகா
னஞ்சரா னனத்தவர் நாளும் வாழ்த்திடுங்
குஞ்சரா னனற்பெருங் கோவின் பொற்சரண்
வஞ்சரா னனற்கவி வழாது போற்றுவோம்.
பொன்பூத்த கமலமலர்ப் புத்தேளும்
பூவைவண்ணப் புனித னுக்கு
தேன்பூத்த கடவுளருஞ் சதுமறையும்
பாவவருட் டிமிலேற்றண்ணல்
கோன்பூத்த மயிலைநகர்ப்
பூம்பாவை யீசறெனுங் குழைகண் ஞான
மீன்பூத்த திருவடித்தா மரையையன்பின்
வணங்கியென்றும் வியந்து வாழலாம் (1)

முடிவு

வாழ்கவருள் வாழ்கமறை வாழ்கவுல கெல்லாம்
வீழ்கமறை திங்கடொறு மென்னெறிக ளோங்க
யாழ்கவினை மன்னவனு மாற்றிடுக செங்கோல்
சூழ்கநல மின்பெவருந் துய்த்திடுக வென்னும் (89)

திருவிழாச் சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் பதிமூன்றுக்குத் திருவிருத்தம் 650.

### பிறகுறிப்பு

குரோதி வருசம் வையாசி மாதம் 10 ஆம் தேதி புதவாரம் பிரதமையும் ரோகிணி நட்சத்திரமும் யிப்படிப் பட்ட சுபதினத்தில் மயிலைப் புராணம் எழுதி முடிந்தது.

### குறிப்புரை

காப்புப்பாடல் உள்ள ஏட்டிற்கு எண் இல்லை. 128 ஆம் ஏட்டில் சருக்கங்களின் பெயர்கள் முதலிய விபரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. சருக்கங்கள் தனித்தனிப் பாடல் எண்களைப் பெறுகின்றன. பாயிரச்சருக்கம், நாட்டுச் சருக்கம், நகர்ச்சருக்கம், பொதியமாமலைச் சருக்கம், தலவிசிட்டப் பொழிப்புரை சருக்கம், பளவதியள் சாபச் சருக்கம், பளவதி அர்ச்சினைச் சருக்கம், வேதம் பூசித்த சருக்கம், குமரவேளருச்சினை சருக்கம், பிராமணருச்சனை சருக்கம், சுக்கிரனருச்சினைசருக்கம், தீர்த்தசருக்கம், திருவிழாச்சருக்கம் ஆகச் சருக்கம் பதிமூன்றுக்குத் திரு விருத்தம் 650 என்ற குறிப்புள்ள இறுதி ஏடு நூல்பற்றிய விபரத்தைத் தருவதாய் அமைகின்றது. தொடக்கத்தில் மூன்று வெற்றேடுகள் உள்ளன.

## 341. வள்ளியம்மன் புராணம்

**அ.37:61; ஆ.** *1-183* ஏடுகள்; **இ.** 35.5 x 2.5 செ.மீ; **ஈ.** *6-8* வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

பாயிரச்சருக்கம்

திகடச் சக்கரச் செம்முகம் ஐந்துளான்
சகடச் சக்கரத் தாமரை நாயகன்
அகடச் சக்கர ஆவுரை விண்மணி
விகடச் சக்கர மெய்பதம் போற்றுவாம்

நூல்

சீவகன் கேள்வி நாடும் சிறந்த பாலாழி வாறும்
பூவக லோக விண்ணும் புணரி யாறுதித்த வாறும்
தேவ கற்பகத்தின் வாறும் திலந்த மாம்குமரி வாறும்
மாவகன் தட்சண் வாறும் மாமாய்கை வாறும் சொல்வாம்
(ஏடு.I; பா.1)

முடிவு

பொருந்துகா சிவனார் தந்த
போதாயென் பகவான் செய்த
திருந்துதிச் சாபம் நீங்கிச்
சீவகன் வாழ்ந்த காதை
மருந்தெனும் மொழியாள் போல
வள்ளியார் புராண மான
அருந்தமிழ்க் கற்றோர் கேட்டோர்
அரன்பதம் பெறுவர் தாமே (149)

பிற்குறிப்பு

இராட்சச வருஷம் மார்கழி மாதம் **13** ஆம் தேதி புதவாரம் திருதியை, பூச நட்சத்திரம். இப்பேர்ப்பட்ட சுபதினத்தில் சின்னதம்பி வாத்தியார் வள்ளியம்மை புராணம் எழுதி நிறைவேறியது. சுபம்.

குறிப்புரை

ஏட்டெண் இல்லாத முதல் இரண்டு ஏடுகளில் ஒரு பக்கம் மட்டுமே எழுதப்பட்டுள்ளன. முதல் ஏட்டின் இடதுபக்க ஓரத்தில் ''குமார சுவாமியார் கடாட்சம் உண்டாயிரட்சிக்க வேணும் என்று படிக்குறேன்'' என்று எழுதப்பட்டு இரண்டு காப்புப் பாடல்களும், அடுத்த ஏட்டில் இரண்டு காப்புப் பாடல்களுமாக 4 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. தெய்வவணக்கம், அவையடக்கம், சீவகன் கேள்வி, நாட்டுச் சருக்கம், கற்பகச் சருக்கம், குமரி உற்பவம், தக்கன் யாகம், மாமாய்கை வரம், சூரன் உற்பவச் சருக்கம், சூரன் வரம் பெறுசருக்கம், மகவான் வரம்பெறு சருக்கம், காமதகனம், சிவன் கலியாணம், கந்தர் உற்பவம், மகாசாதன் உற்பவம்,

காவேரி உற்பவம், இந்திராணி சிறை, தேவர் முறையீடு, சுவாமி படை எழுச்சி, மகேந்திரன் கேள்வி, வீரவாகு தூது, அசுரர்கள் பாடு, ரேணுகை உற்பவம். கருங்கடல் உற்பவம், நெய்தல் நிலம், மருதநிலம், முல்லை நிலம், பாலை நிலம், குறிஞ்சிநிலம், காளி உற்பவம், கார்த்திகை விரதம், நவகண்ட காட்சி, சுக்கிரவாரப்பலன், பதுமநாயகி தவம், தவம் சோதித்தல், தவக்காட்சி, மானின் வரவு, சைவரிஷி வரலாறு வள்ளியம்மன் உற்பவம், மெய்வகைச் சருக்கம், வனக் காட்சி, செந்தில் சருக்கம், பாணிச்சருக்கம், சசிசருக்கம், விநாயகர் உற்பவம், வண்டோதரி சருக்கம், வானவர் அமுது மறுத்த சருக்கம், உடன்போக்குச் சருக்கம், வள்ளியம்மை கலியாணச் சருக்கம் முதலான தலைப்புகள் உள்ளன. *60* காதைகள். *1345* விருத்தப் பாக்கள். சரதையூரைச் சார்ந்த கணக்குத் தொழில் புரியும் புலிப்பாகை மூர்த்தி என்பவரால் எழுதப்பட்டதாக *148* ஆம் பாடலால் அறிய முடிகின்றது. சின்னதம்பி வாத்தியார் என்பவரால் எழுதப்பெற்றதாகவும் குறிப்புக் காணப்படுகிறது. தொடக்கத்தில் நான்கும், இறுதியில் ஒன்றுமாக வெற்றேடுகள் உள்ளன.

## 342. வாதவூரார் புராணம்

**அ. 115:223; ஆ.** *43* ஏடுகள்; **இ.** 41.5 x 2.5 செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நன்று; ஏட்டெண்கள் உள்ள பகுதிகள் சற்றுச் சிதைந்துள்ளன; **ஊ.** ஓரளவு கடினம்; சிறிய எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

துங்கமத கும்பஉயர் தும்பிமுகன் எம்பிசீர்
தங்கி நெகிழுஞ்சிறு சதங்கைகள் புலம்பவே
மங்கையுமை கண்குளிர வந்துலவு கின்றதாள்
அங்கைமலர் கொண்டுமிகும் அன்புடன் இறைஞ்சுவாம் (1)

அற்புத னிருந்தருள பெருந்துறை யடைந்தே
சிற்பர முணர்ந்து திருவாசக முறைப்பார்
முற்பக லருந்தவ முயன்று பெருமன்பால்
உற்பவ மொழிந்தமை மொழிந்திட ரொழிப்பாம்

முடிவு

நீற்றிணை அணிந்தவ நின்னிறைவ னென்றே
சாற்றிறை உயிர்க்கிடர் தணிப்பதென வென்றாய்
தோற்றி யுளதம்புதல்வர் துன்பமுறு மன்னோய்
மாற்றும்வகை அன்னையர் அருந்திய மருந்தாய் (76)

பிற்குறிப்பு

ருத்ரோத்காரி வருசம் சித்திரை மாதம் 13ந் தேதி சோம வாரமும் ரேவதி நட்சத்திரமும் திரையோதசியும் கற்கடகமும் கூடின சுபதினத்தில் வாதவூர் புராணம் 543 திருவிருத்தம் எழுதி நிறைவேறியது. முற்றும்.

குறிப்புரை

மாணிக்கவாசகரின் வரலாற்றைப் புராணமுறையில் விளக்கிச் செல்லுகிறது. திருப்பெருந்துறைச் சருக்கம், மண்சுமந்த சருக்கம் ஆகியவை முற்றுப் பெற்றுள்ளன. இறுதியில் சில ஏடுகள் இல்லாதிருப்பினும் எழுதிய நாள், திதி முதலியன அடங்கின இறுதி ஏடு இருக்கிறது.

## 343. வாதவூரார் புராணம்

**அ.** 122:235; **ஆ.** 155 ஏடுகள்; **இ.** 36 x 3 செ.மீ; **ஈ.** 7–8 வரிகள்; **உ.** ஏடுகள் சற்றுச் சிதைந்துள்ளன; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

திருப்பெருந்துறைச் சருக்கம்

பழமறை முழுதுண ரந்தணர்
பலர்தொழ நடமுயல் கின்றவர்
மழுஉழை கரமிசை கொண்டிட
மருவிய கவுரி மகிழ்ந்திட
விழைதரு மிரசத பொங்கொலி
விடுமுயர் கயிலை விலங்கலில்
அழகுரு தமணிய மண்டப
மதனிடை அருங்கோ டிருந்தனன்

(எ–து) பழமறையாகிய பழமையாகிய வேதங்கள் முழுதுமுணர்ந்து திரிந்து அறிந்திருக்கும் அந்தணராகிய தில்லை மூவாயிரவர், பிராமணர், பெரியோரும் பலரும் மற்றுமுள்ள முனிவர்களும் தொழுது வணங்கிட நடனமுயல்கின்றவர் முயற்சியாய் நடனம் பண்ணி பட்ட சிதம்பரேஸ்வரர் .... நடுவினையாகிய சிங்காதனத்திலே அருள்கொண்டு வீட்டிருந்தார் பரமசிவன் என்றவாறு.

முடிவு

**தேக்கிய வருளி னன்பு**
**சிறந்தவர் எல்லாம் சொல்லும்**
**வாக்கினில் ஒருவன் சென்று**
**மலர்கொண்டு வணக்கம் செய்து**
**பூக்கமழ் சடையோன் வைத்த**
**பொத்தகம் தன்னைச் சேமம்**
**நீக்கியே ஓதி னார்முன்**
**நீதிகொள் ளகவவ நாலும்**

(எ–து) தேக்கி இருக்கும் அருளின் அன்பு சிறந்தவராகிய தில்லை மூவாயிரவர் எல்லாரும் சொல்லிய வாக்கின் படிக்கு அதுக்கு யோக்கிய வானனை ஒருவன் சென்று சேர்ந்து அந்தப் புத்தகத்துக்கு மலர் கொண்டு அர்சித்துத் தீபதூபம் கொண்டு வணக்கம் செய்து பூவானது கமழ்ந்து பரிமளிக்கும் புரிசடையோனாகிய சுவாமியார் வைத்த பொத்தகந் தன்னை எடுத்து சிவனடியார்களும் வாழ்க வென்றது எதுனாலென்றா லிந்த வாதவூராருட புராணத்தை வோதிப் படித்துப் பொருள் சொல்லக் கேட்டவர்கள் மன மகிட்சியாய் வாழ்ந்திருப்ப தாகவுமிவையெல்லாம் வாழ்க வாழ்கவே என்றவாறு = 33 = திருவடி பெற்ற சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் க்குத் திருவிருத்தம் 543. திருச்சிற்றம்பலம்.

பிற்குறிப்பு

விக்கிரம தையி மாசம் 4–ஆம் தேதி சோம வாரம் மிருக சீரிஷம் திதி துவாதெசி யிந்தச் சுப தினத்தில் உதிச்சு சாமத்துக்கும் எழுதி நெறைஞ்சது. முற்றும்.

குறிப்புரை

மாணிக்கவாசகர் வரலாறு எனும் இச்சுவடி, விருத்தப் பாக்களினால் அமைந்திருக்கிறது; உரையுடன் கூடியது. 'பாயிரச் சருக்கம் முற்றும்' எனும் தொடரை உடைய ஏடே தொடக்க ஏடாகக் காணப்படுகிறது. அடுத்து, திருப்பெருந் துறைச் சருக்கம் எனும் சருக்கம் முழுமையாக உள்ளது. தொடர்ந்து குதிரையிட்ட சருக்கம், மண் சுமந்த சருக்கம், திருவம்பலச் சருக்கம், புத்தரை வாதில் வென்ற சருக்கம் ஆகியவை காணப்படுகின்றன.

## 344. வாதவூரார் புராணம் முதலியன

**அ. 217:427; ஆ.** *1-119* ஏடுகள்; **இ.** 15 x 4 செ.மீ.; **ஈ.** *9-10* ஏடுகள்; **உ.** மிக நன்று; **ஊ.** ஓரளவு கடினம். எ. முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஈராறு வேனி இறைவனார் புத்திரராம்
ஓராறு கையற் கிளையானை – ஈராறு
கையானைப் போரூரிற் காங்கயனை யன்பர்க்குக்
கையானை நெஞ்சே கருது

தந்தை யாவானுஞ் சார்கதியிங் காவானும்
அந்தமில்லா யின்பநமக் காவானு – மெந்தனுயிர்
தானாகு வானும் சரணாகு வானுமருட்
கோனாகு வானுங் குரு

முடிவு

ஞால மோங்குக நான்மறை நீடுகச்
சீல மன்னவன் செங்கோல் விளங்குக
கால மாமழை மன்னுக காதலாற்
சால வீசன் அடியார் தழைக்கவே (33)

திருவடி பெற்ற சருக்கம் முற்றும்.

குறிப்புரை

எட்டெண் இல்லாத முதல் இரண்டு ஏடுகளில் இறை வணக்க, குரு வணக்கப் பாடல்கள் உள்ளன. மந்திரிச் சருக்கம்,

திருப் பெருந்துறைச் சருக்கம், குதிரை விட்ட சருக்கம், மண் சுமந்த சருக்கம், திருவம்பலச் சருக்கம் புத்தரை வாது வென்ற சருக்கம், திருவடி பெற்ற சருக்கம் ஆகிய ஏழு சருக்கங்கள் உள்ளன. தொடக்கத்தில் இரண்டும் இறுதியில் ஒன்றுமாக வெற்றேடுகள் உள்ளன.

## 345. விருத்தாசல புராணம்

**அ.** 108:212; **ஆ.** *1-55* ஏடுகள்; **இ.** 20 x 4 செ.மீ.; **ஈ.** *11-12* வரிகள்; **உ.** இறுதியில் ஏடுகள் சற்றுச் சிதைந்துள்ளன; **ஊ.** நன்று; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாக வில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

திருமாலு நான்முகனுந் தேவர் கோவுந்
தேவர்களு மியாவர்களும் சிந்தை யாலு
மருவாய மறையாலு மளவை யாலு
மளப்பரிதாய் கண்டிதமாய் நின்ற மூர்த்தி
யுருவாய கிரிவடிவா யனந்த கோடி
யொளியுடைய கொடுமுடிக ளாகி நின்ற
பெருவாழ்வைத் திருமுதுகுன் றுடையான் றன்னைப்
பெருங்கருணை யாளனையாம் வணங்க லுற்றோம் (1)

முடிவு

திங்கள் மும்மழை பெய்க செழும்புவி
பொங்கி வாழ்க புரவலர்கள்.....
.... ங்கள் சங்கான பூசை நலம்பெற
சங்க ரனடி யார்கள் தழைக்கவே

ஆகச் சருக்கம் *18*க்குத் திருவிருத்தம் **434** முற்றும். ....

பிற்குறிப்பு

வருசம் புரட்டாசி மாதம் 24-ஆம் தேதி சுக்கிர வாரமும் பூச நட்சத்திரமும் அமரபட்சத்து தசமியும் கூடின சுபதினத்தில் எழுதி நிறைவேறியது. முற்றும் அகத்தடி விநாயகன் துணை.

குறிப்புரை

ஏட்டெண் இல்லாத முதல் ஏட்டில் , திருவுங் கல்வியுஞ் என்ற கடவுள் வணக்கப் பாடல் உள்ளது. கடவுள் வணக்கம், பாயிரம், விருத்தகிரிச் சருக்கம் விருத்திவிருச்சச் சருக்கம், தலவிசேடச் சருக்கம், தீர்த்தச் சருக்கம் முதலான பதினெட்டுச் சருக்கங்கள். முதலில் ஒரு வெற்றேடும் இறுதியில் 3 வெற்றேடுகளும் உள்ளன.

## 346. விருத்தாசல புராணம்

**அ. 115:222; ஆ.** 37 ஏடுகள்; **இ.** 41.5 x 2.5 செ.மீ.; **ஈ. 6-7** வரிகள்; **உ.** நன்று; சுவடிகளின் இடது பக்க ஓரப்பகுதிகள் சிதைந்துள்ளதால் ஏட்டெண்களும் சிதைந்துள்ளன; **ஊ.** கடினம்; சிறிய எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவுங்
கருணை பூக்கவுந் தீமையைக் காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகு மாழத்துப் பிள்ளையைப் பேணுவாம்

முடிவு

சத்துரு நாசம் அடைந்தழ கேசர்
தமக்கிணை மறவா மலர்த்திரு மேவுவர்
வித்தகர் ராகுவ ரின்மையில் வெம்மைகள்
வேந்தரி ராசிகள் பாம்பு பிசாசுகள்
பத்திரமாம் மிருப் பயமற் றிருபத்தொரு
கொடியவற் குளகால் வழி
அத்தனையும் பதமேற்றுவர்.....
தரிப்பிரினும் அப்படியாமால்
சுவகைச் சருக்கம் முற்றும் (13)

ஆகத் திருவிருத்தம் 634....

பிற்குறிப்பு

துந்துபி வருஷம் கார்த்திகை மாதம் 14ந் தேதி ஆதிவாரமும் அனுச நட்சத்திரமும் சதுர்தசியும் கூடின சுபதினத்தில் விருத்தாசல புராணம் எழுதி நிறைவேறியிது. முற்றும்.

குறிப்புரை

| எண் | சருக்கம் | பாடல் |
|---|---|---|
| 1. | பாயிரம் | 18 |
| 2. | திருமலைச் சருக்கம் | 39 |
| 3. | தலச் சருக்கம் | 15 |
| 4. | தீர்த்தச் சருக்கம் | 28 |
| 5. | விதரகச் சருக்கம் | 23 |
| 6. | விபசித்துச் சருக்கம் | 45 |
| 7. | திருநடச் சருக்கம் | 24 |
| 8. | அகத்தியச் சருக்கம் | 14 |
| 9. | கலிங்கச் சருக்கம் | 21 |
| 10. | கலிக சருக்கம் | 9 |
| 11. | சுவேதமுனிச் சருக்கம் | 20 |
| 12. | பத்தா பூசைச் சருக்கம் | 15 |
| 13. | சிவபூசைச் சருக்கம் | 44 |
| 14. | திருநீற்றுச் சருக்கம் | 18 |
| 15. | ருத்திராட்சசச் சருக்கம் | 17 |
| 16. | சிவகீர்த்திச் சருக்கம் | 10 |
| 17. | கோபர்வதச் சருக்கம் | 21 |
| 18. | மருடிதனச் சருக்கம் | 12 |
| 19. | சசிவண்ணர் சருக்கம் | 16 |
| 20. | சுவகைச் சருக்கம் | 14 |

ஆக இருபது சருக்கங்கள் இந்நூலில் உள்ளன.

## 347. வீரட்டேஸ்வரர் புராணம்

**அ.** 46:71; **ஆ.** *1-155* ஏடுகள்; **இ.** 38 x 2.5 செ.மீ.; **ஈ.** 6 வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

## தொடக்கம்

முதலாவது கயிலாயச் சருக்கம்

எண்ணி லாஉயிர் கடந்தநான் முகனும்
 ஏழிரண்டு உலகம்உண் டவனும்
விண்ணில்ஆ யிரங்கண் வேந்தன் ஆதியறாம்
 விரும்பிய பொருளெலாம் அளிக்கும்
எண்ணிலா மகட்பூ உந்தியத் தடத்தில்
 உதித்தவெண் மரைமல ரொக்குந்
தெண்ணிலா வெறிக்கும் செஞ்சடை யண்ணல்
 திருக்கயி லாயநீள் சிலம்பு

## முடிவு

வரத்தினைத் தங்கட்கு ஈந்த வானவன் மகிழ்ந்து வைகும்
சிரத்தல மதிகைத் தெய்வ திருநகர் விடுத்து மற்ற
புரத்தைமுப் புரத்தான் மோதிப் புடைத் திடத் தழித்து நாளுஞ்
சரத்தினின் விசயாய் எங்கும் சஞ்சரித் தார்க ளன்றோ (31)

திரிபுராள் யுத்தச்சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் 9க்குப் பாயிரம் உட்படச் செய்யுள் திருவிருத்தம் 354.

## பிற்குறிப்பு

இராமலிங்க நயினார் குமாரன் முத்திய நயினார் படிக்கின்ற வீரட்டேஸ் வரர் புராணம். அண்ணாமலையார் கிருபை உண்டாகவும்....

## குறிப்புரை

கயிலாயச் சருக்கம், அதிகைமான்மியச்சருக்கம், வீரட்டலிங் கோற்பவச் சருக்கம், கெடிலமான்மியச் சருக்கம், திருவிழா சருக்கம், தேவர்பொய் சொன்ன தோஷம் நீங்கின சருக்கம், திரிபுராளுற்பவச் சருக்கம், திரிபுராள் தவம் செய்த சருக்கம், திரிபுராள் யுத்தச் சருக்கம் ஆகிய ஒன்பது சருக்கங்கள். 354 விருத்தப் பாடல்கள். இறுதியில் சுப்புராய நயினார் படிக்கின்ற வீரட்டேஸ்வரர் புராணம் என்னும் குறிப்போடு கூடிய தனி ஏடு ஒன்று உள்ளது. முதலில் இரண்டும் இறுதியில் நான்கும் வெற்றேடுகள் உள்ளன.

## 348. ஸ்ரீமகா பாகவத புராணம்

**அ. 505:766; ஆ.** *1-411* ஏடுகள்; **இ.** 42 x 3.5 செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

பிரதமஸ்கந்தம் - பிரதம அத்தியாயம்

வியாஷம் வசிஷ்டம் நபத்தாரம் சக்தி பௌத்திரம் கலமஷம் பராசார்த்தும்சம் வந்தே சுக்தாதம் தபோநிதி ஸ்ரீகிருஷ்ண சகாயம். வகுளா பரணன் திருவடிகளே சரணம்.

ஸ்ரீமகாபாகவத சாஸ்த்திரத்தில் உபோ உத்காத மெனப்பட்ட பீடிகாரூபமான பிரதமஸ் கந்தத்தினுடைய பிரதம அத்தியா யத்திலே நைமிசாரணிய வாசிகளான சவுனகாதி முனிஸ்வ ராள் பிராதக் காலத்திலே பண்ணத் தக்க அக்கினி ஒத்திர முதலானவை தீக்கர்மத்தை யுடையவாளாய் சூதபுராணி கொத்தமரை நன்றாகக் கொண்டாடி....

### முடிவு

அரியினிடத்திலே வைக்கப்பட்ட மனசையுடையவாளான இந்த ராசாக்களுடைய சரித்திரத்தை யெவன் கேள்க்கிறானோ அவன் ஆயுசு தனம் கீர்த்தி அயிசுவரியம் மோக்ஷம் யெல் லாத்தையும் அடைவன். இவை ஸ்ரீ மகாபாகவத புராணத்தில் நாலாவது ஸ்கந்தத்தில் இருபத்தொன்பதாவது அத்தியாயம் முற்றும்.

### குறிப்புரை

முதல் பிரதமஸ்கந்தத்தில் *19* அத்தியாயங்களும், *2* ஆவது பிரதமஸ்கந்தத்தில் *10* அத்தியாயங்களும், *3* ஆவது பிரதமஸ் கந்தத்தில் *33* அத்தியாயங்களும், *4* ஆவது பிரதமஸ் கந்தத் தில் *29* அத்தியாயங்களும் இப்பகுதியில் கூறப்படுகின்றன. இதன் தொடர்ச்சி *506:766* என்ற நூலில் தொடர்கின்றது.

## 349. ஸ்ரீமகாபாகவத புராணம்

**அ. 506:766; ஆ.** *1-372* ஏடுகள்; **இ.** 42 x 3.5 செ.மீ.; *9-10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

### தொடக்கம்

அஞ்சாவது ஸ்கந்தம் முதல் அத்தியாயம்

ஸ்ரீமகாபாகவதப் புராணத்தில், அஞ்சாவது ஸ்கந்தத்தில் அனேகப் பிரகாரங்களுடனே கூடின பிரியவிறுத வங்கிசமும் பிரபஞ்ச மரியாதையும் வர்ணிக்கப்படுகிறது. அதிலே இருபது அத்தியாயங்களினாலே பிரியவிறுதன முதலான ராசாக்களாலே பூமியிலெயிரர் நின்ற தீவுகளுடைய மரியாதா பாலனம் பண்ணப்பட்டுது யென்றும் மேல் மூன்று அத்தியாயங்களினாலே சூரிய சந்திராதிகளினாலே சோதி சுக்கிராதி மரியாதா பாலனம் பண்ணப்பட்டுது யென்றும்...

### முடிவு

கவுரவாளுக்கு ஒருத்தருக் கொருத்தர் வுண்டான கலகத் தினாலே யுத்தத்திலே ராசாக்களைப் பார்வையினாலேயே சங்கரிச்சு அர்ச்சுனனிடத்திலே செயத்தைவுண்டாக்கி உத்தவருக்குப் பரமாங்கிச யோகத்தை வுபதேசித்து தம் முடைய திவ்விய ஸ்தானத்தை எழுந்தருளினார். இவை ஸ்ரீமகா பாகவதா புராணத்தில் ஒன்பதாவது ஸ்கந்தத்தில் யிருபத்து நாலாவது அத்தியாயம் முற்றும். ஒன்பதாவது ஸ்கந்தம் சம்பூரணம். இரண்டாவது பொத்தகம் எழுதி முடிந்தது.

### குறிப்புரை

505:766 என்ற எண்ணில் முதல் நான்கு ஸ்கந்தங்கள் அமைய இதில் 5 ஆவது ஸ்கந்தத்தில் 26 அத்தியாயங்களும், 6 ஆவது ஸ்கந்தத்தில் *19* அத்தியாயங்களும், 7 ஆவது ஸ்கந்தத்தில் 15 அத்தியாயங்களும், *8* ஆவது ஸ்கந்தத்தில் 24 அத்தியாயங்களும், *9* வது ஸ்கந்தத்தில் 24 அத்தி யாயங்களும் இடம் பெற்றுள்ளன. இதன் தொடர்ச்சி 507:766 என்ற நூலில் தொடர்கின்றது.

## 350. ஸ்ரீமகா பாகவத புராணம்

**அ.** 507:766; **ஆ.** *1-334* ஏடுகள்; **இ.** 42 x 3.5 செ.மீ.; **ஈ.** *10-11* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

தெசமஸ்கந்தத்தில் முதல் அத்தியாயத்தில் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய அவதார சரித்திரத்தைக் கேள்வி செய்து அந்தக் கேள்வியாகிற அமிர்தத்தினாலே சுகத்தை வுடைய வனா யிருக்கிற பரிக்ஷித்து மகாராசாவானவன் மிகவும் ஆசையினாலே ஸ்ரீசுகப் பிருமரிஷி சொன்ன அறத்தையே திரும்பவும் அனுவர்த்திச்சு அந்தப் பகவானுடைய சரித்திரத்தைத் திரும்பவும் பிரசினம் பண்ணுகிறார். பரிக்ஷித்துவினுடைய வாக்கியம் வாரீர் பிருமரிசியே.

முடிவு

புருஷனானவன் சீவாளுக்கு மோக்ஷ சுருபமாயும் நித்திய மாயுமிருக்கிற பரமபதத்தையே அடைவன். மகாசாம் பிராச்சியத்தை யுடையவாளான ராசாக்களும் யாதொரு பகவத பதமான பரபதத்திலே யிச்சையை யுடையவாளாய்க் கொண்டு ராச்சியத்தை விட்டுவிட்டு தபோவனத்தை அடைஞ்சார்களோ அப்படிப்பட்ட பரமபதத்தை அடை வன். இவை ஸ்ரீமகாபாகவத புராணத்தில் தெசமஸ்கந்தத்தில் தொண்ணூறாவது அத்தியாயம் சம்பூரணம். தெசமஸ்கந்தம் சம்பூரணம். பெறுகிப்பெறுகா வதங்கி சகாய நமஹா. கோவிந்தாய நமஹா, பரமகுருவே நமஹா.

குறிப்புரை

506:766 என்ற நூலின் தொடர்ச்சியான இப்பகுதியில் பத்தா வது ஸ்கந்தத்தில் 90 அத்தியாயங்கள் கூறப்பட்டிருப்பது மிகச் சிறப்பான ஒன்றாகும். இதன் தொடர்ச்சி 508:766 என்ற நூலில் கூறப்படுகின்றது.

## 351. ஸ்ரீமத் பாகவத புராணம்

**அ.** 508:766; **ஆ.** *1-184* ஏடுகள்; **இ.** 43 x 3.6 செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

ஸ்ரீமகாபாகவத புராணத்தில் பதினோராவது ஸ்கந்தம் முப்பத்தொரு அத்தியாயம். யிதில் முதல் அத்தியாயத்திலே

யாதவாளுக்குப் பிராமணச் சாபமும், அதுக்கு மேல் நாலு அத்தியாயங்களினாலே பரதத்துவ நிருபனமும் அதுக்கு மேல் ஓர் அத்தியாயத்தினாலே ஸ்ரீகிருஷ்ணருக்கும் உத்த வருக்கும் சம்வாதமும் அதுக்குமேல் இருபத்து மூன்று அத்தியாயங்களினாலே உத்தவருக்குப் பகவத் தத்துவ நிருபனமும் அதுக்குமேல் யிரண்டு அத்தியாயங்களினாலே யிந்த அர்த்தங்கள் சொல்லப்படுகிறது.

## முடிவு

பகவானானவர் கிருபையாலே யிந்தப் பாகவதத்தைப் பிரம் மாவுக்கு அருளிச் செய்தாரோ அந்தப் பகவானுக்குப் பிரணாமம் செய்யுகிறேன். யாதொரு பிரும ரிசியானவர் சமுசாரமென்கிற சர்பத்தினாலே கடிக்கப்பட்டு வியாகுலனா யிருக்கின்ற பரிசித்து மகாராசனைத் துன்பத்தில் நின்றும் விடுவித்தாரோ பரப்பிரம சுவரூபியான அந்தச் சுகயோகிக்கு நமஸ்காரம் செய்யுகிறேன். ஸ்ரீமத் மகாபாகவத புராணத் திலே பரமாங்கிச சங்கிதையிலே வியாசப் புரோகத்திலே பன்னிரெண்டாவது ஸ்கந்தத்திலே பதிமூன்றாம் அத்தியாயம் சம்பூரணம். ஆசாரியார் திருவடிகளே சரணம். நந்தன ஆண்டு ஆடிமாதம் 9 ஆம் தேதி ஆதிவாரம் சுக்கில பக்ஷம் கிருத்திகை நக்ஷத்திரம் உதயமாய்ப் பதினைந்து நாழிகைக்கு மேல் துவக்கிச் செயல் கார்த்திகை மாதம் 22ந்தேதி சுக்குரவாரம் சுக்குல பக்ஷம் திருவோண நக்ஷத்திரம் பஞ்சமி திதி கும்பலக்கினம் யிந்தச் சுபதினத்தில் உதைய மாய்ப் பதினாறு நாழிகைக்குள்ளே தண்டையார் பேடு தொப்பை முதலியார் குமாரனாகிய கிருஷ்ணசாமி முதலியார் பாராயணம் செய்யப்பட்ட ஸ்ரீபாகவதமாகியது உத்திரன் மேரூர் கணக்கு சிவப்பிரகாசம் எழுதியது. சம்பூரணமாய் நிறைவேறியது.

## குறிப்புரை

507:766 என்ற நூலின் தொடர்ச்சியான இந்நூலில் 11 ஆவது ஸ்கந்தம் 31 அத்தியாயங்களையும், 12 ஆவது ஸ்கந்தம் 13 அத்தியாயங்களையும் கொண்டுள்ளது. இந்நூல் நான்கு தனித்தனிச் சுவடிக் கட்டுகளில் எழுதப்பட்டிருக்கின்றது. சுவடிக்கட்டு எவ்வளவு சிறியதாயினும் பெரியதாயினும்

அதற்குத் தனி எண் தருதலே நடைமுறையில் பின்பற்றப் படுகின்றது. எனவே இங்கு நான்கு சுவடிக் கட்டுகளுக்கும் கட்டு எண்கள் தனித்தனியாகக் கொடுக்கப்பெற்றுள்ளன. நான்கு சுவடிக் கட்டுகளும் ஒரே ஒரு நூலின் தொடர்ச்சியாய் அமைவதால் நூல் எண் மாற்றம் பெறவில்லை. 'ஸ்ரீமத் பாகவதம்' என்ற இந்நூலின் மூலம் மட்டுமே நூலாக வெளிவரின் 2000 பக்கங்களுக்கு மேற்பட்ட நூலாக வெளிவரும் தகுதியையுடையது. இந்நிறுவனத்திலுள்ள சுவடிகளுள் மிகச் சிறந்த பெரிய சுவடி என்ற பெருமையும், உரைநடையில் பெரிய அளவில் எழுதப்பட்டிருக்கின்றது என்ற வியப்பும் இதனையே சாரும்.

# 3. சிற்றிலக்கியம்

## 352. அகவல்

**அ.** 141:312; **ஆ.** *157 - 162* ஏடுகள்; **இ.** 24 x 3 செ.மீ.; **ஈ.** *10 - 11* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** படிக்கக்கூடிய எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

சீரார் கமலஞ் சிறந்திருக்கும் பொய்கைதனில்
நீர்வாழு மண்டூக நெஞ்சேகேள் - நேரா
யுடன்பிறந்த வரசிதனை யுள்ளத்தே
காணாமல் குடங்கவிழநீ ரானதொரு
கோலமே நடம்புரிந்து நின்றானைத்தேடி - நிலையறிந்து
காணாம லன்றோ மதிகெட் டறிவழிந்தாய் நன்றாய்
ஓரிடத்திலே பிறந்து ஒன்றைஒன்று காணாமல்
பாரியத்தி லேயலைந்த பாவியே பேரெடுத்துக்
காயமெனுங் கூட்டில் காமவினைக் கீடாக
மாயமெனு மயக்கில் வளைபட்டாய் - தவற்குப்
பேறுதரும் பேசுவாற் கென்னாகும்
நடித்த திருநடனம் நட்பாகும் பிடித்தே
சென்று கமலத்திரு மண்டபத்தே நின்று
நிலை காணறியா நெஞ்சமே

முடிவு

மெஞ்ஞான மென்னும் விளங்கும் பொருள்காணில்
அஞ்ஞானந் தானே யகலுமே - செஞ்ஞான
வீடு பாச மைய மெய் விளக்கே யாதாரம் - யீடுனக்குச்
சோடா ரிருதையமே கூடுமகஞ் சேர்ந்தது
அங்கால் தனிலே நின்றதுவும் - விமலன்
நடையுடையும் வீற்றிருப்பும் நிமலன்
பாதஞ் சிவந்ததுவும் - பங்கையம்போ
லானது அங்கீதஞ் சிலம்பொலியுங் கெம்பீரம் நாதம்

பிறந்திட மேவுண்மை பேசாதிரு மனமே
யிறந்திடமே - யெல்லை யிருப்பு.

அகவல் முற்றும்

குறிப்புரை

அகவல் எனும் இந்நூல் முழுமையாகவுள்ளது. மெய் ஞானம் உணர அஞ்ஞானம் அகலும் என்ற அடிப்படையில் நெஞ்சினை விளித்து மெய்ஞான நெறிகள் பலவற்றைக் கூறிச் செல்கின்றது இந்நூல்.

## 353. அஞ்ஞவதைப் பரணி

**அ.** 169:362; **ஆ.** *1 - 40* ஏடுகள்; **இ.** 37 x 3 செ.மீ.; **ஈ.** *7 - 8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

அடியேனை யாள வருண்மேனி சாத்திப்
படிமீது வந்த பரனே - கொடியேனென்
றெண்ணா திமைப்பளவி லிஞ்ஞனே வீடளித்த
கண்ணா கடைபோகக் கார்.

படைப்பானும் வியன்ஞாலங் காக்கு மாழிப்
படையானும் படைத்தளிக்கப் பட்ட தெல்லாந்
துடைப்பானுஞ் சுருதிகளுந் தொழுது போற்றுஞ்
சொரூபானந் தச்சுடரைத் தொழுதல் செய்வாம் (1)

கடைதிறப்பு

தனிநாடிய பொருளோடுறு தலைநாடியர் நிலைபோர்
துனிநாடிய ரலைதீர்வதோர் துறைநாடியர் திறமின் (1)

முடிவு

சுத்தமறை தொடர்ந்த தாளினான் வாழியே
துற்றுவரு பெரும்பவங்கள் சாடினான் வாழியே
தத்துவ நெறிதுறந்த சேவகன் வாழியே
தர்க்க சமயசண்ட மாருதம் வாழியே (99)

**தோத்திரங் குனிலை முற்றும். ஆக 505.**

அஞ்ஞவதைப் பரணி முற்றும்...

## பிற்குறிப்பு

ஆவணி மாதம் *19* ஆம் தேதி எழுதி முடிந்து முற்றும்.

## குறிப்புரை

இது தத்துவராய சுவாமிகளின் அடங்கன் முறையில் இடம் பெற்றுள்ளது. அடங்கன் முறை என்பதிலுள்ள **18** சிறு நூல்களுள் இந்நூல் பதினாறாவது நூலாக இடம் பெறுகிறது. இது **493** தாழிசைகளைக் கொண்டது. இதன் பாட்டுடைத் தலைவர் இவருடைய ஆசிரியரான சொரூபானந்தர்.

போர்க்களத்தில் ஆயிரம் யானைகளைக் கொன்ற வீரனுக்கே பரணி பாடுதல் மரபு என்றாலும், சீடர்களின் அஞ்ஞானத்தை யானையாக உருவகித்து ஆயிரக் கணக்கான சீடர்களின் அஞ்ஞானமாகிய யானைகளை வென்று, தனது குருபிரானின் மீது தத்துவராயர் பரணி இலக்கியம் பாடியுள்ளார்.

இந்நூல் தத்துவக் கருத்தை உள்ளடக்கிய கற்பனைக் கதையாகப் படைக்கப் பெற்றுள்ளது. இடையிடையே வேதாந்தக் கருத்துகள் விரிவாகப் பேசப்பட்டுள்ளன. அஞ்ஞானத்தை ஒரு அரசனாகவும், அகங்காரம் முதலியன அவனுக்குச் சேனைகளாகவும், அவர்களை ஞானம் என்கின்ற அரசன் அழிப்பதாகவும் புனைந்து பாடப் பெற்றுள்ளது.

குறிப்பிடத்தக்க பதினான்கு வேதாந்தசாத்திர நூல்களுள் இதுவும் ஒன்று.

**96** வகைச் சிற்றிலக்கியங்களில் பரணி என்பதும் ஒன்று. இப்பரணி நூலில் கடைதிறப்பு, காடு, உவமை, உட்சோலை, கோயில், பலிபீடம், ஆல், தேவி, உட்பரிவாரம், லீலை, பேய்முறைப் பாடு, குறி, விசேஷம், அஞ்ஞன்சரிதை, திருவவதாரம், படைச்செருக்கு, ஞான வேந்தன்படை, அஞ்ஞன் படையெழுச்சி, அஞ்ஞான அழிவு, வெற்றி

சாற்றல் என்னும் தலைப்புகள் உள்ளது. ஞானாசிரியரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு அஞ்ஞானம், பாசம், மோகம், கோபன், லோபன், மோகன், ஞானவினோதன், ஞான லோகன் படையெழுச்சி, அஞ்ஞன் படையெழுச்சி, தேர்ந்த யுத்தம், அஞ்ஞன் அழிவு, வெற்றிசாற்றல், கழங்காட்டு, சூழ்சமைப்பு, சுமமுலக்கை, தோத்திரம் ஆகியவற்றை மதயானைகளாக உருவகித்து அவற்றை வென்ற பொருண் மையைக் கருவாகக் கொண்டு அஞ்ஞவதைப் பரணி எனும் இவ்விலக்கியம் எழுந்துள்ளது. இச்சுவடி நூல் நிறுவன ஆய்வேடாக 1992இல் அளிக்கப் பெற்றுள்ளது. இறுதியில் 'பிரபுலிங்கலீலை' எனும் நூலின் ஏடுகள் நான்கு காணப்படுகின்றன.

## 354. அத்துவித வெண்பா உரையுடன்

**அ.** 113:220; **ஆ.** *1 - 292* ஏடுகள்; **இ.** 30.5 x 2.5 செ.மீ.; **ஈ.** 5 - 6 வரிகள்; **உ.** நன்று; சில ஏடுகள் சிதைந்துள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாக வில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகி யுள்ளது.

தொடக்கம்

பெத்த மலமகற்றி பேதமற் தானாக்குஞ்
சித்தன் சிவப்பிரகா சச்சிவன்செய் - தத்துவித
சைவநூல் உண்மைதனை தந்திமுகத் தைங்கரனார்
தெய்வமேஎன் னுள்ளத்திற் சேர்

.... மேற்கடவுள் வணக்கம் கூறித் தமது தாற்பரியமும் கூறுவான் தொடங்கி முதற்கண் கடவுள் வணக்கம் அருளிச் செய்கின்றார்.

முடிவு

ஆனவன்ன வாச்சிரமக் கட்டுவிட்டால் மேலான
தான சிவாச்சிரம தாஞ்சீல - மானதெல்லாம்
கைவிட்டால் லிங்கமந்த லிங்கவிர்த சீலமதாம்
மெய்யான சடத்தலமே மெய்

(எ-து). முற்கூறிய பிராமணர், அரசர் முதலியன வன்னங்கள். பிரம்மசரிய முதலியன வாச்சிரமங்கள்.

இவையெல்லாம் பெந்தமெனவிட்டால் மேலாகிய சிவாச் சிரமத்தை அடையலாம். அதுபோல இச்சடவிரத சங்கற்ப விகற்ப சீலங் கைவிட்டால் மகாலிங்கமென்னும் சிவசொரூ பத்தைப் பெறலாம். அவ்வனுபவத்தினால் அனுட்டிக்கும் சடத்தலமே மெய்யான சடுத்தலம் என்றவாறு (423).

உண்மை முற்றும்

### பிற்குறிப்பு

சிவசண்முக அருணாசல ஞானியார் எழுதி வைச்ச பிரதி. மகாகுரு ஸ்வாமிகள் சந்நிதானத்துக்கு எழுதிவைச்ச பிரதி சுக்கில வருசம் ஆனி மாதம் 6-ம் தேதி அத்துவித வெண்பா திருக்கோவலூர் மகாகுரு ஸ்வாமிகள் சந்நிதி பிரதி எழுதி நிறைவேறியது. 423 பாடலும் எழுதி முடிந்தது.

### குறிப்புரை

திருக்கோவலூர் மகாகுரு ஸ்வாமிகளின் மடத்திற்காக எழுதி வைக்கப்பட்டது என்பது சுவடியின் பிற்குறிப்பால் தெரியவருகிறது. **423 வெண்பாக்களும்** உரையுடன் மிகத் தெளிவாக உள்ளன.

## 355. அமுதநாயகி பேரில் ஊஞ்சல்

**அ.** 53:78; **ஆ.** *1 - 2* ஏடுகள்; **இ.** 21.5 x 2 செ.மீ.; **ஈ.** 5 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச்சுவடி அச்சாக வில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

சீர்புகழும் தருமபுரம் சிறந்து வாழும்
தேனமிர்த நாயகிபொன் னூஞ்சல் பாட
பார்புகழும் தருமவினா யகன்பொற் பாதம்
பணிந்துகவி வாணரடி பரவிப் போற்றி
ஊர்புகழும் ஊர்வனபல் லுயிர்கள் யாவும்
ஓங்கிவளர்ந் தென்னாளும் உலகம் போற்ற
ஏர்புகழும் ஊஞ்சல்தனில் தரும நாதர்
தேனமிர்த நாயகியாள் ஆடீர் ஊஞ்சல் (1)

முடிவு

செம்பவளத் தால்கடைந்து கால்கள் நாட்டி
சிறந்தபச்சை வளையதனால் விட்டம் போட்டு
இம்பவயி டூரியத்தால் கைகள் சாத்தி
இனிதான இரத்தினத்தால் வரிச்சுச் சேத்து
பைம்பொன்னணி முத்ததனால் கத்தைச் சாத்தி
பகர்வயிர பலகையதால் கயிறு தூக்கி
உம்பர்புகழ் ஊஞ்சல்தனில் தரும நாதர்
தேனமிர்த நாயகியாள் ஆடீர் ஊஞ்சல் (4)

குறிப்புரை

*இது தருமபுரத்தில் எழுந்தருளியுள்ள அமுதநாயகியார் மீது பாடப்பட்ட ஊஞ்சல் இலக்கியமாகும்.* **நான்கு பாடல்கள்** *மட்டுமே உள்ளன.*

## 356. அருணகிரி மாலை

**அ. 428:672; ஆ.** *1 - 14 ஏடுகள்;* **இ.** 32 x 3 *செ.மீ.;* **ஈ.** *4 - 6 வரிகள்;* **உ.** *ஓரளவு நல்லநிலை. சில ஏடுகளில் துளைகள் உள்ளன;* **ஊ.** *சுமார்;* **எ.** *முழுமை;* **ஏ.** *அச்சாகாதது.*

தொடக்கம்

அன்னமே னம்தேட வங்கியுரு வாயுலகில்
மன்னு மருணைகிரி மாலைக்குப் - பன்னுங்
குணபதியே...ட பிள்ளை யென்னுங்
கணபதியே நீயிதற்குக் காப்பு

பூவிற் புகழருணைப் புண்ணியா பேதைக்கு
.... புத்தியருள் கண்டாய் - நாவி
மதத்திலே தோயுமுந்தன் மாசிலா வெற்றி
பதத்திலே தோ... (1)

முடிவு

சிந்தையினால் வாக்கினால் செய்தொழிலால் பார்வையினால்
வந்தவினை யும்பிறப்பாம் வல்வினையு - மெந்தைகுரு

நாதனெனச் சோணகிரி நம்பனென மால்தேடும்
பாதமெனப் போமே பறந்து (101)

குறிப்புரை

**இந்நூல் 101 வெண்பாக்களையுடையது.** இடையே 93 - 95 ஆகிய மூன்று வெண்பாக்கள் எழுதப்படாமல் வெற்றேடு இடம் பெற்றிருக்கின்றது. திருவண்ணாமலை அருணாசல நாதரின் சிறப்புகளைக் கூறுவதாய் அமைகிறது.

## 357. அருணாசல சதகம்

**அ. 415:659; ஆ.** 1- 72 ஏடுகள்; **இ.** 40 x 2.5 செ.மீ.; **ஈ.** 4 - 5 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; ஒருசில ஏடுகள் முறிந்துள்ளன; **ஊ.** நன்று; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாக வில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

முற்குறிப்பு

பார்த்திப வருஷம் ஆனி மாதம் 24 ஆம் தேதி எழுதத் தொடங்கினது. கொண்டு போனவர்கள் உடனே கொடுத்து விட வேண்டியது.

தொடக்கம்

அருணாசல சதகம் மேல் காப்பு

அருணா சலசதகம் ஆய்ந்துரைந்து யான்பாட
வருமே பெருவாழ்வு வையமிதில் - தரும்பதவி
அருமா முகன்றனக்கு ஆதியாய்முன் பிறந்த
கருமுகனைக் கைதொழுதக் கால்.

மேல்காப்பு எழுதி முடிந்தது

அருணாசல சதகந்தனை அறிவா லறிந்து பாடவும்
கருமா முகன்றனைப் போத்துவேன் கதிரவனை மறவாமலே
திருநந்தி மாலயன் பாதமும் துதிசெய்குவே
னடியேனும்யான்
அருணை நகருரை கின்றவா அருணாசலா அருணாசலா

முடிவு

என்பது அதுவுமல்லாமல் சிவனே விதியோனாகிய பிரம்ம தேவனுக்கு முன்னாலே ஐந்து சிரசு அளித்திருந்து அதன் பின்பு ஒரு காரணத்தினாலே ஒரு சிரசை உம்முடைய திரு... கூறினாலே கிள்ளிவிட்டபடியால் யின்னம் என்ன செய்வாயே என்று பிரம்ம தேவனுக்கு இன்னை வரைக்கும் பயந்து தோத்திரஞ் செய்து வீற்றிருந்தருளிய பரமசிவனே திருனேத்திர முடைய என்னையனே அதுவுமல்லாமல் மதி சூரியராகிய இரண்டு பேரும் உம்முடைய இரண்டு விழி களாய் பூண்டிருந்தருளிய மகாதேவனே போத்திபோத்தி. உமது பொற்பாதம் போத்தித் துதிசெய்து நம்பினேன் எனக்குத் துணையாக...

குறிப்புரை

**1-96 பாடல்கள் உரையுடன் உள்ளன.** சிவனது பெருமை கள் பலவாறாகப் பேசப்பட்டு அவனது அருள் வேண்டுமென்று வேண்டுவதாய் இந்நூல் அமைகின்றது. துதித்தல் என்ற பொருண்மையை அடிப் படையாகக் கொண்டு அருணாசலப் பெருமான் மீது நூறு பாடல்கள் பாடப்பட்டுள்ளதால் இந்நூல் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்றான சதக இலக்கியத்தைச் சார்ந்ததா கின்றது. ஏட்டெண் இல்லாத முதல் ஏட்டின் முன்பக்கத்தில் முற்குறிப்பும், பின்பக்கம் காப்புப் பாடலும் உள்ளன.

## 358. ஆதிமூலப்பத்து

**அ.** 523:824; **ஆ.** *19 - 21* ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *7 - 9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

முடிவு மன்றியே முதலு மாகினாய்
    முதலு மன்றியே வடிவு மாகினாய்
வடிவு மன்றியே வண்ண மாகினாய்
    வண்ண மன்றியே யெண்ண மாகினாய்
படியை யுண்செம் பவள வாயிலே
    பாலை யுண்டுநீர் பாவைதன் கையால்
அடியு முண்டுநீர் அழுவதேன் சொலாய்
    ஆதி மூலமே ஆதி மூலமே (1)

முடிவு

பெற்ற தாயுநீ பெரியசெல் வம்நீ
உற்ற தந்தைநீ உரியஞா னம்நீ
கற்ற வித்தைநீ கண்டு காளத்தி
காலி யாகனே காள மேகமே
அற்ற போதுவந் தஞ்ச லென்றிடு
அய்யனே கிருபை யாளனே
கற்ற போதுவந் தாளவே வெங்கிடாசலா (11)

முற்றும்

குறிப்புரை

**பதினொன்று எண்சீர் விருத்தங்கள்.** இந்நூல் ஆயர்பாடியில் கிருஷ்ணனது சிறுகுழந்தைப் பருவத்து வெண்ணெய் திருடி உண்டது, மாயச்செயல் ஆகிய திருலீலைகளை விரித்தோதுகிறது. மேலுமிந்நூல் இறைவனைப் பொன், மணி, பொருள், எல்லை, மறை, மின்னல், மேகம், விண், மண், கன்னல், அமுது, முதல், முடிவு, தாய், தந்தை, கற்ற வித்தை, செல்வம் முதலியனவாக ஆனவன் என்றும், தொண்டர் தேடுபவன், இலங்கைபுக்க அசுரரை மாய்த்தவன், பங்கயத்தோன், கொண்டல் வண்ணன், பச்சைமாலையும், பொன் ஆரமும் அணிந்தவன் என்றும் போற்றுகின்றது.

## 359. ஆறுமுக தேசிகர் மாலை

**அ. 437:683; ஆ.** *32* ஏடுகள்; **இ.** 17 x 3 செ.மீ.; **ஈ.** *8 - 9* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

அடுத்தமய மாம்படிக மனையசீ வனையே
யறைபி... மென்பீரா லதனைக் கேணீ
யெடுத்தவுடற் கடைத்தகமை பலத்தி னாலே
யிரண்டு யோனிகளேழ் வகையச்சு பெத்த

தடுத்த...றக்க மத்தியத்தி னிரையந் தன்னி
லங்கியினில் வீழ்புழுப் போ... சீவ னென்று

மெடுத்துமறை யாகமனூற் சமமாக வியம்பு
மிவை... மென வெருத்திங் கியம்பொ ணாதே (9)

முடிவு

திருவுளத் திச்சையிற் றிருமேனி...
..கன மாகு தற்குத்
திருவுருக்கொண் டருள்விளங்கி வாசஞ்செயுந்
தென்கோவ லூரி லேனுந்
றிருவணா மலையிலேனு மாகவேண் டியதெனச்
சிந்தித் திருந்த வதனாற்
றிருவணா மலையினுக் கீசான மூர்த்திகை
திருமூல லிங்க கோயிற்
றெருவீதி யீசான திக்குமூர்த் திகைகுகைத்
தேசிகர் ரீசான மண்டேசிகர்
அருணேசர்..........ல பாததீர்த்தமும்
சிவனடியார் கோவெரு வதாய்
புறவ வத்தீர்த சீர்மே லாடி
யுட்கொண்டு கூறும் மூர்த்திகை
வைத்திரேன் கோவில் வீரட்டேசுவர் பாதமே
பற்றானாகுரு ஆறுமுக தேவனே (1)

குறிப்புரை

இந்நூலில் அனுக்கிரகச் சந்தானச் சருக்கம் முற்றுப் பெற்று பூரணாதீதப் பிரகாசச் சருக்கம் தொடங்குகிறது. *153:333; 158:340* என்ற எண்களில் அமைந்த நூல்கள் இந்நூல் போன்றவையே.

## 360. ஆறுமுக தேசிகன் திருஊசல்

**அ. 53:81; ஆ.** *1 - 4* ஏடுகள்; **இ.** 22 x 2.5 செ.மீ.; **ஈ.** *9* வரிகள்; **உ.** பொதுவாக நல்ல நிலை; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

திருவாரூர் கோவலூர் சிவகுன் றாதி
திருப்பாதி ரிப்புலியூர் தேவே என்றன்
இருவினையும் சமமாகும் கால்க ணாட்டி
இயம்புநடு நிலையெனுமுத் திறமது ஏற்றி

ஒருநான்கு வாக்கசையா கயிறு பூட்டி
உரையற்ற மெய்ஞ்ஞானப் பலகை மீதில்
அருளாளனந் தாதீதம் கடந்தி ருந்த
ஆறுமுக தேசிகனே ஆடீர் ஊசல்

முடிவு

நிர்வய லிங்கத்தாதி அந்த மாக
நிமலஅத்து விதஉண்மை நீயாய் நின்ற
சொருபவ உபவசோபா வமதாய் வாழ்க
தூயகுரு லிங்கசாம வாழ்க வாழ்க
திருநீறு மணிமந்திரம் வாழ்க வாழ்க
தீர்த்தமொரு பிரசாதம் வாழ்க வாழ்க
வருளெவையும் அறிவித்தாட் கொண்ட கோவ
லாறுமுகா நியசொருபன் வாழ்க வாழ்க (12)

வெண்பா

கோவல்வீ ரட்ட குருவருளா லேவிளங்கும்
தேவரெனும் ஆறுமுக தேசிகர்தம்-மாவலாய்ச்
செய்தவக்கை ஈன்றசிவ சண்முக வாசான்
செய்துதீ தென்றே தெளி (13)

திருச்சிற்றம்பலம்

குறிப்புரை

**1-12 பாடல்கள்.** இந்நூல் திருக்கோவலூர் ஆறுமுக மெய்ஞ்ஞான தேசிகர் மீது பாடப்பட்ட ஊஞ்சல் இலக்கியமாகும். இறுதியில் ஒரு வெண்பாவும் உள்ளது.

## 361. ஆறுமுக தேசிகன்மேல் நெஞ்சுவிடு தூது

**அ. 133:271; ஆ.** *1* - 20 ஏடுகள்; **இ.** 21 x 3 செ.மீ.; **ஈ.** 7 - *8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சு நூலினின்றும் வேறானது.

தொடக்கம்

செந்தமிழா லாறுமுக தேசிகன்மேல் நெஞ்சுவிடு
சந்துரைக்கச் சொற்பொருளுந் தப்பாமல் - வந்துதவ
அஞ்சுமுகன் றந்தபெரி யானைக் கணபதியின்
கஞ்சமலர்ச் செஞ்சரணே காப்பு

பூமேவு மங்கைவளர் பொற்பார் நறுமணம்வெண்
காமேவு நாவில் கடவுளுமுன் - றூமேவும்
வெண்பிறைக் கோடெம் முடன்மென்சிறைச்
சூட்டோதிம்மாய்
மண்பறித்து மேலுயரும் வான்பறந்தும் - கண்பறித்த
காலுந் திருமுடியும் கண்டறியா காரணனென்
றாலும் அடியார்க்கண் ணிமையாம் - சீலமுடன்
இந்திரனும் வானத் திமையோர் இருடிகளும்
சந்திரரும் சூரியரும் சாரணரும் - தந்திரியாற்

முடிவு

மழைவாழி மகம்வாழி மறையோர்வாழி
மழைவாழி சுரபினிரை வாழி செங்கோ
லிறைவாழி யறமாதி னான்கும் வாழி
யிருசுடரா தியவானோர் முனிவர் வாழி
குறையாம லொளிதருமா கமநீரு
மேனியும்மைப் பதமுங்குரு லிங்கத்தோ
டறைதூய சங்கமமென் றீந்தற்குச் சேடம்
மாறுமுக வேந்தையரு ளடியார் வாழி
அய்யன்றிருக்கோவலாறுமுக தேசிகனே

குறிப்புரை

ஆறுமுகனை மோனந்தமான முழுமுதல் எனவும், ஞானஉரு எனவும் பலவாறாகப் புகழும் ஆசிரியர், அவ் ஆறுமுகப் பெருமான் மீது காதல் கொண்ட தலைவியாகத் தம்மை உருவகித்துக் கொண்டு, தனது தாழ்ந்த நிலைகளை யெல்லாம் எடுத்துக் கூறி, தன்னுடைய மனத்தை அவ் ஆறுமுகனிடத்துத் தூதாக அனுப்பி மாலை வாங்கி வருமாறு கட்டளை இடுவதாய் இந்நூல் பாடப்பட்டுள்ளது. பிறதூது இலக்கியங்களைப் போன்ற இந்நூல், தெளிவாகவும் தூயநடையிலும் அமைந்துள்ளது. 246:462 என்ற எண்ணில் அமைந்த நூல் இதைப் போன்றதே.

## 362. ஆறுமுக தேசிகன்மேல் நெஞ்சுவிடு தூது

**அ. 246:462; ஆ.** 2- *28* ஏடுகள்; **இ.** 21.5 x 3 செ.மீ.; **ஈ.** 5 - *6* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; இறுதி ஏடு சிதைந்துள்ளது; **ஊ.** நன்று; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம் 133:271ஐப் போன்றது.

முடிவு

...அண்ணலுஞ் செவ்வா யுமை மாதுதனை யேதமறப்
பேசவிதைத்ததுவும்
மேதினியிற் பண்ட செருத்துணையார் பாராளுமன்
மனையானே
மிருதுண்டாய்த் துணிதததுவும் வண்டர்தொழும்
வாயிலேனும்
நாயறார் மானத்தாலே யாற்கு கோயில் செய்யுள்ளே
குறித்ததுவும்
நேயமுடன் றண்ணப் பூமாமுடியார் தன்னயன் வூறுகண்
கெண்ணப்பி வேடற்களித்ததுவும்
யெண்ணரிய ஆலவாய்ச் சொக்கர்க் கணி சந்தைச்
சாக்கியர்கள் சால...

குறிப்புரை

**இந்நூல் எண் 133:271 போன்றதே.** ஆயினும் அந்நூலி லிருந்து சற்று வேறுபடுகின்றது. தொடக்கத்திலுள்ள காப்புப் பாடலும், நூல் பாடலும் இரண்டிலும் ஒன்றுபோல் அமைவதால் அவை இரண்டும் இந்நூலில் தரப்படவில்லை. அந்நூல் முடிவு பெறாது இருப்பதால் இதனுடைய முடிவுப்பாடல் இங்குத் தரப்படுகின்றது. ஆறுமுக தேசிகர் ஊஞ்சல் *(1983)* என்ற அச்சு நூல் ஒன்று உள்ளது.

## 363. இருபா இருபஃது

**அ.** 1:5 **ஆ.** *148 - 155* ஏடுகள்; **இ.** 22 x 3.5 செ.மீ.; **ஈ.** *8 - 9* வரிகள்; **உ.** நல்லநிலை; ஓரப்பகுதிகள் உடைந்துள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங் களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

கண்ணுதலுங் கண்டக் கறையும் கரந்தருளி
மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும் - வெண்ணெய்நல்லூர்
மெய்கண்டான் என்றொருகால் மேவுவரான் வேறின்மை
கைகண்டார் உள்ளத்தின் கண் (1)

முடிவு

(உற்றவர் பெற்றவர் அற்றவர் முற்றும்
அற்றவர்க் கற்றவன் அல்லவர்க் கல்லவன்
அந்தம் ஆதி இல்லவன் வந்து
குரக்கு மனத்துக் கொடியேன் பரக்கும்
பரப்பைக் குவித்து நிறுத்திப் பிடித்திட்டு
இருள்வெளி யாகும் மருளினை அறுத்து
வந்து புகுதலும் சென்று நீங்களும்
இன்றி ஒன்றாய் நின்றவந் நிலையில்
ஒன்றா காமல் இரண்டா காமல்
ஒன்று மிரண்டு மின்றா காமல்
தன்னது பெருமை தாக்கா னாயினும்
என்னது பெருமை எல்லாம் எய்தித்
தன்னை எனக்குத் தருவதை அன்றியும்
என்னையும் எனக்கே தந்து தன்னது)
பேரா நந்தப் பெருங்கட லதனுள்
ஆரா இன்பம் அளித்துத் தீரா
உள்ளும் புறம்பம் ஒளிவின்றி நின்ற
வள்ளன்மை காட்டி மலரடி அருளிய
மன்னன் எங்கோன் வார்புனற் பெண்ணை
வெண்ணை காவலன் மெய்கண்ட தேவன்
அண்ணல் அகநா லயத்தன் நண்ணிய
மன்முத லாயின மாய்க்கும்
உலக உயிர்க்கெல் லாமொரு கண்ணே (20)

இருபா இருபது முற்றும்

குறிப்புரை

**இருபது பாக்களால்** ஆகிய இந்நூலில் **பத்து வெண் பாக்களும் பத்து ஆசிரியப்பாக்களும்** பயின்று

வருகின்றன. திருத்துறையூர் அருணந்தி சிவாச்சாரியர் எழுதிய இந்நூல், மெய்க்கண்ட தேவர் சிவானந்தத்தின் பொருட்டுத் தனக்கெழுந்த ஐயங்களை வினாவாகத் தொடுக்க, இந்நூலாசிரியர் விடையிறுப்பதுபோன்று அமைந்துள்ளது.ஆன்ம நிலை, உள்ளசுத்தி, வீடுபேற்றின் தன்மை என்னுமிவற்றை விளக்கி, சிவனது சிறப்பினையும் உணர்த்துவதாக உள்ளது. மெய்கண்ட சாத்திரம் பதினான்கனுள் இந்நூலும் ஒன்று. இருபா இருபஃது இலக்கிய வகையின் முதல் நூலைப் பாடியவர் அருணந்தி சிவாச்சாரியாரே.

மெய்கண்ட தேவரைச் சிவபெருமானாகவே போற்றிப் பாடுதலும், குருவே, குருலிங்க, சங்கமம் என்ற மூன்றுமாய் விளங்குதலை விளக்குதலும் இந்நூலின் நுட்பமாகும்.

இந்நூலில் ஆணவமலத்தின் எட்டு குணங்களும், மாயாமலத்தின் ஏழு தன்மைகளும். கன்ம மலத்தின் ஆறு இயல்புகளும் விளக்கப்பட்டுள்ளன. மேலும் சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கோட்பாடுகளான பசு, பாசம் எனும் முப்பெருள்களின் இயல்புகளும் அது எவ்வாறு ஒன்றோடு ஒன்று தொடர்பு கொண்டுள்ளது என்பதுவும் தெளிவுபட விளக்கப்படுகிறது.

திருவாவடுதுறையில் ஐந்தாம்பட்டமாக விளங்கிய ஸ்ரீ வேலப்ப தேசிகரிடம் உபதேசம் பெற்ற நமசிவாயத் தம்பிரானும், சீர்காழித் தத்துவராயரும் இதற்கு உரை எழுதி உள்ளனர்.

## 364. இருபா இருபஃது

**அ.** 130:248; **ஆ.** 80 - 85 ஏடுகள்; **இ.** 20 x 3 செ.மீ.; **ஈ.** 9 - 10 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை.

தொடக்கம், முடிவு 1:5 போன்றது.

குறிப்புரை

*1:5; 151:330* என்ற எண்களில் அமைந்த நூல்கள் இது போன்றவையே.

## 365. இருபா இருபஃது

**அ. 151:330; ஆ.** *62 - 69* ஏடுகள்; **இ.** 23 x 3 செ.மீ.; **ஈ.** *8 - 9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு கடின எழுத்து; **எ.** முழுமை; **எ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை.

தொடக்கம், முடிவு1:5 போன்றது.

குறிப்புரை

*1:5; 130:248; 151:330* என்ற எண்களில் அமைந்த நூல்கள் இது போன்றவையே.

## 366. உண்மை ஞானநெறிச் சிறப்பு நட்சத்திர மாலை

**அ. 268:489; ஆ.** *14 - 26* ஏடுகள்; **இ.** 20.5 x 3 செ.மீ.; **ஈ.** 7 - *8* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை. **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

திருமி குந்தரு கருவு நித்திரை
செய்யுமி யோகமுன் மானமு
செரு மூர்ச்சையுள் விடம துற்றிடி
றீய நெஞ்சிலை முத்தியேன்
மருவி டாததின் முத்தி யன்றுழன்
மனம டக்குத னிட்டையே
மாசில் வீடனாவ சார்வேது சொன்மன
மடக்கலின் வுபையமுந்
தருமெய் யானிலை மறைமுழங்குயர
சமமெ னுங்குரு வேனிறை
சரணர் தங்களு திப்பிறப்பது சரண
மென்றொழி தரதர விருட்
கருண னாயணிகழ ழொருசொலாமறி
வருளு மன்பரி னன்பனே
யாதிமாமறை யோது கோவலெம்
மாறு மாமுகத் தேவனே (1)

முடிவு

ஏகினேதுறி னுஞ்சொல் பற்றதி
னின்றி நானூறும் வண்ணமே
யின்பி னுற்றசை யாது நெஞ்செழி
னேதமெத்துய ரும்மதாய்
மோக மாரனவைசெற்று ணின்றவை
மூன்ற வத்தின ழிந்துபோய்
முதல்வ னாரரு ணோர்ந்த ருஞ்சுக
மூழ்கி நன்னிலை தானுமித்
தேக மின்றிவி ளங்கி னின்னுயர்
சிற்சு பாவம் தங்கனந்
தெருன னோடெனை வேறு சேய்மைசி
தைந்து போயொளிர் னானியே
யாகி யுற்றுள வாறெ னுட்குறை
யகல்வ னாவொரு காலநா
னாதி மாமறை யோது கோவலெம்
மாறு மாமுகத் தேவனே (27)

குறிப்புரை

**ஒன்று முதல் 27 பாடல்களுள்ள** இந்நூல் முருகப் பெருமானைப் போற்றி அமைகின்றது. *287:511* என்ற எண்ணில் இதே நூல் குறையாக இடம் பெற்றுள்ளது.

## 367. உண்மைஞான நெறிச் சிறப்பு நட்சத்திரமாலை

**அ.** 287:511; **ஆ.** *190 - 201* ஏடுகள்; *186 - 188*; *191, 197, 198* ஏடுகள் இல்லை; **இ.** 23.5 x 3 செ.மீ.; **ஈ.** 7 - 9 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம் *268:489* போன்றது.

முடிவு

நினைவு ளந்தரம் வெளியி நோக்க
நிறுத்தி யுற்றசை வர்மன
நிறைய ரந்துள் எழுந்த ருஞ்சுக
நேரு மத்திம மனுவெனும்

வினையி னார்பரி மான மாய்ந்துடல்
விரியும் வையக மில்லையாய்
விமல விண்ணது வாகி யெங்கணு
மேவு தானல தில்லையாய்
நனவ தாதிகள் கனவ தேசெயு
நனவு சாடசாற் சாரமே
நண்ணி விண்டனவ யையு முறங்கலி
னணுகி யொப்பதின முத்தியா
மனிய மின்றிய னிட்டை யிற்கணம்
மைவ னாவொரு கலாநா
னாதி மாமறை யோது கோவலெம்
மாறு மாமுகத் தேவனே (24)

குறிப்புரை

*268:489* என்ற எண்ணில்வரும் நூல் போன்றதே இது. இடையிலும் இறுதியிலும் ஏடுகள் இன்மையால் இடையில் பாடல்கள் விடுபட்டு ஒன்றுமுதல் 24 பாடல்கள் உள்ளன. இந்நூல் முருகப் பெருமானைப் போற்றி அமைகின்றது.

## 368. ஊஞ்சல்பாட்டு முதலியன

**அ. 226:437; ஆ.** *1 - 16* ஏடுகள்; **இ.** 40 x 3 செ.மீ.; **ஈ.** *6 - 7* வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** தெளிவான எழுத்து; **எ.** முழுமையானது; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

கந்தமலர் பிண்டிநிழல் கடவுள் காப்ப
கருதரிய தவமுனிவர் தாமும் காப்ப
அந்தமுள அறங்காக்கும் அய்யங் காப்ப
அம்மைதர்ம தேவதையாள் அவளுங் காப்ப
சிந்தைமகிழ் நாமகிழ்பூ மகளுங் காப்ப
செங்கைமலர் மங்கைநல்லா ளனுதினமுங் காப்ப
மங்களமாம் ஊஞ்சல்தனில் பாடி யாட
மருதிரு வறங்காப்பார் ஆடி ரூஞ்சல்

முடிவு

மகமேரு வென்னவே வணம்நிலை வேறு முண்டாய்
இன்னுமுள்ளா ரென்று முண்டாய் எப்பொழுதும் செல்வ
முண்டாய்
ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரோடி
மூங்கில்போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருப்பீர்

குறிப்புரை

இச்சுவடியில் **ஊஞ்சல்** என்ற பெயர் கொடுக்கப் பெற்றுள்ளது. முதல் ஏடு தவிர பிற ஏடுகள் ஊஞ்சல் நடையின்றி வாழ்த்துகள் பலவற்றைக் கூறுவதாக அமைந்துள்ளன. இறுதியில் பழம்பாடல் ஒன்றின் சில வரிகளை அமைத்து நூலை முடித்துள்ளனர்.

## 369. எட்டையாபுரம் துரை அவர்கள் பேரில் பிரபந்தம்

**அ. 489:747; ஆ.** *1 - 50 ஏடுகள்;* **இ.** 37.5 x 3 செ.மீ.; **ஈ.** *6 - 7 வரிகள்;* **உ.** *நல்லநிலை;* **ஊ.** *சுமார்;* **எ.** *முழுமை;* **ஏ.** *அச்சாகாதது.*

தொடக்கம்

பூமேவு முல்லைப்புயன் குமரரெட் டேந்திரன்மேல்
பாமேவு தென்னிளசைப் பள்ளிசையை விள்ளுதற்கு
மாமேவு முன்னால்வாய் வல்லபையை யுற்றமுக
கோமேவு தந்தையருள் குஞ்சரமுங் காப்பாமே

பொன்மருவு புயாசல வீமன்
புகழ்மருவு மகாசிலை ராமன்
பூரண சந்திர வதன விலாசன்
புனித வுல்லாசன்

சேந்தனருள் பூண்டுபுகட் சேர்குமரரெட் டேந்திரகுண
சாந்தனுக்கு வாய்த்தவைகைத் தன்னாட்டின்
வண்மையெல்லாம்
நாந்துதிப்போ மென்றுரதி நங்கைதங்கை பொங்கமென
வேந்திளையார் பள்ளியர்வந் தெய்தியது சொல்வேனே (5)

முடிவு

இனியக் காளுக்குந் தங்கச்சிக்குந் தர்க்க மாகுமோ
புத்திபுத்தி தென்னிளசை மூத்த பள்ளத்தி
பிழை பொறுப்பவ ரேபெரியோர் பூத லத்திலே
சத்திய வசனமிதுவே சின்னப் பள்ளத்தி
பள்ளனுடன் நாமிருவருஞ் சார்ந்து வாழலாம்
வாழ்வதற்கோர் தாழ்வுமில்லை மூத்த பள்ளத்தி
நாளு மனநன்மை மன்னுயிரைக் காக்குங் கண்டாயே
வேளிளசைக் குமரரெட் டேந்திரன் வாழ்க
வாழி யென்றுமிக மிகமகிழ் வோடு புகழ்வமே (209)

குறிப்புரை

குமர ரெட்டப்ப மகாராசா அய்யன் அவர்கள் பெயரில் எழுதப்பட்ட இப்பள்ளுநூல் மூத்தபள்ளிக்கும் இளையபள்ளிக்கும் ஏற்படும் சண்டைகளைக் கூறி இறுதியில் இருவரும் ஒன்றாய் இணைவதைக் காட்டுகிறது. கடவுள் வணக்கத்து டன் நூல் தொடங்குகின்றது. மூத்தபள்ளி இளையபள்ளி இரு வரும் இராசாவின் பெருமை கூறல், அவர் வரலாறு, நாட்டுவளம் கூறல், இராசா பணத்தை வாரி வாரி இறைக் கின்றார், நிலத்தைப் பிறருக்கு எழுதி வைத்து விடுகிறார், இவரை நம்பி வந்த என்னைத் தவிக்க விடுகிறார் என்பதுபோல் இளையபள்ளி மன்னனை ஏச, மூத்தபள்ளி அவரது செயற்பாடுகளின் நியாயத்தை விளக்கிச் சரியான காரணத்தைச் சொல்லுகிறாள். இங்ஙனம் பள்ளுகளுள் ஒருவருக்கொருவர் ஏசி, இறுதியில் பள்ளனுடன் சேர்ந்து வாழ்வதாகவும், பாட்டு டைத் தலைவனான எட்டப்ப இராசாவின் பெருமை ஆங்காங்கு அவர்கள் வாயிலாகக் கூறுவதாகவும், சிந்தும் விருத்தமும் விரவிவந்தும் நூல் அமைகிறது.

## 370. ஏகாம்பரநாதர் தேவாரம்

**அ.** 526:847; **ஆ.** *138 - 140* ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

இச்சிப்பார் நெஞ்சி லிருப்பான் தானும்
யேவவிருந் தாளாகி யியலு வானும்
உச்சிதமாய்ப் பதினா லுலகாள் வானும்
உன்னைதன்ன மாமுனிவர்க் குரைசெய் வானும்
பச்சமதாய் யன்வடிவாய்ப் பயனும்
பருந்திகழன் பூதப்பன் விண்ணும்
கச்சியொரு காவடியில் கடயு ளானும்
காமாக்ஷி பூசித்த கம்பந் தானே (1)

முடிவு

செங்காடு வெங்கானஞ் செருவானும்
சிராப்பள்ளி ராடு துரத்தி னானும்
மங்காத வாழ்வுஞ் சூது யில்லான் தானும்
மயிலனகர் நெல்வேலி வள்ளல் தானும்
சங்காடு வெங்காட்டுத் தம்பி ரானும்
சாயக்காடு முதுகின்றான் வாங்கு வானும்
வங்காள வடுவாக பெலிகொள்ளு வானும்
காமாக்ஷி பூசித்த கம்பந் தானே (10)

முற்றும்

குறிப்புரை

**பத்துப் பாடல்களில்** ஏகாம்பரநாதர் பெருமை, அருட்குணம் எடுத்துரைக்கப்படுகின்றன.

## 371. ஒற்றியூர் ஒருபா ஒருபஃது

**அ.** 76:154; **ஆ.** *1 - 5* ஏடுகள்; **இ.** 17 x 2.5 செ.மீ.; **ஈ.** *8 - 10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை; இதுபோன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பெருநில மடந்தை யியல்பினி லுதித்த
பொரு கடனமே கனிமுக மெனப் பொலிந்த
வொற்றி மான கருடையோ யுருவின்
பெற்றி யொன்றே பெற்றெரி யாரே
மின்னிய மேகத்துப் பிறங்கு நின்சடையே

மன்னிய வண்டநின் சென்னியின் வடிவே
பாலகன் பருதி பனிமதி தன்னோடு
மூவகைச் சுடர்நின் னுதனோர் நாட்டந்
தண்ணொளி யாரந் தாரகைக் கணமே
விண்ணவர் முதலாய் வேற்றோ ரிடமாய்க்
கொண்டுறை விசும்பே கோள் நின்னாக
மெண்டிசை திண்டொளி ருங்கட லுடையே
யணியுடை யல்கு லவனி மண்டலமே
மணிமுடிப் பாந்தனின் றாளினை
யொழியா தோடு மாருத முயிற்பே
வழுவா வோசை முழுதுநின் வாய்மொழி
வானவர் முதலா மன்னுயிர்ப் பந்த
வூனமில் லான் தொகுதி நின்றுணரவே (1)

முடிவு

காலற் சீவிய கழலோய் போற்றி
மூலத் தொகுதி முதல்வா போற்றி
யொற்றி மானக் கருடையோய் போற்றி
முற்று மாகிய முதலவா போற்றி
யணைதோறுஞ் சிறக்கு மமுதே போற்றி
யிணைபிரிதிவி ல...ாவீசா போற்றி
யாரவஞ் செய்பவர்க் கணியோய் போற்றி
தேர்விலன்சுவைத் தேனே போற்றி
வஞ்சனை மாந்தரை மறந்தோய் போற்றி
நஞ்சினை யமுதாய் நயந்தோய் போற்றி
விரிகடல் வையக வித்தே போற்றி
பொருவிடை வளமாய்ப் புணர்ந்தோய் போற்றி
காண முள்பொருட் கருத்துறை செம்மைக்
காணி யாகிய வானே போற்றி
சந்திரா போற்றி தழலோய் போற்றி
யிந்திரா போற்றி யிறையவா போற்றி
அமரா போற்றி .... போற்றி
குமரா போற்றி கூத்தா போற்றி
பொருளே போற்றி போற்றி யென்றுனை
நாத்தழும் பேற நவிற்றி னல்லது
யேத்துதற் குரியாரி யாரு நிலத்தே(10)

குறிப்புரை

ஒற்றியூர் ஒருபா ஒருபஃது எனும் இந்நூல் ஒன்று முதல் பத்துப் பாடல்களைப் பெற்று முழுமையாக உள்ளது. பட்டினத்துப் பிள்ளையாரின் திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது இவ்விலக்கிய வகையில் முதல் நூல் ஆகும்.

## 372. கடம்பாடி சின்னம்மை மாலை

**அ. 341:573; ஆ.** *15* ஏடுகள்; **இ.** 20 x 2.5 செ.மீ.; **ஈ.** *4 - 6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; தெளிவில்லாத கையெழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

கார்நிறை மாபொழிற் காசினி யிற்கடம் பாடலியில்
தேர்நிறை மாரி கவுமாரி சின்னம்மை சீர்த்தி செப்பத்
தார்நிறை கொன்றைச் சடிலக் களிறிடஞ் சார்பிடிமின்
சீர்நிறை செல்வ வினாயகன் பாதந் தினந்துணையே (1)

சீர்பெறு சூலங் கபால மரவுஞ் செழித்த சக்தி
ஏர்பெறுஞ் சக்கரம் கிள்ளை கரத்தி யிணையில் சென்னி
பேர்பெறு கண்ணுங் கமலா லனை மும்பெறு மங்கலத்
தேர்பெறு தாள்தொழக் கார்கடம் பாடலிச் சின்னம்மையே
(1)

முடிவு

கார்வாழி மாலயன் கஞ்சமின் வாணி பொன்வாழிகன
நீர்வாழி நான்மறை நின்மலன் பார்வதி வாழிகுகன்
ஊர்வாழி கிராமத்தி லுள்ளோரும் வாழி யுகந்த துற்கி
சீர்வாழி வாழ்க திரிசூலி சின்னம்மை வாழ்தெய்வமே (40)

குறிப்புரை

ஏடுகளுக்கு எண்கள் இல்லை. மூன்று காப்புப் பாடல்கள் உள்ளன. ஒன்று முதல் 40 பாடல்களைக் கொண்டு கட்டளைக் கலித்துறை யாப்பில் நூல் இலங்குகிறது. கடம்பாடியில் எழுந்தருளியுள்ள கிராமத் தெய்வமான சின்னம்மை உலகத் தைப் படைத்தவள், சக்தி வாய்ந்த ஞானசக்தி, பராசக்தி, பரசுராமனை ஈன்ற தாய், மக்களின்

நோய் தீர்ப்பவள் எனப் பலவாறு போற்றப்படுகிறாள். அம்மனைப் பற்றிய வருணனைகள், சிறப்புகள், சிறுசிறு வரலாற்றுச் செய்திகள், அம்மனின் கருணை, சக்தி, அருள் பாலிக்கும் தன்மை முதலியனவும் இடம் பெறுகின்றன. இந்நூல் *1982*–இல் இந்நிறுவன ஆய்வேடாக அளிக்கப் பட்டுள்ளது.

## 373. கந்தர் உலா முதலியன

**அ. 463:711; ஆ.** *1 - 111* ஏடுகள்; **இ.** 39 x 3 செ.மீ.; **ஈ.** *4 - 5* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

சீராறு ஆறுமுக தேசிகன் நின்அருளால்
சோராமற் கந்தருலா சொல்லுதற்குப் - பேராறும்
தந்திமுகத் தைங்கர சங்கமறுப் பெய்திலகு
கந்தர்க்கு முந்தினவன் காப்பு

பூவும்புத் தேழுலகும் போத்துதிரி நேத்திரமாம்
தாவுபனி யோர்பிறைமண் பாக்கினியே - மேவுபொழிற்
செய்யாறும் வேணி....

முடிவு

காலத் துணர்வாம் கருத்து பிசகாமல்
பாலனா மெற்குதவிப் பாங்குடனே - வேலவனே
சித்தம் களிக்க தெரிசனம் தந்தடியார்
உற்றசிவ மாமதனை யொற்றுறசெய் - சத்தமறை
யாருமே லறவும்யுணர்ந்து யாறுமுக ஞானியர்தம்
கூறுமட வாலயம்வாள் கோபுரமே - வீறுமுரு
கய்யா யிதனை அரையுமன் பாயவர்க்கு
துய்யபத மேயதே சுகம்

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

ஆகக் கண்ணி *126*.

குறிப்புரை

பொருண்மைச் சிறப்பால் பொலிவு பெற்று விளங்கும் சில சிற்றிலக்கியங்களுள் உலா இலக்கியமும் ஒன்று. இந்நூல் முருகர் பெருமான் மீது பாடப்பெற்ற உலா இலக்கியமாக அமைகின்றது. 126 கண்ணிகளை உடையது. பிற உலா இலக்கிய நடையைப் பின்பற்றி அமைகின்றது. முருகப் பெருமான் வீதியில் உலா வரும்போது எழுபருவப் பெண்டிரும் காதல் கொண்டு வாடுதல், அப்பெண்டிரின் வயது, மனநிலை, முருகன் உலா வரும் ஊர்தியின் சிறப்பு, அவனது மலை, நதி, ஊர், தார், முரசு முதலானவை நூலுள் விளக்கப் பெறுகின்றன.

## 374. கந்தரந்தாதி

**அ.** 36:60; **ஆ.** *1 - 17* ஏடுகள்; **இ.** 35.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *8* வரிகள்; **உ.** நன்று; ஓரிரு துளைகள்; இறுதி ஏடு உடையும் நிலை; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

வாரணத் தானை அயனை விண்ணோரை மலர்க்கரத்து
வாரணத் தானை மகத்து வென்றோன் மைந்தனைத்துவச
வாரணத் தானை துணைநயந் தானை அயல்துணைய
வாரணத் தானை திறைகொண்ட யானையை வாழ்த்துவனே

முடிவு

செய்ய செந்தாமரை யில்லாத மாதுடன் செந்திணைசூழ
செய்ய செந்தாமரை மானார் சிலம்பிற் கலந்துறையுஞ்
செய்ய செந்தாமரை யென்னுங் குமாரர் சிறுசதங்கை
செய்ய செந்தாமரை சேர்வதென் றோவினை செய்துவந்ததே

குறிப்புரை

இந்த அந்தாதி இலக்கிய வகை, சிற்றிலக்கிய வகைகளில் ஒன்று. மடக்கு (யமகம்) அணியைப் பெற்று அமையும் இந்நூலில் 42 பாடல்களும், அவற்றிற்கு எளிய நடையில் அமைந்த பதவுரையும் உள்ளன. 43 ஆம் பாடலின் பதவுரை குறையாக உள்ளது. கந்தபெருமானாகிய அறுபடை

முருகனின் புகழ்பாடும் துதி இலக்கியமாக அமைந்துள்ளது. முருகனின் பராக்கிரமத்தைப் புகழ்தல், பெருமைகளைப் பேசுதல், பிரார்த்தனை செய்தல் போல்வன வேண்டுதலோடு பாடப்பட்டுள்ளன. முருகனின் புகழைக் கூறுவதற்கும் அதனை மேலும் மெருகூட்டித் துதி செய்யவும் பிரம்மா, சிவபெருமான், திருமால், இந்திரன் ஆகியோரின் புகழையும் சுட்டி, அவற்றிற்கும் மேலானவன் முருகன் என்ற கருத்தமைப்பிற்கு ஏற்ப, புராணக் கதைகளை யும், புனை கற்பனைகளையும் கூறித் தொண்டர்களை நெறிப்படுத்துகின்றது.

## 375. கபிலர் அகவல்

**அ.** *141:315;* **ஆ.** *171 - 177* ஏடுகள்; **இ.** 24.5 x 3 செ.மீ.; **ஈ.** *10 - 11* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

சந்திரர்கள் சூரியர்கள் தம்முருவம்
சத்தியுளதோ சிவமுள்ளதோ
யந்திரத்தே இயங்குகிறதோ யணுவுருக்கொண்
டியங்குகிறதோ காலே
எழுந்தஞாயிறு மேலேயியங் கிப்போந்துதோ
கீழே யியங்கிப் போந்துதோ
விடிந்து தீந்துதோ யன்றி
நூலோடுமோதிப் பறந்துதோ
காலாரக் கிஷநாலா மெழுத்தை
நவவெழுத்தை யுணர்ந்திலீர்
அகார உகாரஎழுத் தையுணர்ந்தோ
ராதித்த னுயிர்ப்பையறிந் தோரதனால்
வடகடலிற் தென்கடலிற் கீழ்க்கடலில்
மேல்கடலில் எழுவானிற் சந்திரனில்
சூரியனில் திடலதிடலா யோனியர்தன் கண்ணுக்கு
நேரொத்து நேராய்நிற் பதங்கேதோ

முடிவு

கள்ளிப்பாலும் பசுவின்பாலும் தன்னி லொக்குமோ
ஊணி லொக்குமோ வுணர்வி லொக்குமோ

காக்கைக் கொருகலக் கபிலன் சொல்லே
யொருபனை யிரண்டு பாளையொன்று
நொங்கொன்று கள்ளூ யருவிரா தென்பீராகி
லதுவு நொங்கதுவு மாமே
பரிவுட னுலகுக்கெல்லாம் பிரமனே தந்தையானா
லொருகுல முயரு மோதா
னொருகுலந் தாழுமோதா னெருதினுக் கெருமைதன்பா
லேறினால் தன்போ லாகா
வருகிலம் மறையோன் கெற்பம்
வந்ததும் பறைச்சி யாலே
ஆறுசமையமு நாலு வேதமு மனைத்துனின்பின் கூறினர்

கபிலரகவல் முற்றும்

**குறிப்புரை**

இந்நூல் கபிலரகவல் என்னும் பெயருடையது ஆயினும் சந்தப் பாடல்களைப் போன்ற வடிவில் ஐந்துசீர், ஆறுசீர் களைக் கொண்டதாய் நூல் வடிவம் பெறுகிறது. உடலுக்குத் தேவையான பல பொருள்களும் ஒன்றோடு ஒன்று ஒப்புமையுடையன அல்ல அவையாவும் இறைவன் தன்மையவை என்னும் கருத்துகளைக் கபிலர் எடுத்துக் கூறுவதாய் இந்நூல் அமைகின்றது.

## 376. கயிலாசநாதர் சதகம்

**அ.** 520:809; **ஆ.** *1 - 51* ஏடுகள்; **இ.** 46 x 2.5 செ.மீ.; **ஈ.** 4 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

**தொடக்கம்**

சீர்மேவு திங்களணி தேவனே வண்மைபெறு
தில்லைவளர் நடராசனே
செங்கண்மா லயனுநின் னடிமுடிகள் காணாம
றேடிய மகாதேவனே
தார்மேவு பொங்கர வணிந்தசிவ சம்புவே
சங்கரா கங்காதரா

தயாபர விநோதமெய்ஞ் ஞானச் சொரூபனே
சண்முகனை யீன்ற கோவே
யோர்மேவு முப்பத்து முக்கோடி தேவர்க
ளிறைஞ்சிடு மலர்ப்பாதனே
யெழின்மிகு கரத்தினின் மாண்மழு தரித்ததோ
ரெந்தையே யெனையாளுவாய் (1)

முடிவு

கார்வாழி யைங்கரன் நாள்வாழி முருகவேள்
கழல்வாழி நாரண னெனுங்
கருமுகி னிறக்கடவுள் வாழியெவ ரும்பரவு
கயிலையங் கிரிநாதரென்
போர்வாழி தர்மவர்த் தனியம்மை வாழியா
னுரைத்தவிச் சதகம் வாழி
யுவப்புடன் கற்றுளோர் கேட்டுளோர் வாழியவ
ருறவினரும் வாழி தானே (101)

## குறிப்புரை

'சீரார் கயிலாச தேவன்மிசை' எனத் தொடங்கும் காப்புப் பாடலையும், இறுதியாக அமைந்த வாழ்த்துப் பாடலையும் தவிர்த்து நூறு பாடல்கள் உள்ளன. அச்சான நூலைப் போலவே அமையினும் பல வடிவ வேறுபாடுகள் உள்ளன.

## காட்டு

| சுவடியிலுள்ள பாடல் தலைப்பு | | அச்சுநூலிலுள்ள பாடல் தலைப்பு | பாடல் எண் |
|---|---|---|---|
| கெருவியராவோர் | – | கர்வியாவோர் | 35 |
| களாவோர் | – | கருமிகளாவோர் | 38 |
| கெருட தெரிசன பலன் | – | கருட தரிசன பலன் | 39 |
| வாத்தியங்களாவனம் | – | வாத்தியங்களாவன | 43 |
| எகமகிழ்ச்சி | – | சுகமகிழ்ச்சி | 48 |

சிதம்பரம் பிள்ளை என்பார் இயற்றிய இந்நூலில் செல்வச் சிறப்பு, கல்விச் சிறப்பு, குருவினியல்பு, வைத்தியரியல்பு, தொண்ணூற்றாறு தத்துவம், ஆடுமாடு கொள்ளாத நாள்,

உயிர்விடு நாளின் தோசம், சூரியகலை, சந்திரகலை, அசுவ லட்சணம், சாமுத்திரிகா லட்சணம், காகநூல், ருது நட்சத்தி வார பலன் முதலான தலைப்புகளில் செய்திகள் கூறப்படு கின்றன.

## 377. (கயிலையங்கிரி நாதர் சதகம்)

**அ.** 309:534; **ஆ.** *8* ஏடுகள்; **இ.** 48 x 2.5 செ.மீ.; **ஈ.** 5 வரிகள்; **உ.** *18, 33* என்ற இரு ஏடுகளைத் தவிர மற்றவற்றின் ஓரப் பகுதிகள் சிதைந்துள்ளதால் ஏட்டு எண்ணும், பாடல் எண்ணும் சிதைந்துள்ளன. **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

தனையே புகழ்ந்து பிறர்யாரையு மிகழ்ந்துடுஞ்
சண்டியே தன்கெருவியாம்
சத்திரங்காத் தெருதுபோற் தலையை யாட்டிடு
சழக்கனே மதகெருவியாம்
வினையங்களோடு பெரியர் செய்நூ லழிக்கின்ற
விகடனே தமிழ்க் கெருவியாம்
வேசையர்க ளாசையான் மனைவியை
வெறுப்பவன் வெகுமமதை சேர் கெருவியாம்
அனைவோரு மறியவே மதுவுண்டு திரிபவன்
ஆங்கார மிகு கெருவியாம்
அஷ்ட திசையினவன் துஷ்டத்தனஞ்
செய்யிலதி காரகெருவி யென்பார்
கனமான கிருபைவைத் தெனையாண்ட முதல்வனே
கற்பகவி ராசமேவுங்
கங்கைபுனை யீசனே மங்கை மகிழ் நேசனே
கயிலையங் கிரிவாசனே

முடிவு

பூதங்க ளைந்ததாம் ஞானவிந் திரியமாம்
பொறியைந்து புலனைந்ததாம்
பொல்லாத தொழில்கரும விந்திரிய மைந்ததாம்
புகழ்பெறுங் கரணம் நாலாம்

தாதுவேழ் குணமூன்று பிலமுமோ ரைந்ததாம்
சாத்திடுவிகார மாறாம்
தழைத்திடும் வ...வாரு பா னென்பர் மண்
டலம்தானு மொரு மூன்றதாகும்
ஆதார மாறாகும் வாசல்கரு மொன்பதா
மவத்தையைந் தாகுமிக்க
வருமைசேர்... நாடி பத்தாங் கோசமைந்
தாய்பிணியு மூன்றதாகும்
காதல்செய் கருவியது தொண்ணூத்தோ
டாறென்பர் கற்பகவி ராசமேவுங்
கங்கைபுனை யீசனே மங்கைமகிழ் நேசனே
கயிலையங் கிரிவாசனே

குறிப்புரை

இருந்துபிறந்தவர், செல்வச்சிறப்பு, லட்சுமி இருப்பிடம், கெருவப்படுவோர், அரிதெனல், அரசர் சிறப்பு, வைசியர் சிறப்பு, வேளாளர் சிறப்பு, வாத்தியங்களாவன, தொண்ணூற்றாறு தத்துவங் கள், மூதேவி இருப்பிடம் என்பன போன்ற தலைப்புகள் உள்ளன. கயிலையங்கிரி யீசரைப் பாட்டுத் தலைவராகக் கொண்டு துதித்தல், நீதி எனும் பொருண்மைகளில் பாடப் பட்ட இந்நூலில் குறைந்த பாடல்களே உள்ளன. இச்சதக இலக்கியம் ஆணவம், கன்மம், மாயை எனும் இயல்புகள் மக்களிடம் எங்ஙனம் அமைந்துள்ளன என்பனவற்றைச் சுட்டி இவை நீங்கி மனம் தூய்மையடைய கயிலையங்கிரி ஈசனை வழிபட வேண்டுமெனக் கூறுகிறது.

## 378. காஞ்சிபுரம் காமாட்சியம்மன் பேரில் பதம்

**அ.** 526:830; **ஆ.** *61* ஆவது ஏடு; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *6 - 7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

நூத்துக்கால் மண்டபத்தில் வீத்திருந்து காண
நூறாயிரங் கண்கள் வேணுமே

பூத்தகமல வாவி பொருந்தும் வளர்புலியூர்
பூமிமகிழ் நிறவாமி பரமர்தன் னேமியெனுஞ்
சிவகாமி யம்மன் வந்து நூத்து

முடிவு

அம்பல வாணர்தன் மகிழ்பாரி தில்லை
அமுர்த கவிப்பணிந்த அலங்காரி மேவும்
அல்லிமத னொருவில்லி தனைவென்ற வேள்வி
எவருக்கும் மெல்லியழகுள்ள சொல்லி நிறைந்தருள்
செல்லிமகிமை சேர்நல்லி சிவகாமவல்லி யம்மன் வந்து
நூத்து

குறிப்புரை

காஞ்சிபுரத்தெழுந் தருளியுள்ள காமாட்சியம்மனின் அழகுத் திருக்கோலம், அருட்செயல்கள் நூலுள் விளக்கம் பெறுகின்றன.

## 379. காடவர்கோன் வெண்பா

**அ.** 76:170; **ஆ.** *132 - 135* ஏடுகள்; **இ.** 17 x 2.5 செ.மீ.; **ஈ.** *8 - 10* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; ஏட்டின் சில பகுதிகள் சிதைந்துள்ளன; **ஊ.** நன்று; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

ஒடுங்குகின்ற நீர்மை யொழிதலுமே யுற்றாருங்
கொடுசின்றார் மூப்புங் குறுகித்து - நடுகின்ற
நல்லசிற் றம்பலமே நண்ணாமுன் நன்னெஞ்சே
தில்லைச்சிற் றம்பலமே சா (1)

முடிவு

தஞ்சாக மூவுலகு மாண தெலையளித்தி
டெஞ்சாமற் பெற்றிடினும் யான்வேண்டே - னஞ்சங்
கரந்துண்ட கண்டன்றன் யொற்றியூர் பற்றி
யிரந்துண் டிருக்கப் பெறின் (22)

குறிப்புரை

**ஒன்று முதல் 22 பாடல்கள் உள்ளன.**

## 380. குராவடி வேலர் வண்ணக் குழிப்பு

**அ.** **526:837;** **ஆ.** *90 - 94* ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *6 - 7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

அனமேறிய னான்முகனைக் கரம் தட்டி
நிறையாகிய மாதிசை பெற்றவர்கன் சுற்றியிரு
கெஞ்சரண் தந்து தொழவுந் தரித லன்றிய
பதந்தனிலு மொன்றை மாறி விண்ணோர்கள்
... .... .... ....
மதங்கி கொழுமன்பருட பங்கில்வாழ் பெரியாயி
மதலை சரவண பவவின் வடிவினோர்

முடிவு

சொல்வருந்தினால் மடமாது
செயலோ வயனார் கையினிற் தலையெழுத்து
விடுமோ புவிமேலிது விட்டகுறை
பெற்ற மகளுங் களவு கொண்டவனு
மன்பொடு கலந்து மகவும் பெறுவரேன்
சொலானவர் வாழி
விதியை யனுசரிதமவர் - மதிகளே (1)

முற்றும்

குறிப்புரை : குராவடி வேலர் வண்ணக் கொழிப்பு

முருகப் பெருமான் மீது பாடப்பட்ட துதி.

## 381. குற்றாலக் குறவஞ்சி

**அ.** **277:499;** **ஆ.** *27* ஏடுகள்; **இ.** 33.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *8 - 9* வரிகள்; **உ.** சிதைவு; முதலிலும் இடையிலும், இறுதியிலும் சில ஏடுகள் இல்லை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

முறுவலின் குறும்பால் முனிவரும் அடங்கச்
சமனிக்கும் உரையால் சபையெலாம் அடங்கக்
கமனிக்கு மவரும் கடைக்கணால் அடங்கக்
கொட்டிய உடுக்குகோ டாங்கிக் குறிமுதல்
மட்டிலாக் குறிகளும் கட்டினால் அடக்கிக் (ஏடு. 14)

முடிவு

வருக்கையார் திரிகூ டத்தில் மாமியார் மகள்மேற் கண்ணும்
பருத்திமேற் கையும் ஆன பான்மைபோல் வேட்டை போனாய்
கருத்துவே றானாய் தாயைக் கற்பித்த மகள்போல் என்னைச்
சிரித்தனை சிங்கா உன்னைச் சிரித்தது காமப் பேயே (175)

குறிப்புரை

இச்சுவடியில் திருக்குற்றாலக் குறவஞ்சியின் ஒரு பகுதி மட்டுமே உள்ளது. ஏட்டுஎண் பதினான்கிலிருந்து தொடங்கு கிறது. சில ஏடுகளின் ஏட்டெண்கள் சிதைந்து விட்டன. குறத்தியைத் தலைமகளாகக் கொண்டு படைக்கப்பட்ட இந்நூலில் குறவஞ்சியின் வருகை, மலை வளம் கேட்டல், மலைவளம் கூறுதல், நாட்டுவளம் கூறல், குறியின் சிறப்புகள், சிங்கியைத் தேடி சிங்கன் வருதல், சிங்கியின் அழகு, சிங்கன் புலம்பல் என்ற செய்திகளடங்கிய பகுதியே உள்ளது.

*447 : 694* என்ற எண்ணில் இடம் பெற்றுள்ள நூல் இந்நூல் போன்றதே.

முதலில் ஒரு சட்ட ஏடு உள்ளது. அதில் சிற்ப சாத்திரம் என்றுள்ளதால் அந் நூலிற்குப் பயன்படுத்த இருந்த சட்டத்தை இதற்குப் பயன்படுத்தியிருக்கின்றனர்.

## 382. கொடியிடை அம்மன் பேரில் பதம்

**அ. 526:842; ஆ.** *119* ஆவது ஏடு; **இ.** 20.5 x 3.5 செ.மீ;. **ஈ.** 5, 7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

எனையா தரித்தருள் பாரம்மா
விமையா சலம்அருள் கெவுரி
எனையா தரித்தருள் பாரம்மா
முனிநாத னென்னும் அகஸ்தியன் தொழும்
முல்லைநகர் மேவிய கொடியிடை
வல்லி வராக மதங்கினி (எனை)

முடிவு

மண்டலம் புகழ்பெரு மாட்டி
முல்லை மாசிலா மணியாள் கண்ணாட்டி

அண்ட ரெல்லாந் துதிக்கும் அமுர்த குணசத்தி
ஆதரி ஆஆ அந்தரி கொடியிடை
மாது மனந்த மனந்தன் சோதரி
எனையா தரித்தருள் பாரம்மா
விமையா சலம் அருள் கெவுரி
எனையா தரித்தருள் பாரம்மா

குறிப்புரை

கொடியிடை அம்மனின் பெருமை, ஆற்றல், அருட் செயல்கள், அவள் அருளை வேண்டிப் பணிதல் முதலியன கூறப்பெறுகின்றன.

## 383. கோபருவத மாலை

**அ.** **78:172; ஆ.** *1 - 5* ஏடுகள்; **இ.** 42 x 5 செ.மீ.; **ஈ.** 6 - 7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

அறுபத்துமூவர் கதைக்குப் பெரியபுராணக் கதையான படியினாலே அந்தப் பெரியபுராணம் வந்தவாறு அடிப்பூர் வோத்திரம் சொல்லுவது.

சீர்பெறு கங்கைகோ கிரிமாலை
    செப்பிய நூல்வழி பெரிய
பேர்பெறு புராணம் சேக்கிழாரும்
    பிரியமாய்ச் சொல்லிய வரலாறு

பார்பெரும் கதைதனைச் சோழன்
படித்திடும் போதிரு னாரை
ஊர்கணப்பியார் வரத்தினால் விளம்ப
வுலகில்வந் ததுமுரைப் பேனே.

என்பது,

முன்னொரு காலங்களிலே சோழபாண்டிய சேரனாளிலே மனுநீதி கண்ட சோழன் ராமாயண பாராயணம் பண்ணி வருகிறதுண்டு. அப்போது, சோழன் நித்திய பாராயண ராமாயணங் கேட்டு வருனாளையிலே அவரிடத்திலே ஒருமந்திரி சேக்கிழாரென்று ஒருவர் அதிகாரம் பண்ணி வருனாளையிலே தினமானம் ராசா கொலுவிலே கூடியிருந்து சகல தர்பாரும் பண்ணி ராசா ராமாயணங் கேட்கப் போகச்சே சேக்கிழார் என்கிற மந்திரி எழுந்திருந்து தம்முட வளவுக்குப் போய்விடுவர். அப்படிப் பலநாளுமிருக்கும் போது, ராசாவுக்கும் ...

முடிவு

அறுபத்து மூவர்களும் அன்பாய் அரன்பால்
பெறுமுத்திப் பெற்றப் பெரும்புகழைப்-பருவத்தம்சேர்
ஆதிசத்தி னாதர் பெரியம்மை பரிபூரணணார்
பாதமொத்துச் செய்யுமிந்தப் பா

என்பது,

பெரியபுராணக் கதையிலே சொல்லா நின்ற அறுபத்து மூவருட் பேறு பெற்ற அதிசயமான அரனிடத்திலே அன்பு பூண்டு பேறு பெற்ற பெருமையைக் கோபர்வத வாசகராகிய ஆதிசத்தீசர், பெரியநாயகி பரிபூரணமூர்த்தி இவர்களிடம் பாதாரவிந்தமென்னுமிருதய கமலத்திலே ஒருமையாய் இருந்து அந்த அனுக்கிரகத்தினாலே செய்யாநின்ற இந்தப் பாவாகிய கோபர்வத மாலை என்றவாறு.

குறிப்புரை

தொடக்கத்தில் எட்டு வெற்றேடுகள் உள்ளன. முதல் மூன்று ஏடுகளில் நூல் முடிகின்றது. 4, 5 ஆம் ஏடுகளில் இந்நூலுக்கு நான்கு காப்புப் பாடல்கள் உரையுடன் அமைகின்றன.

சுப்பிரமணியர், ஆதிசக்தி ஆகியோரின் அனுக்கிரகத்தால் இம்மாலை பாடும் பேறு பெற்றதாக இப்பாடல்கள் அமை கின்றன. இராமாயணத்தைச் 'செத்த பாட்டு' என்று மனுநீதிச் சோழனிடம் கூறிச் சென்ற சேக்கிழார் திருநாரையூர் பிள்ளையார் அருளாலும், சிதம்பரத்துச் சபாபதி அருளாலும் மன்னர் முன் வந்து பெரிய புராணத்தைப் பாடி, பின் கோபர்வதமென்னும் தலத்திலுள்ள பெரியனாயகி அம்மன் ஆதிசக்தி மீது இந்நூலைப் பாட முற்பட்டபோது 'ஆத்தி சூடி எழுது' என்று அசரீரி கேட்க, அவரும் ஆத்தி சூடியை *110* பொருளிலே *88* பாடல்களாகவும், *63* கதைகளை *22* பாடல்களாகவும் ஆக *110* பாடல்களாப் பாடி, கோபர்வத மாலையைச் செய்விக்கின்றார் என்ற செய்தி முதல் மூன்று ஏடுகளில் கூறப்படுகின்றது.

## 384. கோயில் வெள்ளாற்றுச் சுவாமி அம்மன் பேரில் திருஊசல்

**அ.** 53:80; **ஆ.** *1 - 2* ஏடுகள்; **இ.** 22.5 x 2.5 செ.மீ.; **ஈ.** *6* வரிகள்; **உ.** பொதுவாக நல்ல நிலைமை; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானது.

தொடக்கம்

பொன்சயில வெள்ளிமலை கால்க ளாகப்
    பொருவில்அண்ட கூடமதுத் திரம தாக
உன்னிஉரை மறைநான்கும் கயற தாக
    ஓங்கார ரீங்காரம் தொட்டி லாகத்
தன்னிகர்மால் சதுர்முகனும் வடந்தொட் டாட்ட
    சமீபமதிற் றும்புரரும் கீதம் பாட
மன்னவனா மல்லேசர் மாலை சூட்ட
    மகிழ்பார்வ தாம்பிகையே ஆடீர் ஊசல்

முடிவு

அட்டவீரட் டமதில் உயர்வ தான
    அந்தகா சுரனைச்சங் காரம் செய்து
துட்டரைநிக் கிரகம்செய் கோவ லூரில்
    துரையான வீரட்ட நாதரென்ன

மட்டிலாப் பேரின்ப மென்னை யாண்ட
மாகுரவற் கருள்செய்யும் குருவே இங்கு
அட்டியிலா தருள்புரிமல் லேசர்நாமம்
அணிந்தருட்பார் வதியுடனே ஆடீர் ஊசல்

திருமல்லிகார்ச்சுன மகாதேவர் தாமும் தேவி பார்வதி அம்மன் வாழி வாழி.

## குறிப்புரை

கோயில் வெள்ளாறு என்ற சைவத் தலத்தின் இறைவன் மல்லேசர். அவர் தேவி பார்வதி; அப்பார்வதியைப் போற்றும் ஊஞ்சலாக இது பத்துப் பாடல்களில் அமைகின்றது. இதன் முடிவில் அத்தலத்து இறைவனாம் சிவபெருமானைப் புகழ்ந்து பாடி அவனையும் ஊஞ்சலாடு மாறு அழைப்பதாக ஒரு பாடல் உள்ளது. வெள்ளாற்றுச் சுவாமியம்மனின் ஊஞ்சல் பல்வேறு முறைகளில் கற்பனையில் படைக்கப்படுகிறது. மேருமலை, இமயமலை கால்களாக, அண்டகோளம் உத்திரமாக, நான்கு வேதங்கள் கயிறுகளாக, மூலமந்திரங்கள் ஊஞ்சல் தொட்டிலாகப் படைக்கப்படு கின்றன. மேலும் இந்நாயகியுடன் மல்லேசர் எப்படி யெல்லாம் ஆடுகின்றார், நாயகியின் அருட்செயல் முதலியனவும் நூற்கண் பேசப்படுகின்றன பாடல் தொறும் **ஆடீர் ஊசல்** எனும் சொற்கள் பயின்று மகளிர் பாடுவதாக உள்ளது.

**இந்நூல், ஊஞ்சல் இலக்கியம் (1983) என்ற நிறுவன வெளியீட்டில் இடம் பெற்றுள்ளது.** இந்நூலும், திருக்கோவலூர் பெரிய நாயகி அம்மன் ஊஞ்சல் என்ற நூலும் இரு வேறுபட்ட நூல்கள். ஆயின் இரண்டிலும் முதல் பாடல் ஒத்து அமைகிறது. ஆயின் இந்நூல் மல்லேசர், பர்வதாம்பிகையைக் குறிக்க, அந்நூல் வீரட்டேசர், பெரிய நாயகியைக் குறிக்கிறது. இந்நான்கு பெயர்களைத் தவிர முதற் பாடலில் யாதொரு மாற்றமும் இல்லை.

## 385. கோயில் வெள்ளாற்றுச் சுவாமி அம்மன் பேரில் திருவூசல்

**அ.** **234:450;** **ஆ.** *27 - 29* ஏடுகள்; **இ.** 23 x 2.5 செ.மீ.; **ஈ.** *9 - 10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானது.

தொடக்கம், முடிவு 53 : 80 போன்றது

குறிப்புரை

*53 :* என்ற எண்ணில் அமைந்த நூல் போன்றதே இந்நூல்.

## 386. சங்கரானந்தக் களிப்பு

**அ.** **141:313;** **ஆ.** *163 - 166* ஏடுகள்; **இ.** 24 x 3 செ.மீ.; **ஈ.** *10 - 11* வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** படிக்கக்கூடிய எழுத்து. **எ.** முழுமையாகவுள்ளது; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பற்பல யோனி சுழன்றே பரிநாம ரூபம்பெறு
மிச்செகத்தைச்
சொற்பன மாகவறிந் தேதுணையாம் பாதத்தை யுணர்ந்திட
வேண்டி
நற்கலை யாகமங் கூறும் நவையற்ற சொல்லைக்களிப்
பெனப்பாட
கற்பக வாரண முன்னோன் கணபதியே யென்னைக்காத்
தருள்வாயே.

சங்கர சங்கர சம்பு

மூலா தாரத்தி னூடே தறிகோண்
முற்ற சுளியைத் திறந்து
காலா லங்கியை மூட்டிக் கலைமா
மதியைக் கலந்துள் ளுருக்கிப்
பாலா நின்னமு துண்டு பதுமா
சனத்திற் பரைநடங் கண்டே
மாலா யுச்சிவெளிக் கேவளர் சோதி
கண்டும் கிளந்திருந் தோமே (1)

முடிவு

ஆதார மாறுங் கடந்தே யதிலுள்ள
சகுன மனைத்தையுங் கண்டு
போதாரு நிற்குண மேவிப் பொலிவுற்ற
தாண்டவப் போத மறுத்தே
மீதான மென்னும் வெளியி லந்த
வெட்டவெளியாய் மெய்ப்பொருள் தானே
நீதானென நிலைகாட்டி நீச முற்ற
வானந்த நேர்மை தந்தானே (17)
நித்தியா நித்தியங் கண்டோர் நிலைநின்ற
சொல்லின் நினைவு தெரிந்தே
சத்தியஞ் சத்தியஞ் சொன்னோ மிதுசங்க
ரானந்தக் களிப்பா றிரண்டு
சித்தந் தெளிந்துணர் வோர்கள் சிவயோக
முக்கிய சிவபரங் கண்டத்து
வித்ததை யடைந்தே தடையாற்ற
வானந்தமாகி நிற்பாரே

சங்கர சிவசிவ சம்பு.

குறிப்புரை

முதலில் உள்ள காப்புப் பாடல் ஒன்றும், இறுதியில் பாடலொன்றும் இடம் பெறுகின்றன. இவை தவிர்த்து ஒன்று முதல் பதினோறு பாடல்களைப் பெற்ற சங்காரனந்தக் களிப்பு முழுமையாக உள்ளது. மூலாதாரம் தொடங்கி ஆறு ஆதாரங்களையும் தொடர்ந்து கூறி, கடந்த நிலையில் தாண்டவபோதம் அறுத்து நித்தியா நித்தனாகிய நிமலன் அடியை வணங்குவோர் பெருகின்ற ஆனந்தத்தை இந்நூல் கூறிச் செல்கின்றது.

## 387. சதமணிமாலை

**அ.** 20:39; **ஆ.** *1 - 15* ஏடுகள்; **இ.** 28.5 x 3 செ.மீ.; **ஈ.** 7 வரிகள்; **உ.** பொதுவாக நல்ல நிலை; ஆங்காங்கே பல துளைகள் உள்ளன; **ஊ.** நல்ல கையெழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

ஞான மாமத யானை மேவுறின்
மான மாயையஞ் சேனை யோடுமே
சிவனையு ளயர்குரு தேவன் தன்னையும்
மூவகை யொட்டி தொழுதுரை செய்கிற்பன்
யானவை யொருசிறிது மின்ஞானத் தீக்கைகள்
வைமன மொருங்கிய வறிஞர் கேண்மினோ (1)

இச் செய்யுள் சிறப்புப் பாயிரம்

மன்னிய வுயிர்மல மாயை வல்வினை
யென்னுளம் மலமற விருஞ் சிவத்துவந்
துன்னிய பயனொடுந் தொன்று ஞானமோர்
தன்னிகர் பரசிவன் நனதி டத்தனே (2)

முடிவு

சாற்று மென்மை சதமணி மாலையைப்
போற்றி ஆதிப் பொருடெரி கிற்பவர்
மாற்றி மூல மலத்தையெப் போதினுந்
தேற்று ஞானச் சுடரினைக் காண்பரே (66)

சுவல ருஞ்சொற் சதமணி மாலையைப்
புவிவி ரும்பப் புகன்றுரை செய்தனன்
சவிகொள் சங்கத் தமிழ்க்குழ விக்கொடு
செவிலி யென்ற சிவப்பிர காசனே (100)

பிற்குறிப்பு

திருச்சிற்றம்பலம் ஸ்ரீமுக வருஷம் பங்குனி மாதம் 23 ஆம் தேதி ஆதிவாரம் சதுர்த்தசி உத்திர நட்சத்திரம்... இந்தச் சுபதினத்திலே - காஞ்சிபுரம் பிள்ளைபாளையம்... சாமிகள் சதமணி மாலை நிறைந்தது. சூரப்பன் கையெழுத்து. கச்சியப்பத் தேவனடி உச்சி உளம் வைப்போம்.

குறிப்புரை : சிவப்பிரகாச சுவாமிகள் கட்டளையிட்ட
சதமணி மாலை

இந்நூல் உயிர்களின் மல, மாயைகளை எடுத்துக் கூறுவதாக அமைகிறது. பசுவாகிய உயிர், பாசத்தை நீக்கிப் பதியாகிய

இறைவனை அடையும் வழியைக் கூறுகிறது. சிறப்புப் பாயிரத்தைத் தொடர்ந்து சாயம்பு சூத்திரப் பொருள், மதங்க சூத்திரப் பொருள், விசுவ சாரோத்திர சூத்திரப்பொருள், மிருகேந்திர சூத்திரப் பொருள், கிரணசூத்திரப் பொருள் எனப் பல்வகையான விளக்க உரைகள் காணப் பெறுகின்றன. 100 பாடல்களும் உரையுடன் முடிந்துள்ளன. இச்சுவடி காஞ்சீ புரம் பிள்ளைபாளயம்... சுவாமிகள் என்பவர் எழுதியதாகக் குறிப்பிடப்படுகிறது. சூரப்பன் கையெழுத்து என்ற குறிப்பும் காணப்படுகிறது. இச்சுவடி நூல் 1991–இல் நிறுவன ஆய்வேடாக அளிக்கப் பெற்றுள்ளது.

## 388. (சதாசிவபூரண அந்தாதி)

**அ.** **197:399;** **ஆ.** 38 ஏடுகள்; **இ.** 22 x 3 செ.மீ.; **ஈ.** 8 வரிகள்; **உ.** சுமாரான நிலை; **ஊ.** தெளிவான எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

குணக்குன்ற மேயன்ப ருள்ளூ டுருவிக் குமறுமென்
மணக்குன்ற மேமுரு காவென வென்கர்ம மாற்றிடுங்கள்
கணக்குன்ற மேயெங்கு மாறெழுத் தாயுருக் காட்டிய பொற்
குணக்குன்ற மேயண்ட பிண்டமொன் றாய்நின்ற
சூத்திரமே (5)

முடிவு

வையஞ் சலமங்கி காலவான பலவுயிர் வான்முடிவேட்
டெய்யும் பரமுதல் சால்வதெல் லாம்எம்பி ரான்முருகோன்
தெய்யன் எனநின் றாடச் சிலம்போசை திருவிளையாட்
டைய்யநின் னங்கம தென்னங்க மாய்நின்ற ஆனந்தமே(102)

முற்றும்

குறிப்புரை

கதிகாட்டும் ஒரெழுத்து, பாசம், மாய்கை, சத்தியருள் நிலை, சூத்திரம், மாத்திரை, நான்முகன் சக்கரம், உருத்திரன் சேவடி, சதாசிவ பூரணம் போன்ற பல பொருள்களின் சிறப்பு கூறப்பெறுகிறது. சடாட்சர குண்டலி, நிட்கள தாண்டவி,

திரிபுரை போன்ற பல பெயர்களால் தேவி சிறப்பிக்கப் பெறுகிறாள். இறைவனாகிய சதாசிவனது புகழ் கூறுதலினா லும் நூல் அந்தாதி நடையில் முறையாக அமைந்துள்ள தாலும் 'சதாசிவ பூரண அந்தாதி' என்று பெயர் கொடுக்கப் பெறுகிறது. ஆனால் சுவடியுள் அப்பெயர் யாண்டும் இல்லை. முதல் ஏடு இல்லை. முடிவிலும் நூல்பெயர் அறிய இயலவில்லை.

## 389. சாந்தமாலை

**அ. 76:165; ஆ.** *119 - 121;* **இ.** 17 x 2.5 செ.மீ.; **ஈ.** *6 வரிகள்;* **உ.** *நன்று;* **ஊ.** *தெளிவு;* **எ.** *முழுமை;* **ஏ.** *அச்சாகவில்லை.*

### தொடக்கம்

திருவளர் மார்பக் கருநிறச் சேமம் றேடருந்தாட் வீசுமத்திக்
கருவிழி மறிபான் றேரு டேரி வேனவுங்கருணை
கூர்சிவப் பிரகாசக்
குருமணி யெனவும்மருமறை யெனவுங்கூறு பூவித்
ததினின்
றருளானிருவினை துரந்தேன் கரதலத் திருக்குமேந்
தலேசாந்த நாயகனே (1)

### முடிவு

ஒன்றேனு மறைக்க ணின்றுபல்வித மாமுல் கழித்துணர் வப்படிதா
னின்றுணர் குதலுந் துவிதமென்றஃது நீங்க வாங்குலக
வாதனைபோய்ப்
பொன்றிடு மேவிகற்ப வுருவமாம் புத்திபொருந் தும்பொழுது பாதியு
மென்றிசைத் தெனதுகர தலத்திருக்கு மேந்தலே சாந்த நாயகனே(14)

*சாந்தமாலை முற்றும்*

### குறிப்புரை

*சாந்த நாயகனின் சிறப்பை எடுத்துரைத்து, வாழ்த்திப் புகழும் பொருண்மையில் அமைந்து 'சாந்த நாயகனே' என்ற சொற் றொடரைக் கொண்டு பத்துப் பாடல்களும் முடிகின்றன.*

## 390. சிதம்பர நான்மணிமாலை

**அ.** 74:146; **ஆ.** 9 - 24 ஏடுகள்; **இ.** 22.5 x 2 செ.மீ.; **ஈ.** 6 - 7 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** நன்று; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பெற்றோர்ப் பிடிக்கப் பிழைத்துச் செவிலியர்கள்
சுற்றோட வோடித் தொழாநிற்கும்-மொற்றைக்கை
மாமறுகச் சீரியசிற் றம்பலத்தான் மான்றொடுபொங்
கோமறுகிற பேதைக் குழாம் (21)

முடிவு

சதுர்முகந்தன் றந்தைக்குக் கதிர்விடு
கடவுளாழி கொடுத்தபொருள் போற்றி
முயற்சியொடு பணிகென்று போற்றினு
மென்றனக் கிறைவவாற்ற கில்லேன்
போற்றி யாயினும் போற்றி
போற்றிநின் போலன்பூ வடிக்கே (40)

குறிப்புரை

நால்வகைப் பாக்களும் நாற்பது பாடல்களும் கொண்ட இலக்கிய வகையாக வருவது நான்மணிமாலை. புதுப்புது இலக்கிய வகைகளைப் படைக்க முற்பட்ட புதுமை வேட்கையின் விளைவால் தோன்றிய இலக்கிய வகைகளில் நான்மணி மாலையும் ஒன்று. இந்தச் சுவடியுள் உள்ள நான்மணி மாலை என்ற நூலும் நால்வகைப் பாக்களையும் 40 பாடல்களையும் கொண்டதே. ஆயினும் இச்சுவடியில் முதல் 20 பாடல்கள் இல்லை. இருபதாம் பாடலின் உரையுடன் சுவடி தொடங்கி நாற்பது பாடல்கள் வரை முழுமையாக உள்ளது.

## 391. சிவகாமியம்மன் பேரில் பதம்

**அ.** 526: 838; **ஆ.** *15* ஆவது ஏடு; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** 7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

ஏனம் பார்க்கு மெளியன் மீதினிலுனக்கு
இன்னம் வன்மமோ அம்மா
பானந் துலகியப் பயணந் தணிக்கையில் பாயும்
புலிசையில் லாயுந் திருமகள்
வானந் தினந்தொழும் ஆனந்த நடஞ்சேர்
வாமமொழி சிவகாம சவுந்தரி

முடிவு

பெருஞ் சமுசார சுமையை விட்டுத் தேறிலேன்
அதனால் திக்கு வேறிலை
வறுமை கவியப் போதித்திடாய்
விடில்பாத்த பேருக்குமோ மக்கள்மேல்
பெற்ற தாய்க்கும் வெறுப்பாமோ வறுத்தஞ்
சொன..ததை வருத்தந்தனக் கொப்பாமோ
ஏனம் பார்க்கு மெளியன் மீதிலுனக்கு
இன்னம் வன்மமோ அம்மா

குறிப்புரை

*சிவகாமி அம்மன் பேரில் பாடப்பட்ட பக்திப் பாடல்கள்.*

## 392. சிவகிரி குமரசதகம்

**அ. 274:496; ஆ.** *1 - 55* ஏடுகள்; **இ.** 43 x 2 செ.மீ.; **ஈ.** *3 - 5* வரிகள்; **உ.** நல்லநிலை; சில ஏடுகள் சிறிது சிதைந்தும் உடைந்தும் உள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானது (நிறுவன வெளியீடு, *1995*).

தொடக்கம்

சீர்மருவு நல்ல சிவகிரியில் வாழ்முருகன்
பேர்மருவு மிச்சதகம் பேசுதற்கு - நீர்மருவுஞ்
செஞ்சடையா னீன்றருளுஞ் செந்தாமரைக் கரங்க
ளஞ்சுடையான் சேவடிக்காப் பாமே

பூவுறை யுந்திரு மாமக னைத்திரு மார்பில்பு தைத்தவனும்
புண்டரி கத்தய னும்பணி பாதலர் பூதலர் மாதவரும்
காவுறை மீதில மேவிய விந்திரன் கடவுளர் மாமுனிவர்
கைதொழு தேற்றுவர் நின்திருக் கோயிலைக்
கண்டுவலம் வருவார்
சேவுறை நாதனு மீன்ற சிகாமணி தேன்மொழி வள்ளி மகிழ்
திண்புய னேவயி லேந்திய விக்கிரம செந்திலு றைந்தவனே
தேவரைக் காத்தவ னேயெனை யாளுடை தேசிக
தேசிகனே
சிவகிரி வேலவ னேமுரு காவென் தீவினை
நீங்கிடுமே (1)

முடிவு

மூலமதில் கணபதி வாழி சுவாதிட்டான
மூர்த்தி நான்முகன் வாழியே
முகுந்தன் மணிபூரகம் வாழியே யனாகதம்
முன்னோ னுருத்திரன் வாழி
மேலேவி சுத்தியில் மகேசுவரன் வாழியே
விளங்குமாகி கிளையி லேதான்
மேவுஞ் சதாவென் வாழியே யெனையாளு
மெஞ்ஞான குரவன் வாழி
நாலுமறை ஞாலமதி லோலமிட வாழியே
நாதாக்கள் நீடி வாழி
நல்லோர்க ளெல்லோரு மென்னாளும் வாழியே
ஞான சாத்திரம் வாழியே
ஆலமது உண்டருளும் நீலகண்ட னும்வாழி
அம்பிகை யும்வாழி வாழி
அழியாத பதம்வாழி சிவகிரியில் மேவிய
ஆறுமுக னடிகள் வாழி (102)

பிற்குறிப்பு

விரோதகிருது வருடம் மகரமாதம் 25–ஆம் தேதி மஞ்சக்குப்பம் ஜில்லா... கணக்கு அலங்காரப்பிள்ளை குமாரன் சுப்பராயப் பிள்ளை நெட்டெழுத்து.

காப்பு வெண்பா 2, பஞ்சரத்தனம் பாடல் 5, சிவம் செய்யுள் 3, சதகம் பாடல் 102, வாழிப்பாடல் 1, ஆகச் செய்யுள்

நூத்திப் பதிமூணு... செம்பலிங்க முதலியார் வாசிக்கப்பட்ட சிவகிரி சதகம்.

குறிப்புரை

பாடல்களில் காணும் பல குறிப்புகளைக் கொண்டு 'குப்பய்யன்' என்பது ஆசிரியரது பெயராக இருக்கலாம் என்பது தெரிகிறது. ஆறுமுக மெஞ்ஞான தேசிகர் பற்றிக் குறிப்பிடுவதால், நூலின் காலம் கி.பி.*1673* - *1769* க்கும் பின்னர் அல்லது அதே காலத்தைச் சார்ந்ததாக இருக்கலாம். இந்நூலில் ***113*** அறுசீர் விருத்தப் பாடல்கள் உள்ளன. முதல் ***13*** பாடல்களில் காப்புப் பாடல்களும், சிவகிரி தோத்திரமும், வினாயகர் பெருமையும், சிவகிரி தெய்வத்தின் பெருமையும் அடங்குகின்றன. புனத்தில் வள்ளியைக் கூடினது, சூரன் பிரதாபம், தெய்வத்தை உகந்தளியென்பது, ரூபத்தியானம், குருவாய் ரட்சிக்கச் சொன்னது, எழுவகைப் பேதப்பிறப்பு, ஸ்ரீமகள் பெருமை யைக் கொண்டாடுதல், காயநிலை, பரபிரமத்தில் மலையப் படுத்தெனக் கூறியது, தலங்கள் பெருமை, நாதவிந்து உற்பத்தி, சூரன்மாய்கை, பிரதாபம் செய்யார் வரலாறு, கங்காளநாதர் வடிவு, பாதாரவிந்தமெனக் களியெனக் கூறியது, எந்நேரமுரம் தியானம், அடியார்கள் வேறுபொருள் வேண்டாமை, செட்டிப்பெண் காட்சி, பெருமையில் சிறுமை, அர்ச்சுனன் தவநிலை காட்சி, மயில்வாகனன் விசையம், காயத்தின் புகழ், தக்கன் யாகம், சூரசங்கார மூர்த்தி பெருமை, சூரர் படையெழுச்சி, ஆட்டுக்கிடாய் வாகன மகிமை முதலான தலைப்புகளில் நூற்செய்திகள் பேசப்படு கின்றன.

## 393. சிவகிரி குமார சதகம்

**அ. தாள். *23:54*; ஆ.** *12* பக்கங்கள்; **இ.** குறை; **ஈ.** இந்தத் தாள் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பூமேவு சரவணப் பொய்கையி லுதித்தரன்
புளித்தி ருச்செ விதனிற்
போதனை யுரைத்ததும் வேதமுத லாகம
புராணி மிகதுதி செய்வதும்

தேமேவு மலர்கடப் பந்தா ரணிந்ததுந்
செங்கை யிலேவேல் புனைந்ததுந்
தேவர்சிறை மீட்ட வர்தெய்
வானை யைப்பு ணர்ந்ததும்
பாமேவு செந்தமிழ்க் கவிவாண ரேத்தவும்
பலகலை யுணர்ந்த பெரியோர்
பரமென்று யேத்தவும் வுலகங் களிமேற்
பார்த்து யர்கிரி மேவிய
மேவு தரிணியோர்க் கருள்பொழியு மேகமே
கோவ னகரா றுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமர சரவண முருகனே (1)

முடிவு

அந்தாதி யுரைசெய்த அபிராமிப் பட்டரை
யாண்டவளு மன்னையாமே
ஆழியிற் பிறந்திடு மாலகா லந்தனை
யருந்தன வனப்பனாமே
வந்தான தேவர்கள் முறையிட்ட தற்காக
வாரிதனை மந்திரத்தால்
வளமாக வேகடைந் தமுர்தமது வுதவிய
மாயவனு மாமனாமே
தந்தாயுதங் கொண்டு வடமேரு கிரிதனைத்
தன்கயில் யேடதாக்கி
தவமுனி வருரைசெய்த பாரதந்தனை யெழுது
தந்திமுக னண்ணனாமே
குந்தாயு தங்கொண்டு வந்தானை வென்றவா
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே (48)

குறிப்புரை

**ஒன்று முதல் 48 பாடல்கள் உள்ளன.** இடையில் 7 முதல் 10 வரை பாடல்கள் இல்லை. சிவகிரியில் எழுந்தருளியுள்ள குமரசரவண முருகனைப் போற்றிப் பாடல்கள் பாடப்பட்டுள்ளன. உடலைக் கூறியது, மனத்தின் செய்கை, முருகன்

பெருமையைக் கொண்டாடுதல், திருவடிகள் பெருமை, அருள் தந்து ரட்சிக்கச் சொல்லியது, காயநிலை, பரபிரமத்தில் மலையப்படுத்தெனக் கூறியது, தலங்கள் பெருமை, நாதவிந்து உற்பத்தி, சிவத்தின் பெருமை, சூரன் மாய்கை, வள்ளியம்மை அழகு முதலான செய்திகள் இப்பகுதியில் இடம் பெறுகின்றன.

## 394. சிவப்பிரகாச வெண்பா

**அ.** ***228:441;*** **ஆ.** *38 - 43* ஏடுகள்; **இ.** 24.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *7 - 9* வரிகள்; **உ.** ஏடுகளில் துளைகள் உள்ளன; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

வாக்குமனங் காணாத வாசர் மகோசரத்தை
யாக்கமழி வில்லா வறிவுருவைப் - பாக்க... தோ
ரொன்றும் பரம்பொருளை யுள்ளாமல் விள்ளாமல்
என்றுந் துதிப்பேனி யான்

தனையாருங் காணாத தத்சொரூபங் காணப்
புனையாத் திருமேனி போந்திங் - கெனையாண
நாதன் சிவப்பிர காச னளினமலர்ப்
பாதந் தொழுதேன் பணிந்து

முடிவு

ஈண்ட வெழுந்தருளி யெப்பொழுது மிப்படியே
யாண்டு கொளவருவை யாஇன் - மீண்டு
பிறக்கினுந் தாழ்வுண்டோ பிரியா விடைகொண்டு
இறக்கினுந் தாழ்வுண்டோ இனி (43)

*சிவப்பிரகாச வெண்பா முற்றுப் பெற்றது.*

குறிப்புரை

*சிவப்பிரகாசரின் வரலாறு கூறும் இந்நூல் சிவப்பிரகாச வெண்பா என்று பெயர் பெற்றது. 43 வெண்பாக்களால் ஆனது.*

## 395. சிவாயநம மகாதேவமாலை

**அ.** 5:20; **ஆ.** *2 - 84* ஏடுகள்; **இ.** 17 x 3 செ.மீ.; **ஈ.** *8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

திருமருவு கலியுகத் தினினான்கு மாயிரத்
தெழுனூறும் எழுபத்துநாற்
செல்லுமே லானந்த வாண்டுகாத் திகைதீப
தெரிசனக் காலந்தனிற்
திருவவதா ரஞ்செய்க வாறுமுக குருவெனத்
திருநீறினைத்த ரிக்குந்தென்
பருப்பத் தேசம்வாழ் குருஸ்தா
னிகர்செப்பும்வவய...
.. தேவருக் கரியதவ புத்திரச் சுப்பிர
மணியை யருமமவர் மனைவிசுப் பம்மாளும்
ஆறுமுக தேசிகரெனப் பெயரணிந்திடற்கு
அருள்திருச் செந்தூர்க்கு காருளகனவின்
அருட்படிக் கிருவரும் மிகழ்ந்து
யாத்திரை யாக வருகோவலின்
னருளுஞ் சண்முக நாம சத்தியக்கி
ஞானசிவ வாரிய மகாதேவனே (2)

முடிவு

திருவருண் மேனிவந்து யெண்பதீர் ஆண்டினில்
தென்கோவன் மூன்றா மபன்
செய்தமேல் ஒருபதாண்டு அம்பலவ ருமுனிபீட்சை
செய்கருங் கண்ம டத்துள்
மருவு சிவபூசை செய்துயான் நிற்குணவு
பாசனையாதி மன்னதீத வாழ்வு
மேன்மே லோங்கநாள் தோறுமே அச்செல்வ
மலிய விறுமாப் பெய்யுறாப்
பெரியநா யகிஅன்னை தந்தைவீ ரட்டேசர்
பொருட்செய்து வாழும் பிறபல

கோயிற் கேகி தெரிசனஞ் செய்தருள்
பிரகாச மாமிடமெலா
மருளும்மனு அனுபவ மதீதமேவிட
விருத்தன் பொங்கும் ஞானசேய்
அருளுரு சண்முக நாமசத் தியக்கி
ஞானசிவ வாரிய மகாதேவனே. (26)

குறிப்புரை

இந்நூல் சிவகிரி திருச்செந்தூர் சுப்பிரமணியக் கடவுள் அருளால் திருஅவதாரம் செய்த ஆறுமுக தேசிகர் என்னும் சுவாமிகளினுடைய வரலாற்றைக் கூறுவதாகக் காணப்பெறு கிறது. திருக்கோவலூரில் எழுந்தருளியுள்ள பெரியநாயகி அம்மனின் பாகராகிய வீரட்டேஸ்வர மகாதேவனைத் தரிசனம் செய்து ஞானம் பெற்ற சுவாமிகள் அவ் இறைவனை புகழ்ந்து பாடும் மாலையாக இந்நூல் அமைந்துள்ளது. சிவஆர்ய மகாதேவனே எனும் மகுட அடியை ஒவ்வொரு பாடலும் பெற்றுள்ளது. சிதம்பரம் முதலான பல தலங்களுக்கும் எழுந்தருளிய சுவாமிகள் பாலைய்ய சுவாமிகள் முதலான பல அடிகளாரைக் கண்டு தரிசித்த வரலாறு முழுமையாக உள்ளது. பாடல்களுக்கு விளக்கமான உரை காணப்படுகிறது. இறுதியில் அமைந்த சில பாடல்களுக்கு, சைவ தத்துவங்கள் அடங்கிய உரை கிரந்த எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளது. தொடக்க ஏடு இல்லை. இரண்டாம் பாட்டிலிருந்து தொடங்குகிறது.

## 396. சிவானந்த மாலை

**அ.** 64:92; **ஆ.** 35 - 65 ஏடுகள்; **இ.** 28 x 3 செ.மீ.; **ஈ.** 7 - 8 வரிகள்; **உ.** ஏடுகள் பல இடங்களில் சிதைந்து காணப்படுகின்றன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

இயானுந் தானும் தனிபோய் யானே
தன்றானே யானியானும் தனிமுதல் - அன்றே...
தானும் தனிமுதல் அன்றிங் கீதிவன்றன்
றானை தப்பாது இனி

இதன் கருத்து – மாணாக்கனுக்கு முத்தி நிச்சயப்படுத்த வேண்டி சமவாதியை எதிர்வாதியாய் வைத்துக் கொண்டவனையு மறுத்து மாயாவாதி முத்தியையு மறுத்தார் எனக் கொள்க.

முடிவு

> சும்மா இருக்கவைத்த சூத்திரமாம் சாத்திரத்தை
> விம்மிக் கதருவதும் வேலைகள் உத்தமறிவை
> நீட்டிப் பிடித்திருக்கும் நிட்டைகளும் ஞானிகள்முன்
> காட்டும் பரியா சகம்

மாயாவழி அனுபவம் - ஏக பாவனை எமகயோக, ஞானபூசை ஞான யாகமுந் தவமுஞ் சர்வ சக்தியும் ஞான அத்துவித கர்மம் எல்லாம் என்னுள்ளே, என்னையன்றி மற்றொன்றில்லை, ஒன்றுக்குள் ஒன்று உறவு பட்டது.

சிவன் அவனிற் கலந்திருந்தது – பூமியே சயனம், தரையே சயனம் ஞானியுனக்கிருப்பிடம், விதிவிலக்கில்லை; பகையுறவில்லை; ஞானிக்கு வினை யில்லை நின் மலரவத்தை; சகலப்படுவது, சுத்தப்படுவது, இருதைய மறியாமல் இகழார்கள், தத்துவத்துகை லட்சியம்,பொருந்த உபாயம், ஞானசாங்கியம், ஞானயோகம்.

குறிப்புரை

சிவானந்தமாலை எனும் இச்சுவடி 35 ஆம் ஏடு முதல் தொடங்குகிறது. ஆயினும் நூலின் தலைப்பும் தொடக்கமும் அவ்வேட்டில் காணப்பெறுகின்றன. யாதும் சிவமாதலான் நன்றுதீதுயென்று பற்றுதல், விடுதல் கூடாது. ஆதியில் அமைத்தபடி முடியும், ஊழின்வலி ஒருவரால் தடுக்கப் படாது, தான மகிமை, ஞானி பிரபஞ்சத்துடன் இருப்பினும் பற்றில்லை, ஏகபாவனை, ஏகபாவனையே பூசை, குரு தியானம், பசு இலட்சணம், ஆணவமல லட்சணம், கன்மமல லட்சணம், தேகமேதான் என்பது மலத்தினால், பிண்டப் பிரளயம், அண்டப்பிரளயம், சமையப் பொருளல்ல, பதி, பசு, பாசநிலை, முத்திரைத்தானமாவது ஒருமொழி உபதேசம்... பந்த முத்தி, வீட்டை அன்றும் இன்றும் அறியேன் என்பது போன்ற பல தலைப்புகளில் இந்நூல் இயற்றப்பட்டுள்ளது.

## 397. சிவானந்தமாலை

**அ.** 141:308; **ஆ.** *72 - 74* ஏடுகள்; **இ.** 24.6 x 2.9 செ.மீ.; **ஈ.** *10 - 11* வரிகள்; **உ.** நன்று; கீழ்ப்பகுதிகள் சற்று உடைந்துள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

வாரா யறிவுடைய மானா வுனக்குரிய
பேராம் வகைபலவும் பேசினோம் - நேரா
முவமையெல் லாமோய்வுற் றொழிந்தவிடத் துன்னைச்
சிவமய மென்னுள்ளே தெளி (1)

முடிவு

எங்குஞ் சிவமொழிய யில்லையவன் தன்னானை
யங்கந் திரள்கருவி யாணவமாம் - பொங்குமிருள்
செய்தமா மாயைமாய் கைவினை மற்றுமெலாம்
பொய்யோயு றவும்வெறும் பொய் (17)

முற்றும்.

குறிப்புரை

***1 - 17* பாடல்கள் உள்ளன.**

## 398. சிற்றம்பல நாடி கலித்துறை

**அ.** 130 ‌ 259; **ஆ.** *137 - 141* ஏடுகள்; **இ.** 20 x 3 செ.மீ.; **ஈ.** *9 - 10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

சீர்கொண்ட காழிச்சிற் றம்பல நாடிநற் றேசிகனை
பார்கொண்டுபோற்றவோர்பா மாலைசொல்வே னிப்பா வதனுக்கோ
கொண்டசீர் தளையெல்லா நிறைந்திங்கு இலங்கி யிடப்போர்
கொண்ட மும்முதக் கற்பக யானையைப்
போற்றுதுமே (1)

முடிவு

ஒன்றென்று சொல்பவர் சொன்னாலுஞ் சொல்லுக
வொன்றிரண்டா
மென்றென்று சொல்பவர் சொன்னாலுஞ் சொல்லுக
வேத்தியன்பர்
சென்றங்கு நல்குசிற் றம்பல நாடி சிரபுரத்தோன்
தன்னென்று தாமென்று சொல்லா தழுத்தி
யளித்தனனே (55)

கலித்துறை முற்றும்.
திருச்சிற்றம்பலம்

குறிப்புரை

**ஒன்று முதல் 55 பாடல்களைக்** கொண்ட இந்நூல் இறை நெறித் தத்துவத்தை விளக்குகின்றது.

## 399. சிற்றம்பலநாடி தாலாட்டு

**அ.** 130:262; **ஆ.** *148 - 150* ஏடுகள்; **இ.** 20 x 3 செ.மீ.; **ஈ.** *9 - 10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

உலகு புகழ் மெய்கண்டா னுண்மை ஞாநாகரத்தின்
பலனுணர்ந்த சிற்றம்பல நாடித் தேசிகனோ (1)
வாயே மனமே வரையற்றவோ ருரையால்
நீயே நானென்று நிலைமை யளித்தானே (2)

முடிவு

சித்தாந்தச் சித்த விகற்பமது தீரவுடல்
முத்தாந்த மென்ற முழுமுதலே கண்வளரீர் (62)
ஒன்றிரண்டு மூன்றுற்றொரு நாலோரைந் தென்பர்
நின்றதெல்லாந் தானாகி நின்றாரே கண்வளரீர் (63)

சிற்றம்பலநாடி தாலாட்டு முற்றும்

குறிப்புரை

**ஒன்று முதல் 63 பாடல்களைக்** கொண்ட இந்நூலுள் மெய்கண்டாரின் புகழ் பேசப்படுகின்றது. இறை தத்துவத்தைச் சித்தாந்தத்தின் வழி விளக்குகின்றது. சித்த விகற்பம் தீர சித்தாந்தத்தை உருவாக்கியவன் முழுமுதல் இறைவனே யாகும். ஒன்று, இரண்டு... ஐந்து என்பார் கூற்று எல்லாம் தானாகவே நின்றவன் அவ்விறைவன் என்னும் இறைவனது சிறப்புகளை எடுத்துக் கூறுவதாய் இப்பாடல்கள் அமைந்துள்ளன. கண்வளரீர் என்னும் மகுட அடிகளை உடைய தாலாட்டுப் பாடல்களாக அமைகின்றன.

## 400. சிற்றம்பலநாடி மாலை

**அ.** **141:316; ஆ.** *178 - 190* ஏடுகள்; **இ.** 24.5 x 3 செ.மீ.; **ஈ.** *10 - 11* வரிகள்; **உ.** சில ஏடுகள் முறிந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம் 130:260 போன்றது.

முடிவு

பற்றாத போது பதறும் பழக்கமதைக்
கற்றாலென் னாகக் கலக்காது - சற்றேநீ
திண்டிவிற்முன் காணச் செனை மாணமது
ரண்டுவிடி னீசிவமா லை (66)

*சிற்றம்பல நாடி முற்றும்*

குறிப்புரை

**ஒன்று முதல் 66 பாடல்கள் உள்ளன.** இறைவனது புகழை, சிறப்புகளைப் பாடுவதாக இந்நூல் அமைந் துள்ளது. கட்டு எண் *130*, நூல் எண் *260*–இல் உள்ள சிற்றம்பல நாடிசுவாமி பேரில் வெண்பா எனும் நூலில் இதிலுள்ள பாடல்கள் இடம் பெற்றுள்ளன. ஒருசில பாடல்கள் வேறுபட்டு உள்ளன.

## 401. சிற்றம்பலநாடி வெண்பா

**அ.** 130:260; **ஆ.** *141 - 145* ஏடுகள்; **இ.** 20 x 3 செ.மீ.; **ஈ.** *9 - 10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

**என்னை வினையறியா யானு மதுவறியேன்**
**முன்னை வினைகூட மொழிந்தருளா – யென்னத்**
**திருவார் பொழிற்காழிச் சிற்றம் பலவன்**
**றருவா னரனென் றான் (1)**

முடிவு

**கால்வாங்கி யேங்கியது கான்று நினைவுவரு**
**மேலாங் குணர்வோடு மீதழிவு - மாலாய**
**சாத்திரத்தி லைந்தவத்தை சண்பைச்சிற் றம்பலவன்**
**போக்கியபின் றந்தான் பொருள் (55)**

*சிற்றம்பலநாடி சுவாமி பேரில் வெண்பா முற்றும்.*

குறிப்புரை : சிற்றம்பலநாடி சுவாமி பேரில் வெண்பா

**ஒன்று முதல் 55 பாடல்களைக்** கொண்டு சிற்றம்பலநாடி தேசிகரின் புகழ் பாடுவதாக நூல் அமைந்துள்ளது. சிற்றம்பலன் அருளைத் தந்து அறியாமையைப் போக்க வேண்டும் என வேண்டிப் பாடுவதாய்ப் பாடல்கள் அமைந்துள்ளன. கட்டு எண் *141*, நூல் எண் *316* இல் இடம் பெற்றுள்ள சிற்றம்பலநாடி மாலை எனும் நூல் இந் நூலிலுள்ள பாடல்களை ஒத்துள்ளது. இருப்பினும் இந்நூல் மொத்தம் *66* பாடல்களைக் கொண்டுள்ளது.

## 402. சுத்த சித்தாந்தத் தாலாட்டு

**அ.** 390:633; **ஆ.** *19* ஏடுகள்; **இ.** 30 x 3 செ.மீ.; **ஈ.** *8 - 10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

காசினியின் மாதவர்கள் கண்டுதொழ வந்திலகுந்
தேசிகனா மாறுமுக தேவன் பரனே...
சமு...கென்று லாட்டொளிர் மின்கரி முகவன்
பாதமென் னாளும் பணிந்து

சிவசண்முக மெஞ்ஞான தேசிகன் திருவருளான் மெஞ்ஞான தேசிகனாயிங் கெமக்குத் தரவருளைத்தான் மேனிசாத்தும் பெருமாவனத்தின்...

முடிவு

என்னிலும் அவளதிக மாச்சுது நீரும் நல்லவித்து வாலே உம்மிட கந்தரும் பெரிய வரேயாம் சித்துகளெல்லாம் உங்களுக்கே செல்லுமென்ற வதியாரும் பாங்கிமாரும் ஆட்சேபனை செய்து போகச் சொல்லி விட்டார் களென்று சுவாமிகள்... குயில் விண்ணப்பஞ் செய்வார்.

குறிப்புரை

தத்துவச் செய்திகளைக் கூறும் இந்நூலை அடுத்து, குருதோத்திரம் எனும் நூல் அமைகின்றது.

## 403. சுப்பிரமணியர் பேரில் ஆனந்தக் களிப்பு

**அ. 516:790; ஆ.** 2 ஏடுகள்; **இ.** 30 x 3 செ.மீ.; **ஈ.** 8 - 9 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** சற்றுக் கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

சந்திர மண்டல மேவி லென்னைத்
தாமரை வாவி யமுர்தத் திரவில்
மந்திரம் ஓம்நமா வென்று சித்தி
வடிகட்டித் தங்கக் குடத்தி லெடுத்து
சுந்திர நவமணி யிழைத்த ஒளி
தோகைமயில் காவடி தன்னிலே வந்து
தந்திர கங்கைமுருகா நித்திய சண்முகா
அபிஷேகம் செயிதிடப் பாலன்.... தனதந்த

முடிவு

கொள்ளவே யின்னமொன்று சொல்லக் கேளு
கொடிதான பாவமடா சொல்லொண் ணாது
விள்ளவே கொடிவேலி கொண்டு வந்து
விதமாக நறுக்கியதைப் பொடிபோ லாக்கி
அள்ளவே சணப்பன்விரை கூடச் சேர்த்து
அடவாகக் கற்பூரங் கூடச் சேர்த்து
விள்ளவே பொடிமூன்றும் பொடியாய்ச் சேர்த்து
விதமாக உள்ளுக்குக் கொடுத்தி டாயே (8)

குறிப்புரை

ஒன்று முதல் எட்டுப் பாடல்கள் உள்ளன. சிங்காரக் காவடி தூக்கி, பூசை செய்து, நித்திய சண்முக அபிசேகஞ் செய்தால் அறுபத்தினாலுஞ் சித்தியாகும். சித்தி முதல் முத்தி கிட்டும் என்று நூல் கூறுகின்றது; அண்டமும் பிண்ட சராசரமும் இறை அருளால் இயங்குகின்றன என்பதும் சுட்டப் பெறுகிறது. இந்நூலின் எட்டாம் பாடல் மருத்துவப் பாடலாக அமைகிறது.

## 404. செண்டலங்கார வண்ணம்

**அ.** 526:834; **ஆ.** *76 - 79* ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

வேலை நெடுந்திரை யாகிபாய் விரிந்ததிலே
நிமிராயிரம் படைநாக பஞ்சண மீதுறங்கிய நம்பர்தாமர்
சீர்பெறும் பஞ்சவரே வியகாரியஞ் சொல்லவே துரியோதனன்
சபையும் பெண்டிருகால் வருந்த நடந்திடு தூதர்
வீறுசெயுங் கனகாசுர னாவிகுன்றிடவே கையினாலறைந்
திடுதூணில் வந்தரியே எனும்படி நின்ற சிங்காரம்
இளகிய பொன்னாடை புனைவார்

முடிவு

வாசல் கடந்தனவே வெகுதூரம் வந்தவன்போல்
நம்தூதர் வந்திலையே விதஞ்செறி யாமல்நின்று
புலம்புமென் பேதைக்காடு கடந்ததிலே கமராய்
விரிந்திடுமோ வதிலேபதுங் கியமா சுணம்புரி போல

வேந்து சுருடை வெங்காலி மாது நடந்தனளே
கூரானற் தெய்வமே யினியாரை நொந்து
பிரியோசனந் தனியே கடந்து புலம்புமென் பிராணன்
விதிவசங் கரமானா பவமே (1)

முற்றும்

குறிப்புரை

செண்டலங்காரர் மீது பாடப்பட்ட துதிப் பாடல்கள்.

## 405. சொக்கநாத வெண்பா

**அ. 138:284; ஆ.** 53 - 60 ஏடுகள்; **இ.** 38 x 3.5 செ.மீ.; **ஈ.** 6 - 7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

ஆடரவஞ் சூழ்மதுரை யம்மானே யன்பருடன்
கூடவிளை யாடிவருங் கோமானே - நீடுபுகழ்
மென்மேலு மென்றனக்கு மேவியிடப் பொல்லாத
வென்மேல் வினைகொடுப்பா யே (1)

முடிவு

ஆறுதலை யிவ்வேளை யடியேனுக் கன்பாகத்
தேறுதலைச் சொல்வார் சிலரில்லை - வேறெனக்குத்
திக்காரு மில்லைச் சிவனே பழிக்கஞ்சிச்
சொக்கேநின் றாளே துணை (14)

குறிப்புரை

சொக்கநாத வெண்பா ஒன்று முதல் பதினான்கு பாடல்களைப் பெற்றுள்ளது. சொக்கநாதரின், மதுரையம் மனின் புகழ் பாடப்பட்டு, இறையருள் இல்லையேல் எந்த ஓர் இன்பமும், செயற்பாடும் இல்லையென நூல் பகர்கின்றது. கட்டு எண் 428–இல் 33 பாடல்களில் இதைப் போன்ற நூல் உள்ளது. 167–இல் உள்ள இதைப் போன்ற

நூல் 99 பாடல்களைக் கொண்டு முழுமையாகவுள்ளது. முதல் பாடல் இரண்டிலும் ஒன்றுபோல் அமைகின்றது. பிற பாடல்களில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. தருமையா தீனத்தில் பயின்று வரும் பண்டார சாத்திர நூல்களுள் இதுவும், சொக்கநாதக் கலித்துறை என்ற நூலும் அடங்குகின்றன.

## 406. சொக்கநாத வெண்பா

**அ. 167:353; ஆ.** *101 - 109* ஏடுகள்; **இ.** 24 x 4 செ.மீ.; **ஈ.** *9 - 10* வரிகள்; **உ.** ஏடுகள் முறிந்தும் சிதைந்தும் உள்ளன; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம் 138:284 போன்றது.

முடிவு

புண்டரிகத் தானைப் புகழ்ந்து தினந்தினமு
மண்டமார் கொண்டிறைஞ்சு மாதியாய் - தெண்பேடு
நாயேனை யாண்டுகந்து நன்னெறிகள் காட்டுவித்த
தாயே சொக்கநா தா (99)

சொக்கநாத வெண்பா முற்றும்.

குறிப்புரை

**ஒன்று முதல் 99 பாடல்களைப்** பெற்ற இந்நூல் முழுவதும் உள்ளது. *104, 105* எண்ணுள்ள ஏடுகள் பாதியாக முறிந்துள்ளன. சொக்கநாதப் பெருமானிடம் தன்னை குறையுடை யவனாகக் காட்டி அடியேனாகிய எனக்கும் உன் அருள் தருவாயா என்று கேட்பதாயும் சொக்கநாதருக்குப் புகழ் சேர்ப்பதாயும் இந்நூல் அமைகின்றது. இந்நூல் கட்டுஎண் *138, 428* ஆகியவை போன்றது. இரண்டிலும் தொடக்கப் பாடல் ஒன்றுபோல் உள்ளது. ஆயினும் பல பாடல்கள் வேறுபடுகின்றன.

## 407. சொக்கநாத வெண்பா முதலியன

**அ. 428:674; ஆ.** 4 ஏடுகள்; **இ.** 32 x 3 செ.மீ.; **இ.** 4 - 6 வரிகள்; **ஈ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சானதாகத் தெரியவில்லை.

தொடக்கம்

புண்கட்டுத் தோலைப் புதுக்கி மயக்கமுறக்
கண்கட்டு வித்தைபோல் காட்டுவாய் - பண்கட்டு
பூணுவேன் றன்னைஇன்பப் பூரணத்தில் பூணவருள்
தாணுவே சொக்கநா தா (1)

முடிவு

புல்லும் விறகுஞ் சுமந்து புவிமீதில்
அல்லும் பகலும் அலையுமே - சொல்லுமதன்
வேளை யிணங்கா விமலர் அருணேசன்
தாளை வணங்காத் தளை (33)

**குறிப்புரை :** சொக்கநாத சுவாமி பேரில் வெண்பா **ஆடரவஞ் சூழ்மதுரை** எனும் பாடல் எண்ணின்றி முதலில் அமைகிறது. அடுத்து இந்நூல் முதற்பாடல் தொடங்கி 33 ஆவது பாடல்வரை உள்ளது. வெண்பாக்கள் முறையாக, எளிய நடையில் சொக்கநாதரின் பெருமைகளை உணர்த்திச் செல்லுகின்றன. இதனையடுத்து, சோணேசனே என்னும் மகுட அடியினை யுடைய சில பாடல்கள் அடங்கிய ஒரு ஏடும், சில வெண்பாக் கள் அடங்கிய தொடர்பற்ற நான்கு ஏடுகளும் காணப்படு கின்றன.

## 408. சோணேசர் அந்தாதி

**அ. 428:673; ஆ.** 3 - 17 ஏடுகள்; **இ.** 32 x 3 செ.மீ.; **ஈ.** 4 - 6 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; சில ஏடுகளில் துளைகள் உள்ளன; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

என்றன் தவப்பயனோ ஏழையேற் கென்றறியேன்
முன்னமறைக் காணாத முக்கண்ணா - நின்னையே
தேடுகைக்கும் சோணகிரித் தேசிகனே நின்புகழைப்
பாடுகைக்கும் பெற்றோம் பலன் (12)

முடிவு

........
உரைக்கு மடியார் உயிர்ப்பயிர் வாடாமற்
தரைக்குளா னந்தவெள் ளம்தன்னை - நிரைக்குமே
எண்ணார் புரமெரித்த எந்தை அருணகிரிக்
கண்ணார் அமுதமெனுங் கார் (100)

அந்தாதி செய்தா ரடியார்கள் ஈடேற
வந்தாதி யாமருணை வள்ளலுக்குச் - சந்ததமு
மெய்ய ணருணைகிரி மேவுங் குகைமீதில்
ஐய்ய னமச்சிவாயன் ...

அஞ்செழுத்தோன் சோணேசற் காய்ந்துரைத்த அந்தாதி
நெஞ்சமுத்திப் பலகால் நினைப்போர்க்கு - விஞ்சுலகை
ஆளும் பதம்பெறலா மன்றிருவர்க் கெட்டாத
தாளும் பெறலாகும் தான்

குறிப்புரை

சோணேசரின் தொன்மை, பெருமை, அருட் செயல்கள், அவனை வணங்குவதால் அடையும் பயன் ஆகியவற்றைக் கூறும் இந்நூல் நூறு வெண்பாக்களையுடையது. 12 ஆம் வெண்பா முதலே சுவடியில் உள்ளது. இறுதியில் 4 கண்ணிகளில் நூலின் பயன் கூறப்பட்டுள்ளது. 2 ஆவது கண்ணியின் ஈற்றுச் சீர்கள் விடுபட்டுள்ளன.

## 409. ஞானசார வெண்பா

**அ.** 130:264; **ஆ.** *161 - 167* ஏடுகள்; **இ.** 20 x 3 செ.மீ.; **ஈ.** *9 - 10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஆதியா யந்தாமா யப்பாலைக் கப்பாலாஞ்
சோதியாய் ஞானச் சுடராகிக் - கோதிலருட்
பண்பி லெனையாண்ட பரஞ்சோதி மாமுனிபோற்
றண்பதுமற் றாளே சரண் (1)

முடிவு

பந்தமுறுத் தாண்ட பரஞ்சோதி மாமுனிவன்
றந்தபர மானந்த சாகரத்தி - லந்தமறச்
சந்ததமு மின்பசுகந் தானா யிருந்ததனை
யெந்தநெறி சொல்வேனினி யான் (100)

ஞானசாகர வெண்பா முற்றும்.

பிற்குறிப்பு

சுப்பிரமணியன் ஏடு நன்றாக

குறிப்புரை : ஞானசாகர வெண்பா

ஒன்று முதல் *100* பாடல்கள். இந்நூல் எல்லாம் அவனே என உணர்ந்தால் உண்மை ஞானம் புலப்படும் என்று கூறுகின்றது. இது பரஞ்சோதி மாமுனிவருக்குப் புகழ் சேர்க்கின்றது.

## 410. ஞானசார வெண்பா

**அ. 138:289; ஆ.** *86 - 92* ஏடுகள்; **இ.** 38 x 3.5 செ.மீ.; **ஈ.** *6 - 7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம், முடிவு 130:264 போன்றது.

குறிப்புரை

*130:264* போன்றதே இந்நூல்.

## 411. ஞான மணி மாலை

**அ.26:47; ஆ.***122–126*; **இ.**23x3.5செ.மீ.; **ஈ.** *9* வரிகள்; **உ.** இறுதி இரண்டு ஏடுகள் இல்லை; பொதுவாக நல்லநிலை; **ஊ.** தெளிவு; **எ.** குறைவு; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

அத்தா கருணைமுகில் ஆனந்தா மால்தேடும்
சித்தா சிவப்பேறு செப்பெனக்கு – முத்தாகேள்
தப்பாமல் முக்தியிலே தாக்கமாமல் நின்றநிலை
அப்பா சிவப்பே றது (1)

நூலை மெய்யென்று நுழையாதே மூலத்தில்
காலை மெய்யென்று கழியாதே – பாலனே
தற்பரமாம் அனந்த சக்தியதில் சுட்டற்று
நிற்பதுவே முக்தி நிலை

முடிவு

கட்டிற்றும் தத்துவத்தும் சொல்லாத ஆகமற்றும்
கட்டிவைத்த பொத்தகத்தும் காணாதே – கட்டுற்ற
மித்த யறிவைப் போக்க மேன்மேலும் ஆனந்த
தத்திவரு மோனமுக்தி தான் (21)

போதமத்துற் றுக்காண்பவர்க்கும் போதமுற்றுக்
காண்பவர்க்கு
மேதுவமை யன்றால் இயம்பக்கேள் – போத
வெல்லந் தின்றார்க்கு நன்றாகத் தித்திக்கும் போதல்
வெல்ல...

குறிப்புரை

இந்நூல் சித்தி, முக்தி என்பதற்கான விளக்கங்களையும், நித்தம் மலரடியில் நீங்காது நிறையுமாறும் ஆகிய பலவகையான இறை தத்துவங்களையும் கூறுகிறது. 20–பாடல்கள் முழுமையாக உள்ளன. 21–ஆவது பாடலில் இரண்டு அடிகளே காணப்படுகின்றன. பாட்டு நடை நன்றாக உள்ளது.

## 412. ஞானவண்ணம்

**அ.** 130:258; **ஆ.** 134 - 137 ஏடுகள்; **இ.** 20 x 3 செ.மீ.; **ஈ.** 9 - 10 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

படிறைப்புணர் மனனேபுரி யதுபணியென வேணுமன்னே
யெழுபாவைப் பாலினை யேணினு மெனவரிய
பவமதவம தெனுபவமவை யிவையே தாவிற்றிடு மனனே
நிழலல தடிலி லுழலு மனனே
வருதருணத் திமிரினை யிலகும் வெயில் தொடுதனுவை
யெனதொடுறு தனதுனதெ னவேபரிவுற் றிடுமன்னே
கடலிடை படபணி விடுகவே யொருபரு
நோயப் பொழுதினு மதிய கதிரசனை
பருகி யுருகும்வகை பகரிலி மனனே
கவிமா ழகவே யுழறு மனனே (100)

முடிவு

இழமுதி ரைப்புனத் திறைவி முன்புதங்
கிழமுதி ரிளநலங் கிடைப்ப மன்னவன்
மழமுதிர் களிறென வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம் (6)

குறிப்புரை

ஞானவண்ணம் என்ற தலைப்பில் பாடல்கள், பாடல் எண்கள் இன்றி இடம் பெற்றுள்ளன. பின் காந்தம் என்ற உட்தலைப்பில் ஒன்று முதல் ஆறு பாடல்கள் இடம் பெற்று நூல் முழுமை பெறுகின்றது. பழமுதிர்ச்சோலை இறைவனைப் பற்றியதாக இப்பாடல்கள் அமைந்துள்ளன. அவ்விறைவனை வேண்டி மனத்திற்கு பல அறிவுரை களைக் கூறுவதாகப் பாடல்கள் அமைகின்றன.

## 413. ஞானவம்மானை

**அ. 76:151 ஆ.** *8* ஏடுகள்; **இ.** *17* x *2.5* செ. மீ.; **ஈ.** *8 -10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறையானது; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பூமன் திருக்கண்டி யந்தகன் கோவல புரமதிகை
மாமன் கடிலஞ் சலந்தான் விற்குடி மாவழுவூர்
காமன் கொறுக்கை யமன்கட வூரிந்தக் காருணியில்
தோமன்னு பூங்கொன்றைத் தாரார் புரிந்திடு சேவகமே

முடிவு

காயாதி கக்கின சோறானே னம்மானை
கல்வியுங் கேள்வியுங் கைவிட்டே னம்மானை
பெயரா னேனிந்தச் செகத்தினுக் கம்மானை
பித்தா னேன்முத்திக்கு வித்தானேன் னம்மானை.

குறிப்புரை

**1–33 பாடல்கள் உள்ளன.** இச்சுவடிக் கட்டில் ஞான வம்மானையையும் சேர்த்து *21* நூல்கள் உள்ளன. இவை அனைத்துக்கும் விளக்க அட்டவணை தயாரிக்கப் பட்டுள்ளது. அவை வருமாறு;

| நூல் எண் | நூல்கள் | ஏடுகள் |
|---|---|---|
| *152* | திரு முருகாற்றுப்படை | *2* |
| *153* | சிவதோத்திரம் | *2* |
| *154* | ஒற்றியூர் ஒருபா ஒருபஃது | *5* |
| *155* | பஞ்சவிஞ்சதி மயேசுரர் அகவல் | *3* |
| *156* | நால்வர் நான்மணிமாலை | *9- 17* |
| *157* | பட்டினத்தார் அருளிச்செய்த மும்மணிக்கோவை | *18-63* |
| *158* | பட்டினத்துப் பிள்ளை அருளிச் செய்த நான்மணிமாலை | *64 - 79* |
| *159* | அஷ்டோத்திர நாமம் | *80-87* |
| *160* | மகேசுவர விக்கிரகம் | *88-90* |
| *161* | சித்தாந்த சிரோமணி | *91-104* |
| *162* | நாதாந்த சாரம் | *105 - 112* |
| *163* | கொல்லாமை | *113* |
| *164* | வேல் வகுப்பு, புயவகுப்பு | *114-117* |
| | பெரிய புராணம் (அட்டவணை செய்யப்படவில்லை) | *118* |
| *165* | சாந்த மாலை | *119 -121* |
| *166* | கரணியாசம் | *121 - 123* |

## 414. ஞானவனுபூதிவெண்பா

**அ. 16:32; ஆ.***1-18* ஏடுகள்; **இ.** *23-5* x *3* செ.மீ.; **ஈ.** *8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** பழைய அச்சு.

### தொடக்கம்

**ஞானவனு பூதிவைண்பா நான்முற்றுங் கற்பதற்குத்**
**தானா தரவினோடும் தந்தருள்வாய் - நானா**
**விதவா ரணமேவி யந்துரைக்கும் ஞான**
**மதவா ரணமேலாங் காப்பு**

**சித்தி தருனாதன் தென்கமலை வாழ்நாதன்**
**பத்தி தருனாதன் பரநாதன் – முத்திப்**
**பெருநாதன் ஞானப் பிரகாசன் உண்மை**
**தருநாதன் நம்குருநா தன் (1)**

### முடிவு

**எல்லாம் உனது செயல் என்றறிந்து மென் உளத்தில்**
**பொல்லாத சங்கற்ப மென்வருமோ புரமூன்றெரித்த**
**வல்லாய் கமலையில் ஞானப்பிரகாச வாதவிஇத**
**சொல்லாய்காண் மயக்கமன்றோ வேறுதொழில் அல்லவே**

திருச்சிற்றம்பலம் முருகன் துணை.

### குறிப்புரை

கமலை ஞானப் பிரகாசர் எழுதிய சிவானுபூதி வெண்பா என்னும் இந்நூல் இந்நில உலகத்தில் பெறுதற்கரிய பெருமை, உபதேச விளக்கம், அனுபூதி நிலை, உபாய நிலை, பணியறுத்தல், துறவின் பகுதி, அறிவோர் புகழ்ச்சி, மடவோர் பழிப்பு, பொது நிலைத்தொகுதி என்னும் தலைப்புகளில் **137 வெண்பாக்களால்** ஆகியது.

## 415. ஞானவெண்பா

**அ. 79:176; ஆ.** *14-31* ஓடுகள்; **இ.** *25 x 2.5* மீ.; **ஈ.** 7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் மேலொருவர்
கெட்டாத புஷ்ப மிறையாத மஞ்சன மினியொவோடு
கட்டாத லிங்கங் கருதாத னேசங் கனவிலுமே
முட்டாத பூசை யென்றே குருநாதன் மொழிந்தனனே

குருவேதுணை

தன்னை யறிவித்தான் தானேதா னானபிரான்
என்னை யறிய வியல்பிற்றான் - பின்னையோர்
தேவராங் கண்டிலேன் தென்னன் பெருந்துறையான்
வாவா வென்றாண்ட வழக்கு (1)

முடிவு

எட்டெழுத்தும் பத்தெழுத்து மேழெழுத்து மஞ்செழுத்து
தொட்டெழுத்தி னூடே தொடர்பெழுத்தும் - சிட்டரி
பாதந் தனைத் தேடி பக்திசெய்ய மாட்டாமல்ஃ
வேதம் படிப்பதெல்லாம் வீண்

திருச்சிற்றம்பலம் - ஞானவெண்பா முற்றும் சிவசண்முக தேசிகன் திருவடி வாழ்க.

குறிப்புரை : ஞானவெம்பா

**1-132 வெண்பாக்கள்.** முதலில் ஒரு பாடலும் இறுதியில் ஒரு பாடலும் எண்ணின்றி அமைகின்றன. இச்சுவடியுள் குரு, தவம், வித்து, வோ், விட்டகுறை, தொட்ட குறை, தலைவிதி போன்ற பல வகையான தலைப்புகள் காணப் பெறுகின்றன.

## 416. தண்டாயுதபாணி பேரில் காவடி

**அ.480:729; ஆ.** *3-66* ஏடுகள்; **இ.** *23 x 2* செ.மி.; **ஈ.** 4 வரிகள்; **உ.** நன்று; இடையிடையே சில ஏடுகள் இல்லை; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அசசாகாதது.

முற்குறிப்பு

சுபகிருது வருசம் கார்த்திகை மாதம் ஏழு தீவத்தில் குண... சோ - க - வா- இராமசாமி பிள்ளை பாடின தெண்டாயுத பாணி பேரில் காவடிக்காக - ஆனந்தமுங் கும்மியுங் கலந்த பிரபந்தத் தமிழ்.

தொடக்கம்

ஆதிமுத லைங்கரன் றானும் மனத்தி
  லனுதினந் துதிசெயு மன்பர்களைப் பேணும்
சோதிகலை வாணியுமை மாது என்றுஞ்
  சுருதிநூல் தவறாமல் வருகுவ ரெப்போதும்
நீதிமுறை தவறாதென் னாவில் உடனே
  நின்கருணை புரிந்திடுவீ ரிப்பொழுது பூவில்
சாதிபேத மில்லாத நாதன் ஞான
  சடாக்ஷரக் குமரகுரு சரண மறவேனே (6)

முடிவு

பழனிமலை நாதன்குடி வாழ்க - சுற்றம்
  பந்துசன மெல்லாந் தழைத்துமே வாழ்க
வளமையுடன் குடிகளெல்லாம் வாழ்க - என்றும்
  வடிவேலன் பாதத்தை வணங்கிடவும் வாழ்க
களபமுலை நங்கைமாரி வாழ்க - நாளுங்
  கட்டாரி முத்தனைக் கொண்டாடிடவும் வாழ்க
தளதளென மலையில்வளர் நாதன் யோக
  சடாக்ஷரக் குமரகுரு சரணமற வேனே (132)

குறிப்புரை

இந்நூலில் முருகப் பெருமானைப் போற்றிப் பாடப் பெற்றுள்ளது. பாடலின் இறுதியடி அனைத்துப் பாடலிலும் ஒன்று போலவே வருகின்றது.

## 417. தயாநிதிப் பதிகம்

**அ.** **362:599;** **ஆ.** *10-16* ஏடுகள்; **இ.** 27 x 3 செ.மீ.; **ஈ.** *6-7*வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; ஒருசில ஏடுகளில் சிதைவு; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

திருவளர் கோவ மானக ரிற்றிகழ்
வீரட்ட ரருளுருவஞ்
சேர்ந்தாறு முகமெஞ் ஞான சிவதேசி
கர்வா கனஞ்செய்
தருளார் ஞான சொரூப மதாயரு
மாமறை யின்சிரப்
பொருளை யவனி யோர்க ளெல்லார்க்கு மன்னப
வருவித் தினி துணர்த்திப்
பெருவாழ்வு தருமருட் குருவே பிரிவில்
சமாதித் தானைமதிற்
பெரிதாய்ச் செய்துன் னுருவைப் பிரத்திட்
டபிடே காதி செய்து
திரமாய்த் தெரிசித்திட வுடனே சிறிய
னேர்க்கிங் கருள் புரிவாய்
தேவே திருப்பா திரிப் புலி யூர்சிவ
சண்முக தயாநிதியே (1)

முடிவு

ஞானா ரியன்றன் றிருப்பணியே ஞானத்
தவமென் றருநூல்
கண்வில்லா னுன்பணி விரும்பி நாளு
நாளு மிகவருந்தி
யூனா சையைவிட் டுடனசை யற்றுறு
வதனதுட்டெரிந் துறுமே
யுடனே பணிக்கி வேண்டுவ தந்துகந்
தெப்பணியு முடிப் பித்துத்
தானா பரணத் திரைநீக்கிச் சச்சி
தானந்தச் சொரூப
சடாட்சர காமாயுறு மூன்றா நிழலிற்
சென்றுற வருள்வாய்த்
தேனார முதமொழியு மன்று சேர்வார்தமை
மெய்ச்சிவ மாக்கும்
தேவே திருப்பா திரிப்புலி யூர்சிவ
சண்முக தயாநிதியே (10)

குறிப்புரை

**1–10 பாடல்கள் உள்ளன.** இந்நூலில் முருகப் பெருமானின் சிறப்பு, தலச்சிறப்பு, அருட்செயல்கள் முதலானவை இடம் பெறுகின்றன. இதனைத் தொடர்ந்து மூன்றா முறையா எழுந்தருளிய விளங்கும் குருதோத்திரம் என்றநூல் அமைகின்றது.

## 418. தாயுமானவர் ஆனந்தக்களிப்பு

**அ. 141:314; ஆ.** *167-170* ஏடுகள்; **இ.** *24.6 x 2.9* செ.மீ.; **ஈ.** *10-11* வரிகள்; **உ.** நல்லநிலை; சில ஏடுகளில் துளைகள் உள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

...... ...... .....
சீராரு மானந்தக் களிப்பால் வேதச்
  சித்தாந்த முத்திச் சிறப்பை நான்பாடக்
காராரு மானை முகத்து முக்கட்
  கணபதியே வந்து காத்தருள் வாயே (1)

சிவ சிவ யாகர் சம்பு
சிவ சிவ யாகர் சிவ சம்பு.

ஆதி யனாதியு மாகியெனக் கானந்தமா
  யறிவாய் நின்றி லங்கு
சோதி மவுனியாய்த் தோன்றியவன் சொல்லாத
  வார்த்தையைச் சொன்னாண்டி தோழி (2)

முடிவு

நம்மா லறியு மறிவையது நானல்ல
  நீயதை நாடா தேயென்று
சும்மா யறிவைக் கொடுத் தேவையன் தூக்கற்
  சோதிக்கே தாக்கற வைத்தா
னிம்மாய மீதென .. றி யேனிப்போ தென்னையுந்
  தன்னையும்யா வையுங்காணே
னம்மா பான்னம்பல வாணன்பர மானந்த
  தந்தத் தியரந் தேனே தோழி (17)

கத்து சமையத் துழன்றேகலை கற்று நின்றுகருத் தலையாதே
கத்தும் சத்த முணர்த்தி சதசத்தை யுந்தன்னுரு வென்ன வேகாட்டிச்
சித்த சிவத்துடன் கூட்டிவையன் சொச்சிவ மாய்த்தெரி சனைதந்தே
மத்த னென்னப் பலர்பேசா மகத்தாகி யிங்குமகிழ்ந் திருந்தோமே

குறிப்புரை

**1-17 பாடல்கள்**. இந்நூலில் இறுதியாக ஒருபாடல் பாடல் எண் இன்றி இடம் பெறுகின்றது. வேதாந்த, சித்தாந்த, முத்திச் சிறப்புகளைக் கூறுவதாக இந்நூல் தொடங்குகிறது. எல்லா அறிவும் சோதிவடிவான அவனால் தரப்படுவதே யன்றி நம்மால் அறியக் கூடியது ஒன்றுமில்லை, எனவே சமயத்து உழன்று கலைபல கற்று அலைதல் வேண்டாம். சிவத்துடன் கூடி தரிசனை பெற்று மகிழ்ந்து இருப்பாயாக என்று மகிழ்ச்சிக்குரிய காரணங்களை எடுத்தியம்புகிறது இந்நூல்.

## 419. தியாகராயர் வண்ணக் கொழிப்பு

**அ. 526:840; ஆ.** *105-113* ஏடுகள்; **இ.** *20.5* x *3.5* செ.மீ.; **ஈ.** 7-8 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

மருவுலவுஞ் செங்கடம்புங் கொந்திலங்குஞ்
சிந்துவின் றொங்கல் - வெண்பூஷண
பரிமளமுங் குங்குமங் கெந்தந்
துளங்குஞ் சந்தனந் தங்கும்
நின்புயர்சால் மாபொற்குழை கரங்க
னோதிற்றுகை பாண்டுவரு முத்தமர்
பால் பெற்றவர் சமத்தர்

முடிவு

முதுகைத் தடவிமெச்சு புளந்ததுட விறுக்கும்
நாகரீச்சுரர் பேரகத்தமிர் வாகந்தி
கடலா கவருவிகள் வெள்ளம் பெருகியது
முள்ளன் புருகியது மெய்ப்பித் தாலுரை
செயவே வொணாது தொழிலு பரிவு
புதர் சிந்தை நாடுமே

முற்றும்

குறிப்புரை

தியாகராயப் பெருமான் மீது எழுந்த பக்திப் பாடல்.

## 420. தியாகராயர் வண்ணம்

**அ. 526:836; ஆ.** *84-89* ஏடுகள்; **இ.** *20.5 x 3.5* செ.மீ.; **ஈ.** *9-10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

சீருலவுந் திங்களுங் கட்டுங் கடுக்கை யரவுமிக்கான்
பகீரதியுஞ் செஞ்சடைக் கற்றைமீதி லணிகிறதா
கிருபா லனமீது பொருகா லனார்மெய்
சிதைவாக மோதியுதை வீசு பாதர்
வானவர் நெஞ்சங் கலங்கிச் சஞ்சலித்துக் கூடவும்

முடிவு

பொங்கார் விற்பிடித்துப் பூவாளியைத் துலைத்தீ
ரிங்கா றுமைக் கண் யேழையின்மே லெய்வார்காண்
பங்கா வடிவுடைய பாவைவிழிக் கேவல் செய்யுஞ்
சிங்கார ஒத்தியூர் தியாகப் பெருமாளே

குறிப்புரை

திருவொற்றியூரில் எழுந்தருளியுள்ள தியாகராயர் மீது எழுந்த துதி.

## 421. திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி

**அ. 73:144; ஆ.** *39* ஏடுகள்; *4* வரிகள்; **இ.** *35 x 2* செ.மீ.; **ஈ.** *4* வரிகள்; **உ.** ஏடுகள் சில சிதைந்துள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** கழகவெளியீடு.

தொடக்கம்

அழிவிலாப் பொருளே பழமறைக் கொழுந்தே
    யலையெறி யமுதவா ரிதியே
ஒழிவிலா தருளுங் கற்பகக் கனியே
    ஒப்பனை மைப்பரந் தெறிக்கும்

விழியினா லுருக ஒருபுறம் அளித்த
விமலனே கருவையம் பரனே
இழிவிலாப் புணையாம் பிறவியங் கடனின்
றேநான் பெற்றதுன் பதமே (13)

முடிவு

வெள்ளை மேனியாய் போற்றி ஒப்பனை
மேவு மார்பனே போற்றி போற்றிபூங்
கள்ள லம்புதண் களவின் நீழலிற்
கருணை யங்கடற் கடவுள் போற்றிநான்
உள்ளம் ஒன்றிநின் றடிவ முத்திட
உதவி செய்தவா போற்றி இன்புறத்
தெள்ளு செந்தமிழ்க் கருவை மாநகர்ச்
செல்வ போற்றிநின் சீர்கள் போற்றியே (100)

குறிப்புரை

**13–100 பாடல்கள் உள்ளன.** இச்சுவடியில் முதல் பன்னிரண்டு பாடல்கள் இல்லை.

## 422. திருக்காமியீஸ்வரர் பேரில் லிங்கப்பத்து

**அ. 526:823; ஆ.** *16-18* ஏடுகள்; **இ.** *20.5 x 3.5* செ.மீ.; **ஈ.** *7-9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

அங்கை மான்மழு வேந்திய லிங்கமே
ஆதி சோதிய தாகிய லிங்கமே
மங்க ளம்பெரு குங்குயி லம்மனை
வாம பாகத்தில் வைத்தருள் லிங்கமே
துங்க மாமறை யேந்திய லிங்கமே
தொல்லை மாலயன் போற்றிய லிங்கமே
கங்கை மாநதி கூடிய லிங்கமே
கருணை வில்லையிற் காமீசர் லிங்கமே (1)

முடிவு

சடையில் வானதி வைத்தருள் லிங்கமே
 தானு வாஞ்சிவ சங்கர லிங்கமே
நடவை நீக்கி னமையாளும் லிங்கமே
 நாடெலாம் புகழ்நா தாந்த லிங்கமே
புடைத னிற்குயில் மேவிய லிங்கமே
 புவிவிளங்க மழையருள் லிங்கமே
கடவு ளாய்முனி வோர்பணி லிங்கமே
 கருணை வில்லையிற் காமீசர் லிங்கமே (1)

குறிப்புரை

**1–10 எண்சீர் விருத்தங்கள்.** இந்நூல் மான்மழுவேந்தியன், ஆதி சோதியன், கங்கைநதி சூடியவன், நாதாந்தமானவன், கன்னல்வேல்தனை வென்றவன், பாம்பணி பூண்டவன், சோமனைத் தலையில் சூட்டியவன், மாமனைத் தலை போக்கியவன், மண்ணும் விண்ணும் படைத்தவன், பூமனார் சிரங்கிள்ளியவன், அன்பர் போற்றுபவன், நீதி யோதி நிறைந்தருளியவன், விடமுண்டருளியவன், விசையன் வில்லடி பட்டருளியவன், கதியளித்துக் கடாட்சஞ் செய்பவன், சோதியாய் வந்து தோன்றியவன், கரிய கண்டம் படைத்தருளியவன் எனப் பலவாறு திருக்காமியீஸ் வரரைப் போற்றித் துதிக்கிறது.

## 423. திருக்குற்றாலக்குறவஞ்சி

**அ.**; **447:694; ஆ.** 1-51 ஏடுகள்; **இ.** 45 x 3 செ. மீ.; **ஈ.** 4-5 வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பூமலி யிதழி மாலை புனைந்தகுற் றாலத் தீசர்
கோமலர்ப் பாதம் போற்றிக் குறவஞ்சித் தமிழைப் பாட
மாமதத் தருவி பாயும் மலையென வளர்ந்த மேனி
காமலி தருப்போல் ஐந்து கைவலான் காவ லானே (1)

பன்னிருகை வேல்வாங்கப் பதினொருவர் படைதாங்கப்
பத்துத் திக்கும்
நன்னவவீ ரரும்புகழ, மலைகள் எட்டும் கடலேழும்
நாடி ஆடிப்
பொன்னின்முடி ஆறேந்தி, அஞ்சுதலை எனக்கொழித்துப்
புயநான் மூன்றாய்த்
தன்னிருதாள் தரும்ஒருவன் குற்றாலக் குறவஞ்சித்
தமிழ்தந் தானே (2)

முடிவு

கலந்த கண்ணியை நெருக்கிக் குத்தினால்
காக்கையும் படுமே - குளுவா
காக்கையும் படுமே
மலர்ந்த கண்ணியைக் கவிழ்த்துக் குத்தினால்
வக்காவும் படுமே - குளுவா
வக்காவும் படுமே
உலைந்த கண்ணியை இறுக்கிக் குத்தினால்
உள்ளானும் படுமே- குளுவா
உள்ளானும் படுமே
குலைந்த கண்ணியைத் திருத்திக் குத்தடா
குற்றால மலைமேல் - குளுவா
குற்றறால மலைமேல் (101)

குறிப்புரை

வசந்தவல்லியின் அழகு, அவள் வரும் அழகு, இறைவனின் திருவுலா, அவள் திரிகூடநாத்ரைக் காணுதல், கண்டு வியந்து மயங்கி உருகி நிற்றல், தாபத்தின் வேகம், நிலவைப் பழித்தல், மன்மதனைப் பழித்தல், ஈசரைப் புகழ்தல், கூடல் இழைத்தல், குறவஞ்சி வருதல், மலைவளம் கேட்டல், நாட்டு வளம் கூறுதல், கிளை விசேடம் கேட்டல், கூறுதல், குறியின் தன்மை, குறியின் சிறப்பு, குறி ஏற்பாடுகள், வசந்தவல்லி கைகளின் சிறப்பு, சிங்கியைத் தேடி சிங்கன் வருதல், சிங்கனின் தோற்றம், பட்சி பார்த்தல், பறவைகளின் வரவு, சிங்கியின் அழகு, கண்ணி குத்தும் வகை முதலானவை நூலுள் இடம்பெறுகின்றன. சிங்கனும் சிங்கியும் பற்றிய செய்தி முற் றுப் பெறவில்லை. இறுதி இரண்டு ஏடுகளில்

எண் இல்லை. *277:499* என்ற எண்ணில் இடம் பெற்றுள்ள நூல் இந்நூல் போன்றதே.

## 424. திருக்கோவலூர் ஆறுமுக தேசிகர் மாலை

**அ.** ***153:333;*** **ஆ.** *2-152 (70)* ஏடுகள்; **இ.** *17 x 3.5* செ.மீ.; **ஈ.** *8-9* வரிகள்; **உ.** சில ஏடுகள் முறிந்தும், ஓரங்கள் சிதைந்தும் உள்ளன; **ஊ.** ஓரளவு நல்லநிலை; ஓரளவு கடினம்; **எ.** குறையானது; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

திருவணா மலையினிற் குகைநம சிவாய
    தேசிகரி ரண்டா மூர்த்தியைச்
  செப்புமொரு வார்த்தையுப தேசத்தை யிக்குகைச்
    சிம்மா சனத்தி ருக்க
வருகுவர்க் கோதுநீர் வருமப்படி செய்து
    வருவதா யருளென்றபின்
  மற்றுமுள ருக்கெலாங் குருநம சிவாய
    ருபதேசிக் கவரு ளென்ற
னருள்படிக் குகையில்வா ழடியரடி யடியடி
    யனுபூதி பெற்றுவந்து
  வறாவத மாகிநற் குகையில்வாழ் குருநாளில்
    வாருட சீட னென்னுங்
குருநம சிவயரென்ன வருமட்ட மூர்த்திமேற்
    கூறாது வீடடை வரென
  கோவலவீ ரட்டேசர் பாதமே பற்றான்
    குருவா றுமுக தேவனே (2)

முடிவு

மங்களம்

அருளுரு வானவர்க்கு மங்களம் - எங்க
  ளாறுமுக தேசிகர்க்கு மங்களம
உரைவுணர் விறந்துநின் றுணர்வனதா ருணர்வெனுந்
  திருமறைமுடி வுரையா துரைத்திடற்காய் (அருளுரு)
கோபுர மதிட்டிருக் கோவலூ ரில்வாழு
  மகிலகா ரணருக்கு மங்களம்
அருளுரு வானவர்க்கு மங்களம் - எங்கள்
  ஆறுமுக தேசிகர்க்கு மங்களம்

குறிப்புரை

இந்நூல் திருக்கோவலூர் ஆறுமுகதேசிகரின் சிறப்புரைப்பதாகப் பாடப்பெற்றுள்ளது. முதல் ஏடு இல்லை. எனவே இரண்டாம் பாடல் முதலே சுவடியில் காணப்பெறுகிறது. முதற் பாடலின் இறுதியடிகள் அவ்வேட்டில் உள்ளன. நூல் முற்றுப் பெற்றுள்ளது. எனினும் இடையிடையே பல ஏடுகள் இல்லை. சுவடியில் சுமார் 228 பாடல்கள் முழுமையாக உள்ளன. 4–ஆவது யாத்திரைச் சருக்கம், 5–ஆவது அனுக்கிரகச் சந்தான சருக்கம், 6–ஆவது பூரணாதீதப் பிரகாசச் சிவகுரு சொரூபச் சருக்கம், 7–ஆவது முந்திய சீடச் சருக்கம் எனச்சில சருக்கங்களின் பெயர்கள் காணப் பெறுகின்றன.

சுவடியின் இறுதியில் பிரமநிச்சயம், திருக்கோவலூர் ஞானாசாரிய தோத்திரம் என்னும் தலைப்புகளையுடைய இரண்டு ஏடுகளும் மூன்று வேறு ஏடுகளும் உள்ளன. மேலும் சுவடியின் எண்கள் கொடுக்கப்பட்ட 9 ஏடுகள் தொடர்பில்லாமல் உள்ளன. 158:340; 437:683 என்ற எண்களில் அமைந்த நூல்கள் இந்நூல் போன்றவையே.

## 425. திருக்கோவலூர் ஆறுமுக தேசிகர் மாலை

**அ.** 158:340; **ஆ.** 17-134 ஏடுகள்; **இ.** 17 x 3 செ. மீ.; **ஈ.** 6-9 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** தெளிவு. **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

துன்ப மகற்றிடவுஞ் சுகமதனை யேதரவு
முன்பி னெனக் கென்னேர
மெண்ணுமெந்த னாருயிரோ-மன் (71)

பா வடியர்க்காகப் பரசிவன் றானே...
நாவடிவு கொண்டதற்கு நாமமந் திரமருவும்
பூவுலகோர் நாணாளும் போற்றவரு மாறுமுக
தேவனெனுஞ் செல்வத் திருப் பெயரான் - அன்றியும்
எல்லையிலே

நூறுடனே பெருமுருவு மொழித்தருளச்
சீருடைய வூருந் திருப்பெயரு - மோருருவங்
கொண்டிங்ஙன் வந்தருளுங் கோமானெனன் சென்னிமிசை
புண்டரிகப் பாதம் பொறித்திடுவோன் (76)

முடிவு

திருவெண் ணீறணிகள் வாழி
தெய்வகண் டிசைத்தார் வாழி
பரவினர்க் கருளும் பஞ்சாக்
கரம்பகர் பவளம் வாழி
மருமலர்ச் சரணம் வாழி
மணிபுயக் குவளை வாழி
அருள்பொழி விழியெங் கோமா
னாறுமா முகனும் வாழி (45)

*அனுக்கிரகச் சந்தானச் சருக்கம் முற்றும்.*

குறிப்புரை

*153:333; 437:683* என்ற எண்களில் இடம் பெற்றுள்ள நூல்கள் இந்நூல் போன்றவையே.

## 426. திருக்கோவலூர் ஆறுமுக தேசிகர் மாலை

**அ. 162 : 345; ஆ.** *1-138* ஏடுகள்; **இ.** *32 x 3* செ.மீ.; **ஈ.** *5-7* வரிகள்; **உ.** நன்று; ஓரிரு துளைகள்; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

இருடியர்கண் முத்திநிலை யேழவத்தை களாதி
யீரைந்து சம்பிரதாய
மிவ்வுலகின் முத்திபெறு மெஞ்ஞான நெறிகளதி
னென்னெறிகனதுமடங்கு
முரையிவை யடங்கும்வே தாந்தசித் தாந்தத்
துளுபதேச சித்தாந் தநா
மோதலிவை கட்கெலாம் விரோதமத னனமே
லுணரலா மோதி வைகளுட்

கருதரும னேகானம் பக்கமா மோரினமெய் கண்டநெறி
யவையெ திர்கொடு
கழறுதுந் தர்க்க மாதியான் விளங்கிட வெனக்
கருணை மிகவே கூர்ந்தெனக்
கரிய திரு வாய்மலரு மிணையில் குரு நாதனே
யாரியருளுயர்சிங் கமே
யாசிநா வலர்பரவு கோவன்மா நகர்மருவு
மாறுமா முகதேவனே (2)

முடிவு

ஈசனது பத்தியத் துவிதஞா னிகள்வழா
ரெவ்வாறவ் வன்ப தெனின்மன்
னிதயம் தறிந்தவன் றொண்டனவ் வரசனுக்
கினியவனு மவனா மதின்
பேசுமுறை நினவுதொழின் மேனியுற லிறைபரப்
பிரயோ சனஞ்சக முயிர்
பித்தனல தசைவறிவ தின்றிறைவ னருளிற்
பெறுவரெது மேவர் களுமென்
நேசமது முடிவாய பத்திமற் றொருகனம்
நிகழ்தரு தொழில்வி கற்பம்
நிமலர்த்து விதஞான வனுகூல மன்றுதேர்
நிசகுருவை யுஞ் சுருதியு
மாறைமலி யுலகிலிசை வனிலவே றெனக்கொ
ளார்த்துவித ஞானி களெனு
மாசிவா வலர்பரவு கோவன்மா நகர்மருவு
மாறுமா முக தேவனே (279)

குறிப்புரை

ஆறுமுக தேசிகர் மாலை என்னும் இந்நூல் 153, 158, 437 என்னும் கட்டு எண்களில் விளக்கம் பெற்றுள்ள நூல்களினின்றும் வேறுபட்டது. 279–க்கு மேலும் பலபாடல்கள் உள்ளன. முதல் ஏடு அடித்தல் திருத்தல்களோடு உள்ளது. சுவடியின் தொடக்கத்தில், **ஞானோத்தரம் முற்றும், பிரமகீதை முற்றும்** என்னும் தொடர்களோடு கூடிய இரண்டு ஏடுகள் உள்ளன. கோவன்மா நகரின் சிறப்பும் அங்கு எழுந்தருளியுள்ள முருகப்பெருமானின் பெருமையும் நூலில் எடுத்துரைக்கப்

படுகின்றது. 'கோவன் மா நகர் மருவு மாறுமா முகதேவனே' என்ற மகுட அடியைக் கொண்டு அனைத்துப் பாடல்களும் அமைகின்றன. ஆறுமுக தேசிகர் தென்பெண்ணை ஆற்றின் தென்கரையில் அமைந்துள்ள, தமிழ் நாட்டின் நடு நாடாகிய திருக்கோவலூரில் உள்ள வீரசைவமடத்தின் தலைவர். இவர் தான் இந்தத் திருக்கோவலூர் வீரசைவ மடத்தின் முதல் ஞானியார் அடிகள். இதில் இவரது அருளும், இறைவன்மீது கொண்ட காதலும் சிறப்பிக்கப்படுகின்றன.

## 427. திருக்கோவலூர் பெரியநாயகி அம்மன் பேரில் ஊசல்

**அ.** 44:69; **ஆ.** *1-9* ஏடுகள்; **இ.** *21.5* x *2.5* செ.மீ.; **ஈ.** *6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை. **ஏ.** அச்சானது.

தொடக்கம்

பொன்சயில வெள்ளிமலை கால்க ளாகப்
பொருவிலண்டக் கூடமதுத் திரமதாக
உன்னியுரை மறைநான்கும் கயறாக
ஓங்கார ரீங்காரந் தொட்டிலாகத் - தன்னிகர்

தன்னிகர்மால் சதுர்முகனும் வடந்தொட் டாட்ட
சமீமதிற் றும்புரரும் கீதம் பாட
மன்னர்வீ ரட்டேசர் மாலை சூட்ட
மகிழ்பெரிய னாயகியே யாடீ ரூசல் (1)

முடிவு

திருக்கோவல் வீரட்டலிங்கப் பூசை
செய்தகண பதிகந்த ரடிகள் வாழி
யருக்கன் மாலயன் ராமன் பரசுராமன்
பாலகிருட்டின னிவந்திராதி வாழி
யிருக்காதி துதிமுனிவோர் ஆதியாக
வியம்புகென் நாமமுள ரெல்லோர் வாழி
திருக்கோவை நகர்வாழி யெனையாள் காத்தாய்
சீர்பெரியனா யகியும் வாழி! வாழி! (12)

*திருச்சிற்றம்பலம்*

குறிப்புரை

இந்நூல் திருக்கோவலூர் என்னுமிடத்தில் கோயில் கொண்டுள்ள பெரிய நாயகியம்மன் என்னும் தேவி பேரில் பாடப்பட்ட துதிப்பாடலாகும். 'ஆடீர் ஊசல்' என்னும் முடிவு அடிகளையுடைய ஊசல் பாட்டாக அமைந்துள்ளது. 12 பாடல்கள் கொண்டது. நடை மிகவும் நன்றாக உள்ளது. பெண்ணையாற்றின் தென்கரையிலுள்ள திருக்கோவலூர் ஒரு சிறந்த சைவத் திருப்பதி. மெய்ப்பொருள் நாயனார் முத்தியடைந்த தலம்.

இத்தலங் குறித்துத் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் பதிகம் பாடியுள்ளனர். இத்தலத்து இறைவன் வீரட்டேசுரர் ஆவார். இறைவி சிவானந்தவல்லி. அவளே இங்கும் பெரியநாயகி என்று குறிக்கப்படுகின்றாள். இங்கு இறைவிக்கென்று கோவில் தனியாக அமைக்கப் பட்டுள்ளது. ஆறுவித தீட்சைகளைப் பெறும் முறை, மகா காரணபஞ்சாக்கர உபதேசம், அம்மையின் அருள் முதலானவை நூற்கண் பேசப்படுகின்றன. எண். 53:79 இல் அமைந்த நூலும் இது போன்றதே ஆகும். அச்சான நூலில் பத்துப் பாடல்களே இடம்பெற்றுள்ளன. இறுதி இரண்டு பாடல்கள் இடம்பெறவில்லை.

இறுதியில் 11 ஏடுகளில் சிவசண்முக மெய்ஞான தேசிகன், முருகன் குறித்த துதிப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இந்நூல் ஊஞ்சல் இலக்கியம் (1983) என்ற நிறுவன வெளியீட்டில் இடம் பெற்றுள்ளது.

## 428. திருக்கோவலூர் பெரியநாயகி அம்மன்பேரில் ஊசல்

**அ.** **53:79; ஆ.** *1-5* ஏடுகள்; **இ.** 22.5 x 2 செ.மீ.; **ஈ.** 9 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானது.

தொடக்கம், முடிவு 44:69 போன்றது.

குறிப்புரை : திருக்கோவிலூர் பெரிய நாயகி அம்மன் யெரில் திருஊசல்.

இது, திருக்கோவலூர் பெரிய நாயகி அம்மன் பெயரில் பாடப்பட்ட ஊஞ்சல் பதிகமாகும். *11* பாடல்களும் இறுதியாக ஒரு வாழ்த்துப் பாட்டும் உள்ளன. *44:69; 234:449* என்ற எண்களில் இடம் பெற்றுள்ள நூல்கள் இந்நூல் போன்றவையே.

## 429. திருக்கோவலூர் பெரியநாயகி அம்மன் பேரில் ஊசல்

**அ. 234:449; ஆ.** *20-22* ஏடுகள்; **இ.** *23* x *2.5* செ.மீ.; **ஈ.** *9–10* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானது.

தொடக்கம், முடிவு 44:69 போன்றது

குறிப்புரை : திருக்கோவலூர் பெரிய நாயகி அம்மன்
பெயரில் திருஊசல்

*44:69; 53:79* என்ற எண்களில் இடம் பெற்றுள்ள நூல்கள் இந்நூல் போன்றவையே.

## 430. திருஞானசம்பந்தர் தாலாட்டு

**அ. 73:145; ஆ.** *39* ஏடுகள்; **இ.** *35* x *2* செ.மீ.; **ஈ.** *4* வரிகள்; **உ.** ஏடுகள் மிகவும் சிதைந்துள்ளன; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

திருஞான சம்மந்தச் செல்வர்தமைத் தாலாட்டத்
திருவேழ மாமுகவன் சீர்பதங்கள் காப்பாமே.

இடங்கொண்ட சென்னி நிலனுறத் தேவரிறைஞ்ச மன்றி
னடங்கொண்டி டப்பண்டு நான்செய்த தவநாண் மலர்சேர்
தடங்கொண்ட வாவிப் புடைசூழ் கருவைத் தனிமுதலே
வடங் கொண்ட பூண்முலை யொப்பனை கேள்வவிவ்வை
யகத்தே (2)

முடிவு

பொருள்காட்டி மாசற்றபோதமுங் காட்டியப் போதநல்கு
மருள்காட்டிச் சந்தத மானந்தங் காட்டியடர்ந்த தகங்கு
லிருள்காட்டும் பூங்குழ லொப்பனை பாகவிருள றுத்துத்
தெருள்காட்டிப் பாதமலர் சூட்ட வென்றலை சீர்பெற்றதே
(100)

குறிப்புரை

**1–100 பாடல்கள்.** இடையிடையே பாடல்கள் பல குறை கின்றன. திருஞான சம்பந்தரின் அளவிடற்கரியா இறைப் பற்று, அவர் இறைக்குச் சேர்த்த பெருமை, அவரால் வெளிப்பட்ட இறைமாண்பு, இறையடியைப் பற்ற அவர்காட்டிய தெய்வீக நெறிகள் முதலான கருத்துகளை உணர்த்தும் முகமாய் அமைந்த இப்பாடல்கள் திருஞான சம்பந்தருக்குச் சிறப்பைச் சேர்க்கும் தன்மையில் பாடப்பட்டுள்ளன.

## 431. திருத்தொண்டர் மாலை

**அ.** 45:70; **ஆ.** *161 - 344* ஏடுகள்; **இ.***21.5* x *3* செ.மீ.; **ஈ.** *8* வரிகள்; **உ.** பெரும்பான்மையான ஏடுகள் சிதைந்துள்ளன; **ஊ.** ஓரளவு தெளிவு. **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

திருநீல நக்கர் புராணம்.

தக்கபுகழ் காவேரி நாட்டினுயர்
சாற்ற மங்கை..னின் பிறைய வருணீல
நக்கனா ரெனுநக்க னன்பர்நான்
மறை தேர்ந்து நவி .. களி னுட்பொருண்
மிக்கவானடி யையவர் அடியரைப் ..
மெய்க் கொண்டிதே
திக்கதென மென்கருதி..
சிவசிவ மகாதேவனே (1)

முடிவு

ஆதிரையி னாடோறும் புரிவித் தரன்பூசை
தொழுதுதவி யமுத டியவர்க்
கோதரும் பொன்னூறு குறையாது தானமீந்
தொழுகவோ நாதிரை யினிது
நீதிமன் னவர்தான முதவிடத் தோரடியர்
நேர்ந்துகா மத்தி னோயின்
நீதுன்னி யெவருமொத் தெனவகல வெய்தினார்
சிவசிவ மகாதேவனே (2)

குறிப்புரை

*161* ஆம் ஏடே சுவடிக்கட்டின் தொடக்க ஏடாக உள்ளது. அவ்வேட்டில் அப்பூதியடிகள் புராணம் (*22* ஆம் பாடல்) முடிவுபெறுகிறது. தொடர்ந்து திருநீல நக்கர்புராணம் தொடங்குகிறது. அடுத்து, தண்டியடிகள், மூர்க்கநாயனார், சோமாசிமாறர், சாக்கிய நாயனார், சிறப்புலிநாயனார், புகழ்ச்சோழர், நரசிங்கமுனையர், போன்றோரின் புராணங்கள் கூறப் பெற்றுள்ளன. அனைத்துப் பாடல்களும் **சிவசிவ மகாதேவனே** என்னும் ஈற்றடியினைப் பெற்றவை. இறுதியில் பல ஏடுகள் முறிந்து எண் முதலியன அறியமுடியாத நிலையில் உள்ளன.

## 432. திருமயிலை உலா

**அ.** **261:481;** **ஆ.** *131-166* ஏடுகள்; **இ.** *29* x *3* செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** மிகநன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சானது (நிறுவன வெளியீடு - *1983*).

தொடக்கம்

காப்பு

ஏர்கொண்ட பூம்பாவை ஈசர் திருவடிக்குப்
பார்கொண்ட சீருலா பாடவே - பேர்கொண்ட
கூத்தாடும் கற்பகமே கூறும்மயி லாபுரியில்
காத்தாளும் கற்பகமே காப்பு

நூல்

பொன்பூத்த புண்டரிகப் போதில் பொலன்குவடு
மின்பூத்த ஆழிஅங்கை மேதைஉமை - மன்பூத்து
அடிமுடிதே டத்தெரியாது ஆர்அழலா நின்ற
வடிவுடைய பூங்கருணை வள்ளல் - முடிவு இகந்த
ஆதியாய் ஐம்பூதத்து அண்டத்து நின்று இயங்கும்
சோதியாய் ஆனந்தத் தோன்றலாய்க் - கோதில் குணக்

முடிவு

சிந்தை தளர்ந்தாள் தெளிந்து எவர்க்கும் எண்அரிய
இந்து நுதல்மடவார் எல்லோரும் - புந்திதனில்
பேராசைகொள் ளப்பெருகும் கருணை வள்ளல்
ஏர்ஆரும் பூம்பாவை எம்பெருமான் - பார்ஆரும்
சீர் உடையான் செம்பொன் சிலை உடையான் தென்மயிலை
ஊர் உடையான் போந்தான் உலா

திருமயிலை உலா எழுதி நிறைந்தது. முற்றும். முடிந்தது.

குறிப்புரை

தேவர்கள் துதித்துப் பரவும் ஆனிமாத விழாவில் அடியார்கள் மகிழ்ந்து பரவ, இடபக்கொடி ஏற்றி வீதி உலவு திரு நாளில் ஒருநாள் தேர்மீது கபாலீசர் பவனிவந்த செய்தியே இவ்வுலா வில் கூறப்பெறுகின்றது. தொன்மையும், சிறப்பும், இலக்கியப் பெருமையும் வாய்ந்த மயிலைப்பதிக்கு எழுந்த உலாநூலில் இத்தலம் பற்றிய பல செய்திகளை அறியமுடிகின்றது. பரிவாரங்கள், சின்னங்கள், மூர்த்தி விசேடம், பூம்பாவை வரலாறு, தலங்கள், பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண், தசாங்கம் முதலான தலைப்புகளில் நூற்செய்தி விளக்கம் பெறுகின்றது.

## 433. திருமுருகாற்றுப்படை

**அ.** 76:152; **ஆ.** 2 ஏடுகள்; **இ.** 17 x 2.5 செ.மீ.; **ஈ.** 8-10 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஓம் முருகா வென்றே னுள்ளங் குளிர வந்துடனே
வருமுருகா வென்றுவாய் வெருவர் நிர்ப்பக் கையிங்கனே
திருமுருகா வென்றுதான் புலம்பாநிற் பத்தையல் முன்னே
திருமுரு காற்றுப் படையுடனே வருஞ்சே வகனே.

முடிவு

பரங்குன்றத்திற் பன்னிரு கைக்கோமான் பொற்பாதங்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு – சுருங்காத
வாசையரி னெஞ்சேயணி முருகாற்றுப் படையைப்
பூசையாய்க் கொண்டே புகல் (5)

குறிப்புரை

**1–5 பாடல்கள்**. பத்துப்பாட்டு நூல்களுள் திருமுருகாற்றுப் படையும் ஒன்று. முருகனைப் பற்றியும், முருகன் அருளைப் பெற்று வந்தவன், பிறிதொருவனை அருள் பெற வழி கூறுதலும் கூறப்படும் இந்நூலில் முருகனின் அருளுள்ளம் இயம்பப் படுகின்றது.

## 434. திருமுறை அகவல்

**அ. 567:923; ஆ.** *106-109* ஏடுகள்; **இ.** *14.5 x 3* செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

ஆவடு துறைசை அழகிய வினாயகன்
சேவடி வணங்கித் திருமுறை அகவல்
உரைப்ப னுணர்ந்தோர் உண்மையாய்க் கொள்ளுவார்
திரைப்புன லசடில் சிவனது சரிதையால்
திருஞான சம்பந்தர் திருவாய் மலர்ந்து
அருளிய பதியம் அகில முய்ய

முடிவு

மூவர் பாடல் மொழிகள் கேட்போர்
நாவரிசைப் போர்ந்து அடிபணிவர்

பிறந்த பிறப்பின் பேரின்ப மெய்தி
சிறந்து வாழ்வர் சிவனடி திண்ணமே

குறிப்புரை

நூல் முடிந்தபின் *110*–ஆவது ஏட்டில் பின்வரும் பாடல் உள்ளது.

காலமுங் கருமமும் கடந்த காரணன்
பாலுறு பரிசற பார்மடந் தையர்
கோலமும் பொருளையுங் குறித்து நச்சினர்
சீலமும் விரதமும் தீயக வென்பரால்

இறுதியில் ஒரு வெற்றேடு உள்ளது.

## 435. திருவள்ளுவமாலை

**அ.** **442:688;** **ஆ.** *1,2,6,9* ஆகிய *4* ஏடுகள்; **இ.** *26.7* x *3* செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** நன்று; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.
**தொடக்கம்**

திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
குருத்தகு நற்பலகை யொக்க - விருத்த
வுருத்திர சன்ம ரெனவுரைத்து வாணி
வொருக்கவோ வென்றதோர் சொல்

முடிவு

... இப்பாட்டிலே) அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த குறள் என முதற்சொல்லை மாற்றி ஔவையாரால் புகழ்ச்சி செய்யப்பட்டது.

திருவள்ளுவ மாலை முற்றும்.

குறிப்புரை

தொடக்கமும் முடிவும் உள்ள இந்நூலில் கபிலர், பரணர், உக்கிரப் பெருவழுதியார், மருத்துவன் தாமோதரனார், நாகன் தேவனார், அரிசில்கிழார், பொன்முடியார், மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர்க்கிழார், மதுரை யறுவை

வாணிகர் இளவேட்டனார், உறையூர் முதுகூற்றனார், இழிகட் பெருங்கண்ணனார் முதலியோர் வள்ளுவரைப் புகழ்ந்து பாடிய பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

## 436. திருவூசல் தோத்திரம்

**அ.** **32:54;** **ஆ.** *1-3* ஏடுகள்; **இ.** *25 x 3* செ.மீ.; **ஈ.** *8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

திருவளருங் கோவலூர் சிவகுன் றாதித்
திருப்பாதி ரிப்புலியூர் தேவே யென்றன்
இரு வினையுஞ் சமமாகுங் கால்கள் நாட்டி
யியம்புநடு நிலையெனுமுத் திரம தேத்தி
யொருநான்கு வாக்கசையாக் கயிறு பூட்டி
யுரையற்ற மெய்ஞ்ஞானப் பலகை மீதில்
அருளானந் தாதீதங் கடந்தி ருந்த
வாறுமுக தேசிகனே யாடீ ரூசல் (1)

முடிவு

கோவல வீரட்ட குருவருளா லேவிளங்கும்
தேவரெனு மாறுமுக தேசிகர்தம் – மாவலாய்ச்
செய்தவக்கை ஈன்ற சிவசண் முகவாசன்
செய்துதீஈ தென்றே தெளி

திரு ஊசல் தோத்திரம் முற்றும்.

குறிப்புரை

திருவூசல் தோத்திரம் எனும் இந்நூல் **13 பாடல்களை உடையது**. அனைத்துப் பாடல்களும் **ஆடீர் ஊசல்** எனும் மகுட அடியினை உடையன. இவை திருக் கோவலூர் ஆறுமுக தேசிகனை வாழ்த்திப் பாடப்பட்ட பாடல்களாகும். ‘ஆறுமுக தேசிகர் ஊஞ்சல்’ எனும் பெயரில் 12 பாடல்கள் நிறுவன வெளியீடாக வெளிவந்த ஊஞ்சல் இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. இரு

நூல்களிலும் தொடக்கப் பாடல் ஒன்றுபோல் இருப்பினும் வேறுபாடுகளும் உள்ளன. இந்நூலில் ஆறுமுக தேசிகரது அருளும், இறைவன் மீது கொண்ட காதலும் சிறப்பிக்கப் படுகின்றன. நூலின் தொடக்கம் ஊஞ்சலின் அமைப்பைச் சுட்டி நிற்கின்றது. இலிங்கத்தின் நிலை, நமசிவாய எனும் மந்திரம் உருவாகும் முறை, அத்துவித ஆனந்தம், தேசிகரின் இன்பம் தரும் அருள்மேனி, அருள் நோக்குப் பார்வை முதலான செய்திகளைக் கூறும் இந்நூல் வீரசைவத்தின் கருத்துகளை விளக்கும் வகையில் அமைகிறது.

## 437. திருவொற்றியூர் தியாகராயர் பேரில் பதம்

**அ.**526:828; **ஆ.**57–58 ஏடுகள்; **இ.**20.5x3.5செ.மீ.; **ஈ.**7–9 வரிகள்; **உ.**நன்று; **ஊ.**கடினம்; **எ.**குறை; **ஏ.**அச்சாகவில்லை.

தொடக்கம்

காணவேணும் அஞ்சாம் பவுனி காணவேணும்
காண வேணும் நல்லகடல் சூழ
வொத்திமா னகர்வாழ்கின்ற வசந்த தியாகரைக் காண
மானு மழுவுமாட சதுர்புசங்க ளாட
மங்கை வடிவம்பிகை நின்றுதாண் டவமாட
தேவரசைஞ் சாட திக்குப்பரல்க ளாட

முடிவு

விந்து முரசுபாட தவ்வீணர் கொண்டாடக்
கமுகு விருஷ்சமாட காவல ராட
தடத்தில் நின்று பாவலர் பாட
எங்கும் புகழ்பெத்த ராமசாதிக் கருள்புரி
ஆனந்த தியாகரைக் காண வேணும்
அஞ்சாம் பவுனி காண வேணும்

குறிப்புரை

இந்திரன், சந்திரசேகரன், சதுர்வேதம், சுந்திரமூர்த்தி, ரிஷி, காளி, நாரதர், முதலானோர் ஆட, நந்தி மத்தளம் போட, வீர சங்கூத, முரசு ஒலிக்க, புலவர்கள் பாட சகலரும் கண்டு

ஆனந்த தியாகரைத் தரிசித்து அருள்பெற வேண்டும் என்பதாக நூல் அமைகிறது.

## 438. திருவொற்றியூர் வடிவுடையம்மன் பேரில் வாரக் கலித்துறை

**அ.**526:845; **ஆ.**130–131 ஏடுகள்; **இ.**20.5x3.5செ.மீ.; **ஈ.** 5–9 வரிகள்; **உ.**நன்று; **ஊ.**கடினம்; **எ.**முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

வேத்த தலையி நிறத்தமு தாடிய விடவியிரு
பாத்ததை யென்றும் பணியாத மாதர்கள் படுமணத்தை
நோதித்த ஞானம் துலங்க வைத்தேண்டி சூட்டிவைக்க
ஆதித்த வாரந் துணைவருவா ளெங்க ளம்பிகையே (1)

முடிவு

யிச்சனி யாகிலு மினிதாகு மெந்தன்யே ழறைனாட்
செச்சனி யேவச்சத் தாக்கிய னாடிட்டருள் விளங்குவேனோ
அச்சனி காட்டி அடியேனைக் காக்க அருள்பெருக்க
யிச்சனி வாரந்துணை வருவாள் மின்னாவிடை யீசுபரியே (7)

முற்றும்

குறிப்புரை

வாரத்தில் அமையும் சூரியன் முதல் சனி வரையிலான ஏழு நாட்களின் தன்மை சுட்டப் பெறுகிறது, அந்நாட்களில் அன்னை எங்ஙனம் துணை புரிகிறாள் என்பதும் ஏழு பாடல்களில் சுட்டப் பெறுகின்றது. நூல் முடிந்தபின் ஏழு நாட்களையும் அம்மனோடு இணைத்த பாடல் ஒன்று எண்ணின்றி இடம் பெற்றுள்ளது.

## 439. நட்சத்திர மாலை

**அ.**287:509; **ஆ.**2–20 ஏடுகள்; 5–11, 13, 15, 18–ஏடுகள் இல்லை; **இ.**23.4 x 3செ.மீ.; ஈ 7–9 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

பித்தர்தம் மியல்பினுள் சிவமின் றாயப்
பினையுல குண்மையா மிருளாற்
சத்தியகுரு வாவிரு ளகற்றிற் றோற்றுஞ்
சத்ததங் கின்றுமுப் பொருளுஞ்
சத்திய நனவீத லதெலாங் கனவு
சாற்றிடு மறைகளி யாவையுமே (6)

முடிவு

செகமனித் தியாநித்தியஞ் சிவமென வுட்டிகழ்ந்
துடலு லகினில் வெறுப்பு
மிகையிலா முத்தி விருப்புமுற் றருணூன்
மெய்யறிஞ ரின்னசயன பாரந்
தகமதிற் கவடுகள்ளமில் பருவர்க் கருள்வா
தின்னூலாற் களிக்கிற்
சகமதி லிருவாத மக்குமாம் பழுது
சாற்றிடு மறைகண்மூ தறிஞர் (107)

குறிப்புரை

**6–107 பாடல்கள்.** முதலில் ஐந்து பாடல்களும் இடையிடையே பல பாடல்களும் விடுபட்டிருக்கின்றன.

## 440. நல்ல குட்டித் தேவன் பேரில் வண்ணம்

**அ. 522:836; ஆ.** *68–72* ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *6–7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

விருதுகொம்பு குழல்பூரிகை நவரிபம்மை தவில்பேரிகை
மிகமுழங்க வரிவளைகள் குஞ்ச மொடு
விசுறு பெண்கள் வல்லைச் சக்கணி யாட
வலமிடங் கவரிவீசுனா கரிதொடர்ந்த பிடிபோல்வாம்
கதாகொங் கர்தரு குதிரை கொஞ்சிவர
வளைபிரம்பு கொல்லா பட்டயக் காரர்

முடிவு

நெற்றியில் வேர்வுமது நனைந்து
குழைபாய லில்மயிர் வகிர்ந்து
தருமாலை யுமரை நசுங்க
குறியிதழ் விளிம் புமெனை யடிமை
கொண்டு கொள்ளு முற்ற நிலாவில்
மருவி விளையாடில் மகா சுகமே (1)

மறுமாலை சூடி வண்ணமெழுதி நிறைந்தது முற்றும்.

குறிப்புரை : நல்ல குட்டித் தேவன் பேரில் மறுமாலை சூட்டின வண்ணம்

நல்ல குட்டி தேவன்மீது பாடப்பட்ட பாடல்கள்.

## 441. நாராயணப் பத்து

**அ.** 526:822; **ஆ.** *10–12 ஏடுகள்;* **இ.** 20.5 x 3.5 *செ.மீ.;* **ஈ.** *7–8 வரிகள்;* **உ.** *நன்று;* **ஊ.** *கடினம்;* **எ.** *முழுமை;* **ஏ.** *அச்சாகாதது.*

தொடக்கம்

ஒருதுணை யானறியேன் உன்னிருபா தமல்லாமல்
வருவினை யாதோ மருள்வாழ மருள்வாயி
பரிமள மார்பழகா பராபர னாதிபனே
அரிகரி கேசவனே அரிகரி நாரணனே (1)

முடிவு

அரிகரி நாரணனார் அழகியதாள் மலர்மேல்
உருமிய னாயர்பா லொருபதுமே பகர்வார்
திருவரு ளால்மிகவே திசைபேரோர் பெறுவார்
பரவிய வீருடனே பரகெதி சேர்வரே (11)

குறிப்புரை

*ஒன்று முதல் 11 பாடல்களை உடைய இந்நூல் நாராயண னுக்குப் புகழ் சேர்க்கிறது. கொடுவினைகளை, இடு வினைகளை, தீவினைகளைத் தீர்ப்பவன், தரும தயாபரன்,*

அமரர் சிகாமணி, தேவரைக் காத்தவன், மது சூதனன், அரிகரி நாரணன், அழகிய சீதரன், ராகவன், வாமனன், நரசிங்க ரூபன் முதலான பல்வேறு சிறப்புகளை யுடையவன் என்பதை நூல் விளக்குகின்றது.

## 442. நால்வர் நான்மணி மாலை

**அ. 76:156; ஆ.** *9–17* ஏடுகள்; **இ.** 17x2.5 செ.மீ.; **ஈ.** *8–10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

பூவான் மலிமணி நீர்ப்பொய்கைக் கரையினிற்
பாவான் மொழிஞா னப்பா லுணரு – நாவான்
மதித்தெஞ் செவி..ய வெறித்தபிரான் நன்னாட்
வெறித்தன் கமலமே வீடு (1)

### முடிவு

செய்யவார் சடைத்தெய்வ சிகாமணி
பாத மேத்தும் வாதவூரன் ப..
பாவெனப் படுவ துன்பாட்டு
பூவெனப் படுவது பொறிவாழ் பூவே (40)

### குறிப்புரை

இதில் ஒவ்வொருவர் மீதும் பத்துப் பாடல்களென வாதவூரர் முதலான நால்வர் மீதும் 40 பாடல்கள் பாடப் பட்டுள்ளன. அவர்களது இறையுணர்வு, பாடலில் உள்ள பக்தி உணர்வு முதலானவை வெளிப்படுகின்றன.

## 443. நான்மணி மாலை

**அ. 76:158; ஆ.** *64–79* ஏடுகள்; **இ.** 17x2.5 செ.மீ.; **ஈ.** *8–10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பூமேல யன்தியர் மொலிப் புரத்தறாத்
நாமே புகழ்தளவை நாட்டுவாம் - பாமேவு
மேத்துகளந்தான் தில்லையிடத்து கந்தானம் பலத்தே
கூத்துகந்தா னிகோரார்க் குடை (1)

முடிவு

தில்லை மானகர் போற்றி
தில்லையுட் செம்பொன்னம்பலம் போற்றி
யம்பலத்தாடு நாடகம் போற்றி
யென்றாங் கென்றும் போற்றினு
மென்றனக் குரைவார் களில்லை போற்றி
யாயினும் போற்றி போற்றி
நின்பேரிளம் பூவடியே (40)

*நான்மணி மாலை முற்றும்.*

குறிப்புரை : பட்டனத்துப் பிள்ளை அருளிச் செய்த
நான்மணி மாலை

*கி.பி. பத்தாம் நூற்றாண்டினராய பட்டினத்தடிகள் பாடிப் பதினோராம் திருமுறையில் அமைந்த 'கோயில் நான்மணி மாலை' என்பதே நான்மணி மாலை இலக்கியங்களில் முதலாவது நூல். இறைவனது திருவடிகளைப் போற்றித் துதிக்கும் இவர் தில்லை மாநகர், பொன்னம்பலம் இவற்றின் பெருமைகளையும் கூறுகின்றார். வெண்பா, அகவல் முதலான நான்கு வகைப் பாக்களில்* **40 பாடல்கள்** *இந்நூலில் பாடப் பெற்றுள்ளன.*

## 444. நெஞ்சுவிடு தூது

**அ. 1:8; ஆ.** *168–175 ஏடுகள்;* **இ.** 22 x 3 *செ.மீ.;* **ஈ.** *8–9 வரிகள்;* **உ.** *நன்று;* **ஊ.** *தெளிவு;* **எ.** *குறை;* **ஏ.** *இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.*

தொடக்கம்

பூமேவும் உந்திப் புயல்வண்ணன் பொற்பதுமத்
தார்மேவும் மார்பன் சதுமுகத்தோன் - தாம்மேவிப்
பன்றியும் அன்னமுமாய்ப் பாரிடந்தும் வான் பறந்தும்

என்றும் அறியா இயல்பினான் – அன்றியும்
இந்திரனும் வானோரும் ஏனோரும் எப்புவியும்
மந்திர வெற்பும் மறிகடலும் – மந்திரமும்
வேதமும் வேத முடிவின்விளை விந்துவுடன்
நாதமுங் காணா நலத்தினான் – ஓத
அரியான் எளியான் அளவிறந்து நின்ற
பெரியான் சிறியான்பெண் பாகன் – தெரியா
அருவான் உரவான் அருவுருவ மல்லான்
மரியான் மரிப்பார் மனத்தான் – பரிவான
மெய்யர்க்கு மெய்யன் வினைக்குவினை யாயினான்
பொய்யர்க்குப் பொய்யாய பொய்யினான் – ஐயன்
படநாகம் பூண்ட பரமன் பசுவின்
இடமாய் நிறைந்த இறைவன்

முடிவு

தந்தெம்மை ஆண்டருளுஞ் சம்பந்த மாமுனிவன்
அந்தங் கடந்தப்பா லாய்நின்றோன் – எந்தைபிரான்
வீற்றிருக்கும் ஓலக்கம் எய்திஅடி வீழ்ந் திறைஞ்சிப்
போற்றி சயசய போற்றியென – ஆர்த்தகரி
அன்றுரித்தாய் நின்பவனி ஆதரித்தா ரெல்லாரும்
வென்றிமதன் அம்புபட வீழ்வரோ – நின்றிடத்து
நில்லாத செல்வம் நிலையென் றுனைநீங்கிப்
பொல்லா நரகிற் புகுவரோ – பல்லோரும்
கத்துஞ் சமயக் கணக்கிற் படுவரோ
சித்தம் பலகால் திகைப்பரோ – முத்தம்
பொருந நகைமடவார் புன்கலவி யின்பம்
மருவி மயங்கிவரு வாரோ – இருபொழுதும்
நாள்இருபத் தேழும் நவக்கிரக மும்நலியுங்
கோள்இவவென் றெண்ணிக் குறிப்பரோ – வேளை
எரித்த விழியாய்நின் இன்பக் கடற்கே
தரித்து மதிமறந்த தையல் – வருத்தமெலாந்
தீராய் என உரைத்துச் செங்கமலப் பூந்திருத்தாள்
தாராய் எனப்பலகால் தாழ்ந்திறைஞ்சி – ஓர்ஆரும்
பூங்கொன்றை வாங்கிப் புகழ்ந்துபுரி நெஞ்சமே
ஈங்கொன்ற வாராய் இனி.

நெஞ்சுவிடு தூது முற்றும்.

குறிப்புரை

இறைவனியல்பு, உயிரின் இயல்பு எனுமிவற்றை விளக்குவதுடன் ஆறு, நாடு, ஊர், மலை, தார், குதிரை போன்றவற்றைக் கொண்டு விளங்குபவன் இறைவன், என்ற கருத்தினையும் இந்நூல் கூறுகின்றது. அவற்றைச் சிறப்பிப்பது போன்று சிவானந்தத்தின் சிறப்பினையும் பெருமையினையும் கூறுவதாகவும் பாடல்கள் அமைந் துள்ளன. இந்நூல் மெய்கண்ட சாத்திரம் பதினான்கனுள் ஒன்று. இந்நூலினை இயற்றியவர் உமாபதி தேவ நாயனார். பிற தூது இலக்கியங்களைப் போன்றே இந்நூல் அமைந்துள்ளது. எண் *130:255*–இல் இது போன்றநூல் இடம் பெற்று முழுமையாக உள்ளது.

இந்நூல் உமாபதி சிவாசாரியார் தமது குருவிடம் தமது நெஞ்சத்தைத் தூதாக அனுப்புவது போன்று பாடப் பெற்றுள்ளது. இதில் ஆசிரியர் தமது குருவைச் சிவபெருமானாகவே எண்ணி அவருக்குத் தசாங்கம் உரைக்கின்றார். இதனுள் அவர் தமது நெஞ்சுக்குச் சொல்வது போல் பல அறிவுரைகளை நமக்குச் சொல்கின்றார். அடங்கன்முறை என்ற இவரது பெருநூலில் இடம்பெற்ற சிறு நூல் இதுவாகும்.

## 445. நெஞ்சுவிடு தூது

**அ.** ***130:255***; **ஆ.** *113–117* ஏடுகள்; **இ.** 20 x 3 செ.மீ.; **ஈ.** *9–10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை.

தொடக்கம், முடிவு 1:8 போன்றது.

குறிப்புரை

இந்நூல் *1:8* என்ற எண்ணில் இடம் பெற்றுள்ள நூல் போன்றதே. ஆயின் அதில் நூல் குறையாக இருக்க இதில் முழுமையாக இருக்கின்றது.

## 446. பஞ்சவிஞ்சதி மயேசுரர் அகவல்

**அ. 76:155; ஆ.** *3* ஏடுகள்; **இ.** 17x2.5 செ.மீ.; **ஈ.** *8–10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

திருவளர் நான்மறை யாதிய சென்னூ
லாருதலை யாக வுணர்த்து தாகரிதாய்
நீங்களும் பொருளாய் நிட்கள மாகு
யோங்கு யாவையு மாயுரானைப் போற்றி
நின்னருள் தனாற் றன்னிகர் சதாசிவ
மென்ன விளங்கு மெந்தாய் போற்றி
விதிவின மாயேசப் பெரும்பெய ரடைந்து
செரியுயிரா ண்பெண் ணெனுங்குதி செறிய
விலிங்க மாவுடையா ளெனுந்திர மடைந்து
துலங்கு லிங்கமதாஞ் சுடரே போற்றி
குளிர்தரு முலைப்போடு கெழுமியு முயிர்த்தோகை
யிளமையிற் காமமிலாது ...

முடிவு

...
வன்பாக கயிலாய மருவும் வாழ்வே
மணியே போற்றி மணியோ டொளிரு
மணியே போற்றி யணிசே ருடலி
னுயிரே போற்றி யுறவே போற்றி
சேயிர்நீர் பத்தித் திருவே போற்றி
சிந்தை நின்றுருக்குஞ் சிவமே போற்றி
பந்தம தறுக்கும் பரிசருள் போற்றி
காரைச் சடைசேர் காரண போற்றி
வெற்றி பருக்குவரு வேள்விடையவ போற்றி
யென்பிழைத் தனைப்பொறுத் திங்கினி மையதா
யன்புட னாட் கொளலுன் கடனாமே

குறிப்புரை

இந்நூல் ஞான மார்கம் பற்றியதாக அமைகிறது.

## 447. பஞ்ச விஞ்சதி மயேசுரர் அகவல்

**அ.** **567:921;** **ஆ.** *91–95* ஏடுகள்; **இ.** 14.5x3 செ.மீ.; **ஈ.** *7–8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### குறிப்புரை

இந்நூல் *76:155* என்ற எண்ணில் அமையும் நூலினைப் போன்றது.

## 448. பஞ்சாக்கிரம மாலை உரை

**அ. 121:234;** **ஆ.** *94 - 117* ஏடுகள்; **இ.** 23 x 3.5 செ.மீ.; **ஈ.** *8 - 10* வரிகள்; **உ.** நன்று; **111, 113, 114** ஆகிய ஏடுகள் இல்லை; ஊ; தெளிவு; **எ.**முழுமை; **ஏ.** அச்சாகாதது.

### தொடக்கம்

வாரம் பரிவுபெற வந்தித்து முப்பொழுதா
நேரம் பணிந்து நினைந்துருகி - யேரம்ப
வைஞ்சுமுகச் சிந்தரனுக் காளாண்நாற் சண்டநமக்கு
அஞ்சுமெழுத் தஞ்சுமா னாம்.

**எ - து.-** அன்பினாலும் பக்தியினாலும் தோத்திரம் செய்து மூன்று காலமாக சந்நதிகளிலே நமஸ்கரித்து வனுசந்தானம் பண்ணி யுள்ளமுருகி ஓம்ப கணபதி என்னும் திருநாமத்தை உடையவனாய் ஐஞ்சு முகங்களை உடைய ஞானவானாகிய வினாயகனுக்கடிமையானால் மறலி நம்மைக் கண்டால் அஞ்சுவான். எழுத்தஞ்சாய்ச் சிரிபஞ்சாக்கிரகம் நமக்குக் காவலாமென்றவாறு.

**இது விநாயகர் துதி**

**எ - து.-**பஞ்சாக்கரத்தா லட்ட புட்பஞ் சாத்தி நமஷ்கரித்துப் பூரணமாய்ப் போக்குவர் பற்ற சுத்த பஞ்சாக்கரத்தாலே சிவனை மூர்த்தி பண்ணி, பத்தியினா லுள்ள முருகி ஞானாசாரியனை நமஸ்க்கரித்து அர்ச்சிப்பது ஞானபூசை யென்று சொல்லுமென்றவாறு (*60*).

முடிவு

காழிநகர் வாழி கவுனியர்கோன் தாள்வாழி
வாழிஅருட் கண்ணுடைய வள்ளல்தா - ளேழிசையின்
தெய்வத் தமிழ்ப்பாடல் வாழி திருநெறியாம்
சைவத்தவர் வாழி தாம்

பஞ்சாக்கிரம மாலை முற்றும்

குறிப்புரை : **கண்ணுடைய வள்ளல் அருளிச் செய்த பஞ்சாக்கிரம மாலை உரை**

இந்நூலில் அறுபது பாடல்கள் உரையுடன் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு பாடலின் இரு தொடக்க எழுத்துகள் சுவடியின் இடதுபுற ஓரத்தில் எழுதப் பட்டுள்ளன. ஞானபூசை, சூக்குமப் பஞ்சாட்சரம், தீட்சைவிதி, பூசைவிதி முதலானவற்றைத் தத்துவ முறையில் போதிக்கும் இந்நூல் ஆனந்த மூலமாகிய சிவனையடையும் வழிமுறைகளைத் தெளிவாக எடுத்தோம்புகின்றது.

## 449. பட்டினத்தார் வெண்பா

**அ. 519:805; ஆ.** *1–6* ஏடுகள்; **இ.** 15.5 x 4 செ.மீ.; **ஈ.** *11–12* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

காப்பு

பண்பான நெஞ்சுக்கே ஞானத்தால் நல்லபுத்தி
வெண்பாவாய் நூலும் விளம்பவே – பண்பாய்
கண்பரு பதமுரு வக்கன முகடதிர்வரு
கண்கதிரு வேல்முருகன் காப்பு

நெஞ்சுடனே தான்புலம்ப நீலநிறத் தானீன்ற
குஞ்ரசாத்தை யாதரித்துக் கும்பிட்டால் – தஞ்சமுடன்
காமன்முதல் மும்மலத்தில் கட்டறுத்து ஞானமுடன்
பூமிதனில் வாழ்வாரெப் போதும் (1)

முடிவு

பேசாதே ஞானப் பெருமைகிடைப் பதுதானாசா
பாசங்க ளில்லாதார் சகலலோகம் – கூசாமல்
தேசமெல்லா மோடித் திரியுதியே மனமே
ஆசாபா சங்களும் போய் (65)

குறிப்புரை

காப்புப் பாடல் இன்றி **1–65 பாடல்கள்** உள்ளன. சித்தர் தத்துவத்தை விளக்கும் இந்நூல் ஞானத்தை அடைந்து இன்பப் பெருவாழ்வு வாழும் முறையினைக் கூறுகின்றது.

## 450. பட்டினத்துப் பிள்ளை பேரில் உடற்கூற்று வண்ணம்

**அ. 526:843; ஆ.** *120–127* ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *7–8* வரிகள்; **உ.** நன்று; ஓரிரு துளைகள்; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஒருமட மாது மொருவனு மாகி
யின்ப சுகந்தர வன்பு பொருந்தி
அண்டங் கலங்கி யொழுகிய விந்து
ஒரு சுரோ ணிதமீது கலங்கிப்
பணியிலோர் பாதி சிறுதுளி மாது
பண்டியில் வந்து புகுந்து திரண்டு
பதுமவரும் புகபடமிதென்று
பார்வை மெய்வாய் செவிகால்கள் திரண்ட

முடிவு

தென்மடயாய் புலியூரி லமைந்த யிரனியரும்
பகரு மறையாள ரெங்கள் சிதம்ப ராம்பர்
கண்ட ரிறையர் கொன்றை யாவனிதுங்க
ரீசர் சாதர் சிவா வா சிவகாமி
மங்கையொரு பாகனிரு பாதமே (1)

முற்றும்

குறிப்புரை

இறைத்தோற்றம், தலப்பெருமை, ஈசன் பெருமை, ஈசனின் வேறுபெயர்கள் முதலியன சுட்டப்பெறுகின்றன.

## 451. பண்டார மும்மணிக் கோவை

**அ.**130:265; **ஆ.***168–175* ஏடுகள்; **இ.**20x3செ.மீ.; **ஈ.***9–10* வரிகள்; **உ.**நன்று; **ஊ.**தெளிவு; **எ.**முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

எண்டிசைக்குஞ் சூளா மணிமாசி லாமணிசீர்
கொண்டிசைக்கு மும்மணிக் கோவைக்குக் – கண்டிகைபோற்
பைநாகத் தானைத்தான் பாற்கடலான் போற்றவகு
கைநாகத் தானைத்தான் காப்பு.

முடிவு

விரிக்குஞ் சரியையிப் பாமாலை சேர்த்தது மெய்க்கிரியை
தரிக்கும் படிகின்று சாற்றியதே மற்றெண் றண்டமிழ்நீ
தெரிக்கின்ற போதருள் செய்ததுவே சிவயோக முண்மை
பரிக்கின்ற ஞான மொன்றே மாசிலாமணி பாலிப்பதே (30)

மும்மணிக்கோவை முற்றும்.

பிற்குறிப்பு

குரோதி ஆண்டு கார்த்திகை மாதம் பதினைந்தாம் தேதி குரு வாரமும் புனர் பூச நட்சத்திரமுங் கூடின சுபதினத்தில் அடியேன் சுப்பிரமணியன் சுயலிகிதமாக வெழுதி நிறைந்தன.

குறிப்புரை

காப்புச் செய்யுளை அடுத்து ஒன்று முதல் 30 பாடல்கள் உள்ள இந்நூல் இறை, உயிர், தளை ஆகிய முப்பொருள்களின் உண்மைகளை ஆராய்ந்து கூறும் நூலாக இயங்குகின்றது. ஆசிரியம், வெண்பா, கலித்துறை ஆகிய

மூன்று யாப்புகளிலும் பத்துப் பத்துப் பாடல்கள் வீதம் அமைக்கப்பட்டுள்ளது இந்நூல்

## 452. பதிற்றுப் பத்தந்தாதி

**அ.**333:564; **ஆ.**1–12 ஏடுகள்; **இ.**25.5x2.5செ.மீ.; **ஈ.**8–9 வரிகள்; **உ.**நன்று; **ஊ.**தெளிவு; **எ.**முழுமை; **ஏ.**அச்சாகாதது.

தொடக்கம்

சீரார் கமலச் சேவடியைச் சிந்தை யிருத்தி யுனதுதிருப்
பேரா யிரமு மெடுத்தோதிப் பெம்மான் கருவையெம் மானென்று
ஆரா வமுத முண்டவர்போ லனந்தா னந்த தக்கநெகிழ்
வாரா யின்பம் வருவித்தா யறியே னிதற்கோர் வரலாறே (2)

முடிவு

வெள்ளை மேனியாய் போற்றி ஒப்பனை
மேவு மார்பனே போற்றி போற்றி
கழர்க ளலம்புத் தண்காவிரி நிழலிற்
கருவை யங்கடி கடவுள் போற்றி
யானுள்ள மென்ற வுன்னடி வழுத்திட
யுதவி செய்தவர் போற்றிநா டோறுந்
தெள்ளு செந்தமிழ் கருவை மாநகர்
செல்வ போற்றிநின் சீர்கள் போற்றியே (100)

பயிற்றுப் பயிற்றந்தாதி முடிந்தது முற்றும்.

குறிப்புரை : பயிற்றுப் பயிற்றந்தாதி

**வெள்ளை வாரணப் பிள்ளையார் பதமுள்ளுவார்** என்றும், **வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு** என்றும் முதல் ஏட்டில் தொடங்கும் இரு காப்புப் பாடல்களை அடுத்து நூல் ஒன்று முதல் 100 பாடல்களில் அமைகிறது. கருவை மாநகரில் எழுந்தருளியுள்ள இறைவனது தனித்தன்மை, வடிவச் சிறப்பு, தொன்மைச் சிறப்பு, தலச் சிறப்பு முதலியன நூலுள் கூறப் பெறுகின்றன.

## 453. பரமாசாரியரென்னும் வீரட்டேசுவர சுவாமி பெயரில் வெண்பா வண்ணம்

**அ.**362:601; **ஆ.**21–23 ஏடுகள்; **இ.**27x3செ.மீ.; **ஈ.**6–7 வரிகள்; ஓரளவு நல்லநிலை; ஒரு சில ஏடுகளில் சிதைவு; **ஊ.**தெளிவு; **எ.**முழுமை; **ஏ.**அச்சாகாதது.

தொடக்கம்

திருநா வுக்கரை யார்முத லுரைகோ வற்குயர் கடவுள்
பெரியா னைக்கண பதியி னிருதா ளைப்பணி குவனே
கூரி யசுரர் முனிகளும் பெரிதெனு முயர்க தியினைத்
தாரோ மெனவரு ளுருவமா மாறு முகனடி பணிகுவாம்

முடிவு

கோவலவீ ரட்ட குருவருளா லேவிளங்குந்
தேவரெனு மாறுமுக தேசிகர்தம் - மாவலாய்ச்
செய்தவக்கை யீன்றசிவ சண்முக வாசான்
செய்துதியீ தென்றே தெளி

குறிப்புரை

'வீரட்டேசுவர சுவாமி பெயரில் வெண்பா வண்ணம்' எனும் இந்நூல் முழுமையாகவுள்ளது. இதனைத் தொடர்ந்து பின்வரும் நூல்களும் இச்சுவடிக் கட்டில் காணப்படுகின்றன. அனைத்தும் இறைத் தோத்திரப் பாடல்களாக அமைகின்றன

| நூற் பெயர் – | ஏடுகள் |
|---|---|
| பரமாசாரிய வீரட்டேசுவர சுவாமி பெயரில் திருவம்மானை – | 24–26 |
| திருக்கோவிலூர் வீரட்டேசுவர சுவாமி யருள்மேனித் திருப்பணி ஸ்துதி. – | 27–37 |
| மகா குரு திருவவதார தினம். – | 38 |
| அவனாசி நாதர் பூசை தினம் – | 39–40 |
| சிவ சண்முக அருணாசல ஞானியார் பரிபூரணமான தினம். – | 40–42 |

இந்நூலில் இடம் பெற்றுள்ள இக்காப்புப் பாடலும், நூல் முடிவிலுள்ள இந்த வெண்பாவும் வேறு நூல்களிலும் இடம் பெற்றுள்ளன. ஆறுமுக தேசிகன் திருஊசல் (53:81) என்ற நூலில் இந்த வெண்பா இடம்பெற்றுள்ளது.

## 454. பராக்கிரம மாலை

**அ.**79:175; **ஆ.**1–13 ஏடுகள்; **இ.**25.5x2.5செ.மீ.; **ஈ.**7 வரிகள்; **உ.**2,3 ஆம் ஏடுகள் இல்லை; ஏடுகள் நல்ல நிலையிலுள்ளன; **ஊ.**நல்ல கையெழுத்து; **எ.**குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பற்றாசை யாகப்பணி வார்தம் கருகன்று பாக்கியமும்
முற்றா முகின்முலை மங்கையர் போகமும் முற்றமிழைக்
கற்றா ருறவுங் கதியுங் கொடுக்குங் கவின்மதுரைப்
பொற்றா மரைக்கரைச் சிற்றிவி நாயகன் பொற்பதமே.

குடக்குஞ் சிறுபிறை கொன்றை மந்தாகினி கொங்குவன்னி
விடக்குஞ் சரவொடு வெண்டலை மாலை வெண்கொக்கிற்குங்
கிடக்குஞ் கடைச்சொக்க ரெண்ணென பராக்கிரம
கீர்த்திசொல்ல
கடக்குஞ் சாமுகச் சிற்றிவி நாயகன் காப்பெமக்கே

முடிவு

விராடபுருடன் சிரமேல் வாழுங்கூ டல்விமல னெங்கோன்
அராப்பணி வேணியனெண் ணெண்டிரு விளையாடல்
செய்தோன்
சராசர மெங்கு நிறையுஞ் சறுவதான பரன்மேற்
பராக்கிரம மாலை படித்தால் வரும்கன பாக்கியமே (65)

சுந்தரேசுர சுவாமி துணையாக மீனாட்சியம்மன் இரட்சிக்கவும். திருச்சிற்றம்பலம்.

குறிப்புரை

விநாயகர்துதி, காப்பு என்ற இரு பாடல்களையடுத்து நூல் **13 ஆம் பாடல் முதல் 64 ஆம் பாடல் வரை** அமைகின்றது. இறுதி 65 ஆம் பாடல் நூற் பயன் கூறுகிறது. முதல் 12 பாடல்களும் இடையில் 46 முதல் 51 வரையிலான பாடல்களும் நூலில் இல்லை. கட்டளைக் கலித்துறை யாப்பில் அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலுக்கும் முன்பு தலைப்பு தரப்பட்டுள்ளது. சிவபெருமானது வீரச் செயல்களைப் புகழ்ந்து பாடுபவையாக இப் பாடல்கள் உள்ளன. விசுவேசன் நிக்கிற விசயம், தாருகாவன விசயம், பத்திர காளி விசயம், முயலகன் விசயம், அந்தகாசுர விசயம், அனலாசுர விசயம், நிதனாசுர விசயம், மிருகாசுர விசயம், சர்வ பூதாசுர விசயம், காளாசுர விசயம், நாகாசுர விசயம், பஞ்ச பூதாசுர விசயம், வீமாசுர விசயம், மகுடாசுர விசயம், புலிமுகாசுரன் விசயம், வீரமகா தாண்டன் விசயம், அம்பிகை வில் விசயம் முதலான தலைப்புகள் உள்ளன.

## 455. பராபரக்கண்ணி

**அ.75:149; ஆ.**26 ஏடுகள்; **இ.**16.5x4செ.மீ.; **ஈ.**10–14 வரிகள்; **உ.**ஓரளவு நல்ல நிலை; **ஊ.**நன்று; **எ.**முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

சீராறுந் தெய்வத் திருவருளாம் பூமிமுதல்
பாராதி யாண்ட பதியே பராபரமே (1)

கண்ணாரக் கண்டோர்க்குப் பொருளே காணாமல் அருள்
விண்ணோ டோடிருந்த இன்பவெற்பே பராபரமே (2)

முடிவு

உள்ள மறிவாய் உழைப் பறிவாய் – நானேழைத்
தள்ளி விடின் மெத்தத் தவிப்பேன் பராபரமே (397)

கன்றினுக்குச் சேதாக் கனிந்திரங்கல் போலவெனக்
கென்றிரங்குவாய் கருணை எந்தாய் பராபரமே (398)

முற்றும்.

**பிற்குறிப்பு**

*976* ஆம் வருஷம் புரட்டாசி மாதம் 6–ம் தேதி வெள்ளிக் கிழமையும் உத்திராட நட்சத்திரமும் கூடின சுபதினத்தில் பொன்னம்பலம் பராபரக்கண்ணி எழுதி முடிந்தது.

குறிப்புரை

இந்நூல் வருத்தம், வேண்டல், மகிழ்ச்சி அடியார் செயல் போன்ற தலைப்புகளில் பாடப்பட்டுள்ளது. பராபரமே என்னும் இறுதி மகுடத்தினை உடைய *398* கண்ணிகளாக உள்ளன.

## 456. பாண்டிய மகாலிங்கப் பதிகம் முதலியன

**அ.**132:270; **ஆ.***23* ஏடுகள்; **இ.**22x3செ.மீ.; **ஈ.***7–8* வரிகள்; **உ.**நல்ல நிலை; **ஊ.**தெளிவு; **எ.**முழுமை; ஏ. அச்சாகாதது.

தொடக்கம்

சீர்கொண்ட நஞ்சயர்சொல் கயிலாயப் பரமசிவ
செங்கோட்டு வேல னெனவே
செப்புநான் தினமும்வரு தலமுறை யுளோரெலாம்
சிவக்கியான செல்வ முதலாய்ப்
பேர்கொண்ட என்நலமும் அணுகினேன் மேலுமே
பெருகவாழ்ந் துருக வென்றே
பிசுகாமல் நிதமெனது சிந்தையது வாயுறும்
பின்ப தொருபது வருடமாய்
ஏர்கொண்ட செல்வமன் னோர்க்குமென் மேலுற
வெழிற்குர பணிக்கு றையெலா
மின்பொடு முடிக்கவென் றேயெனும் படிசெல்வ
மியல்பான கால மென்றே
பார்கொண்டு உணர்தரு மொழிகேட்டு வந்தமதாற்
பழிவொடும் அளிக்க வருள்வாய்
பங்கயம் திகழ்குமர மங்கயம் பதியிலுறை
பாண்டிய மகாலிங்கமே (1)

முடிவு

கோவணக்கா மெய்ஞ்ஞானக் குருவா லயப்பணி
குறையவருங் கொங்கு நாட்டில்
குணமுனிவர் களினால் முடிந்துநிறை வேறுமென்
றேமனங் கொண்டு வருமென்
னாவலின் படிமகிழ் வொடுங் கேட்டு
வேண்டுவ வளித்துவிர வரையனுப்பென்
றென்பாய பரமசிவ ராசா வெனப்பெய
ரணிந்துவாழ் வோர்க்கு ணர்த்திப்
பூவுலகில் அறிவுள ரெலாம்தொழு நிறைஞ்சுமப்
பொற்பணி முடித்த ருள்வாய்ப்
புனிதசுந் தரவமவ நிருதபரி பூரண
பூராதன கிருபா கரஆர்
பாவவாத போதனர்கள் வானவர்கள் மற்றுளோர்
பலர்தொழு திறைஞ்சு மிறையே
பங்கயம் திகழ்குமர மங்கயம் பதியிலுறை
பாண்டிய மகாலிங்கமே (12)

குறிப்புரை

இந்நூல் குமரமங்கை என்னும் திருத்தலத்தில் எழுந்தருளி யுள்ள பாண்டிய மகாலிங்கம் என்னும் இறைவன் மீது பாடப்பட்ட பதிகப் பாடல்களாகும். 12 பாடல்களைக் கொண்டு முற்றுப் பெறுகிறது. நல்ல நடை உடையது. முதல் ஏழு ஏடுகளில் நூல் முடிகிறது. தொடர்ந்து 6,7 எண்ணுள்ள இரண்டு ஏடுகளில் இறுதி மூன்று பாடல்கள் மீண்டும் எழுதப் பட்டுள்ளன. அடுத்து சிவகிரி ஆண்டவனே என்ற முடிவு மகுடத்தை உடைய 12 பாடல்களைக் கொண்ட மூன்று ஏடுகள் உள்ளன. இப்பகுதியும் முற்றுப் பெற்றதாகத் தெரிவதால் சிவகிரி ஆண்டவன் பதிகம் என்னும் நூலும் இதனுடன் இணைந்துள்ளது. இந்நூலைப் போலவே தண்டாயுதக் கடவுளே என்ற முடிவடியை உடைய இரண்டு பாடல்களும் சம்பந்தர், சுந்தரர், திருவாதவூரர் ஆகியோரது நட்சத்திரங்கள் அடங்கிய இரண்டு ஏடுகளும் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளன.

மீண்டும் சிவகிரி ஆண்டவனே என்று முடியும் பாடல்கள் அடங்கிய நான்கு ஏடுகள் மிகச்சிறிய அளவில் தனியே பின்னால் சேர்க்கப்பட்டுள்ளன.

## 457. பிரசாத விருத்தம்

**அ.138:288; ஆ.***81–85* ஏடுகள்; **இ.**38x3.5செ.மீ.; **ஈ.***6–7* வரிகள்; **உ.**நன்று; **ஊ.**தெளிவு; **எ.**முழுமை; ஏ. அச்சாகாதது.

### தொடக்கம்

நற்றழலின் கொழுந்துபைய கதிர்மின்னு விளக்கு
நண்ணுமவர் ளொளிபுகை மாணிக்க மருமின்னு
வுற்றொளிரு மிரவி நூறாயிரங் கோடி
வுதைய வொளிய னன்தோகை வட்டகுர்
நற்றமறம் மிலஞாவை வாழிஞாற்கண் ணாடியவிர்
நானாயிர கோடி மதியொளியத் தோகையே
பெற்றதின கரவெயில் மேற்பேக வருமிருளே
பிறங்குநதி முதல்முடி மேற்றுவாத சாந்தம் பெறுமே (1)

### முடிவு

சத்தி கலைக்கு மேலேயொரு சூனியமுண்டு. வியாபினி கலைக்கு மேலே யொரு சூனியமுண்டு. சமனை கலைக்கு மேலேயொரு சூனிய முண்டு... மைமனை கலைக்கு மேலேயொரு முண்டென்றவாறு – என இன்னமிவற்றை விரிக்கில் வெகுவிதமாகப் பெருகும். அவை யெல்லா மிங்ஙனஞ் சொன்னவற்றுள்ளே யடங்கு மவ்வாறடங்கு வகை யுபாய மெல்லாங் குரு முகத்தினாலே அறிந்து கொள்க.

### குறிப்புரை

பிரசாத விருத்தம் எனும் நூல் **ஒன்று முதல் ஏழு பாடல்களைப்** பெற்றுள்ளது. இதனைத் தொடர்ந்து பிரசாத **விருத்த உரை** இடம் பெறுகின்றது. இவ்வுரையில் பிரசாத விருத்தத்தில் கூறப்பட்டுள்ள ஏழு பாடல்களுக்கும் விரிவான தெளிவான உரை அமைந்துள்ளது. உலகிலுள்ள அனைத்து ஆற்றல்களும் அடங்கும் வழிமுறை இறையருளே என்பது பாடல் வழி உரைவழி மற்றும் உணர்த்தப்படுகின்றது. இவ்வுரை யின் வழி விளங்கிக் கொள்ள முடியாதவர்கள் குருவின் துணையால் அறிய முடியும் என்று நூல் கூறுகிறது.

## 458. புதுவூர்ச் சக்கரவர்த்தி யம்மானை

**அ.**286:508; **ஆ.**1–62 ஏடுகள்; **இ.**39.5x3செ.மீ.; **ஈ.**7–8 வரிகள்; **உ.**நன்று; ஓரிரு துளைகள்; **ஊ.**தெளிவு; **எ.**முழுமை; **ஏ.**அச்சானது, நிறுவன் வெளியீடு, 1995.

தொடக்கம்

தேடிய பொருள்கை கூடுஞ் சிவகதி பலனு முண்டாம்
நாடிய புதுவூ ராச னற்கதை கேட்டோர்க் கெல்லாம்
ஓடியே பாவம் போகும் உண்மையாய்க் கலியும் வாங்கும்
பாடினோர் கேட்டோர்க் கெல்லாம் பலனிது கொடுக்கும் வாறே

அம்மானை பாட அருள் கொடுப்பாய் நாயகனே
பெம்மான் சிவனே பெரிய பெருமாளே
அடியார்க் கெளியானே ஆதிபர மேசுரனே
வடகயிலை வீற்றிருக்கும் மானேந்தி முன்னடவாய்

முடிவு

அரிகர புத்தரனார் அமலனார் வாழியதே
படித்தோர்கள் கேட்டோர்கள் பலபேரும் வாழியதே
எடுத்துப் படித்தோர்க ளெல்லோரும் வாழியதே
இன்பமாய்க் கேட்டவர் களெல்லாரும் வாழியதே
அன்பா தரவாய் அனைவோரும் வாழியதே
நல்லோர் பெரியோர்கள் நலமுடன் வாழியதே
இல்லோ ரெளியோர்க ளெல்லோரும் வாழியதே

புதுவூர்ச் சக்கரவர்த்தி யம்மானை எழுதி முடிந்தது
முற்றும்.

பிற்குறிப்பு

குத்தாலலிங்கம் புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை யெழுதினேன் எடுத்தவர் படித்துக் கொண்டு கொடுத்து விடவும்.

குறிப்புரை

நூற்பயன், காப்புப் பாடல், அவையடக்கம் முதலில் கூறப்பட்டு நூல் தொடங்குகின்றது. பின் வாழ்த்துடன் நூல்

முடிகின்றது. புதுவூர் நாட்டுச் சிறப்பு, ஆட்சி முறை, மகளிர் நிலை முதலியன நூலில் கூறப்படுகின்றன. புதுவூர் மன்னனை இரவிகுல மன்னன் ஒருவன் தோற்கடிக்க, புதுவூர் மன்னன் மனைவி மக்களுடன் காட்டிற்குச் செல்கிறான். வழியில் பொருட்களை இழக்கிறான். பின் இவர்கள் ஒரு செட்டியின் ஆதரவை நாட அவன் அரசியை அடைய எண்ணுகிறான். இறுதியில் பல துன்பங்களைக் கடந்து மன்னன் மனைவி மக்களுடன் புதுவூர் நாட்டை ஆட்சி புரிகிறான். இச்சுவடியின் கதைப் பொருள் இவ்வாறு அமைகின்றது. நாட்டுப்புறச் சாயல் அமைந்த கதைப் பாடலாகவும் 'அம்மானை' என்ற அமைப்பிலும் நூல் விளங்குகிறது. இந்நூல் வீரகாவியமாக அமைந்து, இடையே மனிதப் பண்பின் உயர்ந்த அம்சங்களைப் போற்றி, சமூகச் சீர்கேடுகளைக் கேலி செய்வதன் விளக்கமாக அமைந்துள்ளது. நூல் தொடங்குமிடத்து அவையடக்கத்தில் ஆனை காத்த பெருமாள் அடியேன் திருநாமம் (வரி எண்.27) என்ற அகச் சான்றின் வழி இந்நூலின் ஆசிரியர் 'ஆனை காத்த பெருமாள்' என்பதை அறிய முடிகிறது. முதலிலும் இறுதியிலும் இரண்டு சட்ட ஏடுகள் உள்ளன. இச்சுவடி நூல் 1991 இல் நிறுவன ஆய்வேடாக அளிக்கப் பெற்றுள்ளது.

## 459. புரசைக் கங்காதரர் பேரில் வண்ணம்

**அ.526 : 835;ஆ.**80–83 ஏடுகள்; **இ.** 20.5x3.5செ.மீ.; **ஈ.**9–10 வரிகள்; **உ.**நன்று; **ஊ.**கடினம்; **எ.**முழுமை; **ஏ.**அச்சாகவில்லை.

தொடக்கம்

....
தருவே னிருமென்று இளஞ்சிறுவனை மகிழ்ந்தளாவறு சந்தோஷமாக
புசித்ததுட னறுத்துப்பல காயமுமிட்டு வெகு சட்டமுற
வட்டசுவை போசனம் வைத்த பரிவாகி யேயந்த -
சிறு பானை முன்பு - தருங் கிருபையர் பெரும்புகழினர்
பொன்றாத தீதர் - அன்பு வைத்த பேருளமுலாவுபவர்

முடிவு

செங்கையடங் காதவிரு செவ்விளநீர்க் - கொங்கைசுமந்
தெங்கே யொடிந் திடுதோ வுந்தனிடை யென்றோடிச்
சங்கையிலா மற்பிடிதென் றள்ளியினாள் கீழ்மேலா
யங்கே யிருவருக்கு மானந்த மாகியதே (1)

முற்றும்.

குறிப்புரை: புரசைக் கங்காதரரீசர் பேரில் வண்ணம்

புரசையில் எழுந்தருளியுள்ள கங்காதரர் பேரில் எழுந்த துதி.

## 460. புரசைக் கங்காதரர் பேரில் வண்ணக் குழிப்பு

**அ.**526:839; **ஆ.**96–104 ஏடுகள்; **இ.**20.5x3.5செ.மீ.; **ஈ.**5–8 வரிகள்; **உ.**நன்று; ஓரிரு துளைகள்; **ஊ.**கடினம்; **எ.**முழுமை; **ஏ.**அச்சாகாதது.

தொடக்கம்

திருமாலுஞ் சசிவாளிவிண்
மாதர் நாதர் - வேதர்
மாதவர் முனிவர் தெண்டிசை யோருமிலோக
நாகரிக மாகவே சந்தானப் பருதிமல்
அருஞ்சே ரிந்திரையம் மகிழ்வுற்றுப்
போற்றியுயர் கதிநிதர் சற்புவன மாதர்
வெனவுநித மேதாடு புரியலங் காரிநில்

முடிவு

தன்னமை சேர்கங்கா தரநாதர் மால்வரையிற்
கன்னிதனைக் கூடிக் கலந்த சுரோணி தந்தான்
மின்னி னுருவும் மந்தவெனுருவுங் காலுருவு
மின்னதெனச் சொன்னாலு மென்சுகஞ்சொல் லொண்ணாதே

குறிப்புரை: புரசைக் கங்காதர யீஸ்பரர் பேரில் வண்ணக் கொழிப்பு

புரசையில் எழுந்தருளியுள்ள கங்காதர யீஸ்வரரின் புகழைப் போற்றிப் பாடுவதால் ஏற்படும் இன்பக் களிப்பை வெளிப்படுத்தும் சிற்றிலக்கியமாக இது திகழ்கின்றது.

# 461. புல்வயல் குமரேச சதகம்

**அ.** ***124:237;*** **ஆ.** *1–30* ஏடுகள்; **இ.**49x2.5செ.மீ.; **ஈ.**4 வரிகள்; **உ.**நன்று; **ஊ.**தெளிவான அழகிய எழுத்து; **எ.**முழுமை; **ஏ.**அச்சானது, நிறுவன வெளியீடு *1995.*

தொடக்கம்

**காப்பு**

பூமேவு புல்லை பொருந்துகும ரேசர்தம் மேல்
தேமே வியசதகம் செப்பவே – கோமேவி
காக்குஞ் சரவணத்தான் கம்பகும்பத் தைந்துகரங்
காக்குஞ் சரவணத்தான் காப்பு

அவையடக்கம்

மாரிக்கு நிகரென்று பனிசொரிதல் போலவும்
மனைக்கு நிகரென்று சிறுபெண்
மணல்வீடு கட்டுவது போலவும் சந்திரன்முன்
மருவும் மின்மினி போலவும்
பாருக்கு நல்லோர் முன்னே பித்தர்
பலமொழி பகர்ந்திடும் செயல்போலவும்
பச்சைமயில் ஆடுதற் கிணையென்று வான்கோழி
பாரில் ஆடுதல் போலவும்
பூரிக்கும் இனிய காவேரிக்கு நிகரென்று
போது வாய்க்கால் போலவும்
புகழ்சிப்பி முத்துக்கு நிகராய் பளிங்கைப்
பொருந்த வைத்தது போலவும்
வாரிக்கு முன்வாவி பெருகல் போலவும்
இன்சொல் வாணர்முன் உகந்துபுல்லை
வால குமரேசர்மேல் சதகம் புகன்றான்
மனம்பொ ருந்தருள் புரிகவே (1)

முடிவு

வன்ன மயிலேறிவரு வேலாயுதக் கடவுள்
மலைமேலுகந்த முருகன்
வள்ளிக் கொடிக்கினிய வேங்கை மரமாகி னோன்
வானவர்கள் சேனாபதி

கன்னல் மொழிமடியரடி புதல்வன் அரன்மகன்
கங்கை பெற்றருள் புத்திரன்
கணபதி இளையவொரு மெஞ்ஞான தேசிகன்
கடவுளாவினன் குடியினான்
பன்னரிய புல்வயல் வாழ் குமரேசர்மேல்
பரிந்து குருபாததாசன்
பாங்கான தமிழாசிரிய விருத்தத் தினிறை
பாடல் ஒருநூறுநாடி
நன்மைதாகப் படித்தபேர் கேட்டபேர்
நாடோறுங் கற்ற பேர்கள்
ஞானயோகம் பெறுவர் பதவியாவும் பெறுவர்
நன்முத்தியும் பெறுவரே (100)

குறிப்புரை

திரு புல்லை மாநகர் மேவிய குமரேசர் மீது பாடப்பட்ட சதகநூல் ஆதலின் இது குமரேச சதகம் எனும் பெயர் பெற்றது. "மயிலேறி விளையாடு குகனே புல்வயல் நீடு மலைமேவு குமரேசனே" எனும் மகுட அடிகளை உடைய 100 பாடல்களால் ஆனது இந்நூல். அரசர் இயல்பு, வணிகர் இயல்பு, வேளாளர் இயல்பும், திருவாழிடங்கள், உலுத்தரியல்பு, சிறிதும் பயன்படாதவர், சாகாதிருந்துஞ் செத்தவர், பதரெனப்படுவோர், அவர வர்க்குப் பெலமாவன, பேயெனப்படுவோரிவரெனல், சரீரசுகம், நரகில் வீழ்வோர், தாமழியினுங் குணமழியாதவை, பலர்க்கும் பயன்படுவன, இவர்க்கிது துரும்பெனல், விரைந்து நடக்கத் தகுவன இவையெனல், இப்படிப் பட்டவ ரிவரெனல், இவர்க்கிது இல்லையெனல், இவர்க்கிது வினையெனல், இவர்க்கிவர் தெய்வமெனல், ஒன்றை யொன்று பற்றியிருப்பன முதலான 100 தலைப்புகளில் செய்திகள் உள்ளன.

## 462. (புல்வயல் குமரேச சதகம்)

**அ.** **389:632; ஆ.** *31–51* ஏடுகள்; **இ.** 50x2.7செ.மீ.; **ஈ.** 4 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகான தெளிவான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

வந்தவிவ காரத்தி லினியபரி தானங்கள்
வருமென்று நேசரென்றும்
வன்பகைஞ ரென்று மயலோ ரென்று மிக்கதன
வானென்று மேழையென்றும்.
இந்தவகையைக் குறித்ததொருபடி சபர்தமோ
ரெள்ளள வுரைத் திடாமல்
எண்ணமுடனே லிகித புத்தியோடு சாட்சிக்கு
மேற்கச்ச பாசபதமா
முந்தவிரு தலையுஞ் சமன்செய்த கோல்போன்
மொடிந்திழற் றருமமிதுகாண்
முனைவீம னுடல்பாதி மிருகற் தனக்கென்று
மூன்றருமர் சொன்னதலவோ
மைந்தனே வைன்றுமை முலைப்பால் கொடுத்திட
வளர்ந்தருள் குழந்தைவடிவே
மயிலேறி விளையாடு குகனே புல்வய
னீடுமலை மேவுகும ரேசனே (61)

முடிவு

நூற்பயன்

வண்ண மயிலேறி வருவேலா யுதக்கடவுண்
மலைமேலு கந்தமுருகன்
வள்ளிக் கொடிக்கினிய வேங்கை மரமாகினோன்
வானவர்கள் சேனாபதி
கண்ணன் மொழியு மடியாடிப் புதல்வன் என்மகன்
கங்கை பெற்றருள் புத்திரன்
கணபதிக் கிளையவொடு மெஞ்ஞான தேசிகக்
கடவுளாவினன் குடியினான்
பண்ணரிய புல்வயல் வாழ்கும ரேசர்மேல்
பரிந்துகுரு பாத தாசன்
பாங்கான தமிழாசிரிய விருத்தத்தி னிரை
பாட லொரு நூறாடி
நன்னயமதாகப் படித்தபேர் கேட்டபேர்
நாடோறுங் கற்றபேர்கள்
ஞானயோகம் பெறுவர் பதவியாவும் பெறுவர்
நன்முத்தியும் பெறுவரே (100)

குறிப்புரை

**61–100 பாடல்கள் மட்டுமே உள்ளன.** இந்நூலில் நூற்பெயர் இல்லை. இந்நூல் புல்வயல் குமரேச சதகம் ஆகும். இதன் ஆசிரியர் குருபாத தாசர் ஆவார். இதில் நடுவுநிலை, அளவுபடாதவை, நட்புநிலை, காலமறிதல், இடனறிதல், ஆக்கை நில்லாமை, வேட்டகத் திகழ்ச்சி, செல்வ நிலையாமை, வேசை நிந்தை, பிறந்தார் பெருமை, இதற்கிது உறுதி எனல், வறுமையிற் சிறுமை, இன்னவற்கிது யில்லையெனல், இடையூறு உற்றும் பயன் படுமவை, இதனினுமிது நன்றெனல், நிலை யாதவை, நற்புலவர், தீப்புலவர் செயல், பாடலியல்பு, தெய்வச் செயல், விபூதி தரிக்கு முறைமை, விபூதி வாங்கு முறைமை, இவ்வுறுப்பால் பயனிலலெனல், நற் பொருளொடு தீப் பொருள் பிறத்தல், தன்னினத்தால் அழிவு, வீணுக் குழைத்தல், இது சேரினிது பயன்படாதெனல், விடத்தகாதவர், தகாத செயல், நல்லோர் முறை, அடைக் கலங் காத்தல், பெரியோரியல்பு ஆகியவை பேசப்படுகின்றன.

## 463. பெரிய நாயகி அம்மை விருத்தம்

**அ.**560 : 924; **ஆ.**57–60 ஏடுகள்; **இ.**18x3செ.மீ.; **ஈ.**7–8 வரிகள்; **உ.**நன்று; **ஊ.**ஓரளவு; தெளிவு; **எ.**முழுமை; **ஏ.**அச்சாகாதது.

தொடக்கம்

விரிவுறு முருவநாம மதகற்றின் விடையங்கள் விளங்குற விதனான
மருவுறு பொறிபோம் பொறியறக் கரண மாய்ந்துறுங்
கரணமாய்த லினாற்புருடன் முன்னெழுஞ் சுத்தமோரைந்தும்
போமிதாற்சச் சிதானந்தங்
கிரியை யற்றிலங்கு மென்றனள் விருத்தகிரி யமர்பெரிய நாயகியே

முடிவு

எஞ்சுறுமுளத் தோடென்னை யாரென் றென்றிரங்கியே
திரிந்துழல்வேனை
மஞ்சுறழ் கரத்துக் கர்ணனைக் குந்திமகனென உணர்த்துதற் கடுப்ப
வஞ்சலென் றழைத்து நீயதுவாகு மையமின் றெனவேனை யளித்தாள்
கிஞ்சுக வாயா லுஞ்சிட விருத்தகிரி யமர்பெரிய நாயகியே(10)

குறிப்புரை

பெரியநாயகி அம்மையைப் போற்றிப் புகழும் துதிப்பாடல்களால் இந்நூல் இயன்றுள்ளது.

## 464. போதனாச் சிறப்பு நட்சத்திரமாலை

**அ.** *268:488;* **ஆ.** *1–14* ஏடுகள்; **இ.**20.5x3செ.மீ.; **ஈ.**7–8 வரிகள்; **உ.**ஓரளவு நல்லநிலை; சில ஏடுகள் சிதைந்துள்ளன; **ஊ.**ஓரளவு தெளிவு; **எ.**முழுமை; **ஏ.**அச்சாகாதது.

தொடக்கம்

திருவு லாவினையி லிறைவ னேயுரைசெய்
செவ்வி தின்மறை ஆகமம்
செப்பு மெய்ப்பொருள தாமளப் பரியசிற்
சொரூபமடை வுறின்லால்
விரியும் எத்துயரும் உதவு மெம்பவம்
விடாதுசிற்பிரம மடைவொணா
வெய்யனெஞ் சொருமை யின்றியோ ரினதினி
மேய நெஞ்சுலை வி னாசமே
பொருவி லாஅறிஞர் செவ்வி தான்நெறி
புகலுநூல் எவையு மென்றவர்
போத முற்றமத வாத மற்றசிவ
போத முற்றுதவு பண்ணியா
இருள தாம்அசுரர் மாள வுய்யவுல
இறைவு வந்துவரு மாதல்
மீறினமாதவர்கண் மேவும் கோவனக
ரேதி லாறுமுக தேவனே (1)

முடிவு

அளவில் சென்மசிவ புண்ணி யத்தினிறை
யருளின் மெய்க்குரவ னருளினா
லணுகு பக்குவ மதான முயற்சியுய
ரன்ப தாதிகளி னான்மிகு
வளிக றங்குனிகர் சற்றி லாதுழலு
மனமெ ழாமலொடு தன்னுளே
மாயு மையுமுடன் மாயு மிங்கனுடன்
மாயு மைந்தொழிலு மாயுமென்

றுளவு ரைத்தனிறை வெளிய னேயளவி
லொளியனே தெளிநி வேறின
மொளிய தாகுமி... துண்மை யென்னவறி
வுள்ளவ ருதவி யேசகத்
தெளிய னெனைய டியவனெனச் செயுநின்
னிணையிலா வருளை யென்சொல்கே
னீறின் மாதவர்கண் மேவு கோவனக
ரேதி லாறுமுகத் தேவனே (27)

குறிப்புரை

287:510 என்ற எண்ணிட்ட நூல்போன்றதே இது. ஆயின் அதில் இடையில் சில பாடல்கள் இல்லை. இந்நூல் முருகப் பெருமானைப் போற்றி அமைகிறது.

## 465. போதனாச் சிறப்பு நட்சத்திரமாலை

**அ.**287:510; **ஆ.***176–189* ஏடுகள்; *186–188* ஏடுகள் இல்லை; **இ.**23.4x3செ.மீ.; **ஈ.***7–9* வரிகள்; **உ.**ஓரளவு நல்ல நிலை; **ஊ.**ஓரளவு தெளிவு; **எ.**குறை; **ஏ.**அச்சாகாதது.

தொடக்கம், முடிவு 268:488 போன்றது.

குறிப்புரை

*268:488* என்ற எண்ணிட்ட நூல்போன்றதே இது. அதில் 27 பாடல்களும் முழுமையாக உள்ளன. இதில் இடையே 3 ஏடுகள் இன்மையால் பாடல்கள் விடுபடுகின்றன.

தொடக்க முடிவுப் பாடல்கள் இரண்டிலும் ஒன்று போலவே அமைகின்றன. இந்நூலில் 'செவ்விதான மறை ஆகமம்' என்றிருப்பது அந்நூலில் செவ்விதின் மறை ஆகமம் என்றுள்ளது. ஆறுமுகப் பெருமானின் சிறப்புகளைக் கூறிப் போற்றி வாழ்த்துவதாக நூல் அமைகின்றது. நூல் முடிந்தபின் 'போதனாச் சிறப்பு நட்சத்திர மாலை நிறைந்தது முற்றும்' என்றுள்ளது.

## 466. போற்றிப் பஃறொடை

**அ.**1:7; **ஆ.***162–167* ஏடுகள்; **இ.***22*x3.*5*செ.மீ.; **ஈ.***8–9* வரிகள்; **உ.**ஓரப்பகுதி ஏடுகள் உடைந்திருப்பினும் ஏடுகள் நல்ல நிலையிலுள்ளன; **ஊ.**தெளிவு; **எ.**குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பூமன்னு நான்மு கத்தோன் புத்தேளிர் ஆங்கவர்கோன்
மாமன்னு சோதி மணிமார்பன் – நாமன்னும்
வேதம்வே தாந்தம் விளக்கஞ்செய் விந்துவுடன்
நாதம்நா தாந்தம் நடுவேதம் – போதத்தால்
ஆமளவும் தேட அளவிறந்த அப்பாலைச்
சேம ஒளிஎவருந் தேறும்வகை – மாமணிசூழ்
மன்றுள் நிறைந்து பிறவி வழக்கறுக்க
நின்ற நிருத்த நிலை போற்றி

முடிவு

...... எல்லாம் போய்த்
தம்மைத் தெளிந்தாராய்த் தாமே பொருளாகி
..........
முன்கண்ட காலத்தும் நீங்காத முன்றோனை
என்கொண்டு போற்றிசைப்பேன் யான்.

குறிப்புரை

இந்நூல் இரண்டு வரிகளில் அமைந்த **95 கண்ணிகளையும் ஒரு வெண்பாவையும்** கொண்டது. இடையிடையே பாடல்கள் விடுபட்டுள்ளன. ஓர் உயிரின் தோற்றம், அதன் அழிவு, பின் அது சென்றடையும் வீடுபேற்றின் நிலை, நரகத்தின் தன்மை, எனுமிவற்றை விளக்கு முகமாகப் பாடல்கள் அமைந்துள்ளன. மேலும், இறைவன் (சிவன்) எங்கும் நீக்கமற நிறைந்தவன்; எல்லா உயிர்களிடத்தும் இரண்டறக் கலந்து பிரிக்க இயலாதவன் எனுங்கருத்து களையும் சில பாடல்கள் உணர்த்துகின்றன. இந்நூல் மெய்கண்ட சாத்திரம் பதினான்கனுள் ஒன்றாக அமைகிறது. இதனை இயற்றியவர் உமாபதி சிவாசாரியார். இவர்

இந்நூலில் தமது குருவான மறைஞான சம்பந்தரைச் சிவபெருமானின் வடிவமாகவே ஏற்றுக்கொண்டு அவரைப் போற்றிப் பாராட்டியுள்ளார். மேலும் ஆன்மாக்கள், பாசத்தால் கட்டுண்டு போவதற்கு முன் இருந்த நிலையையும், கட்டுண்டு துன்புற்று சுழலும் நிலையையும் குருவருளால் திருவருள் பெற்று உய்வதையும், முதல் நூலான சிவ ஞானபோதமும், அதன் வழி நூலான சிவஞான சித்தியாரும், புடைநூலான சிவப்பிரகாசமும் எவ்வாறு விளக்குகின்றன என்பதை விவரித்துக் காட்டியுள்ளார்.

இவரது இந்நூல் இறைவனின் அருள், உலகத்தின் தோற்றம், தத்துவங்கள், மோட்சம் ஆகியவற்றை விரிவாகப் பேசுகின்றது.

இந்நூலுக்குப் பழைய உரை ஒன்று இருந்தும் அது தற்போது பயன்பாட்டில் இல்லை. *130:253* என்ற எண்ணில் அமைந்த நூல் இந்நூல் போன்றதே.

திரு ஆவடுதுறை ஆதீனத்தில் பயின்று வரும் பண்டார சாத்திர நூல்களுள் சித்தாந்த பஃறொடை, உபதேசப் பஃறொடை, பஞ்சாக்கரப் பஃறொடை என்ற மூன்று நூல்கள் பஃறொடை இலக்கிய வகையைச் சார்ந்தவை.

## 467. போற்றிப் பஃறொடை

**அ.** 130:253; **ஆ.** *109–112* ஏடுகள்; **இ.** 20 x 3 செ.மீ.; **ஈ.** *9–10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை.

தொடக்கம் 1:7 போன்றது.

முடிவு

போற்றி திருத்தில்லை போற்றி சிவபோகம்
போற்றியவன் மெய்ஞ்ஞானப் புண்ணியநூல்–போற்றி எங்கள்
வேம்பந்த வாழ்க்கைவிட வேறாய்வந் துண்ணின்ற
சம்பந்த மாமுனிபொற் றாள்

போற்றிப் பஃறொடை முற்றும்.

குறிப்புரை

பாடல்களுக்குப் பாடல்எண்கள் தரப்படவில்லை. ஏட்டு எண்கள் தொடர்ச்சியாக இருப்பதாலும், முற்றும் என்று இருப்பதாலும் நூல் முழுமையாகவுள்ளது என்பது தெரிகிறது. 1:7 என்ற எண்ணில் அமைந்த நூல் இந்நூல் போன்றதே.

## 468. மயிலாப்பூர் கற்பகவல்லியம்மன் பேரில் பதம்

**அ.** **526:829;** **ஆ.** *59–60* ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

பரமேஸ்பரி யோகேஸ்பரி கெவுரிபரி புரவொலி
மிகுபத மலர்கெதி நல்லவரமே யருள்மயேஸ்பரி
திராமிவளர் குருமயிலா புரிமகுவு மனோகரி
செகநி அற்புத மெல்லி கிருபாகரி கற்பகவல்லி

முடிவு

கற்பக வல்லியே மெய்ப் பொருள் செல்வியே
காலாயுதவிற் பனசுந்தரி சூலாயுத விற்பமைந்திரி
கியலை யானாம் மயிலை மேவு மாதரி
கயில ராசனருள் குமாரி யாதரி
பரமேஸ்பரி யோகேஸ்பரி கெவுரிபரி புரவொலி
மிகுபத மலர்கெதி நல்லவரமே யருள்மயேஸ்பரி

குறிப்புரை

மயிலாப்பூரில் எழுந்தருளியுள்ள சிவபெருமானையும், கற்பக வல்லியம்மனையும் போற்றித் துதிக்கும் இந்நூல் அவளது அருள் வேண்டுமுகமாக அமைகிறது.

## 469. மறைக்காட்டு அம்மானை

**அ.** **519:808;** **ஆ.** *1–3* ஏடுகள்; **இ.** 15.5 x 4 செ.மீ.; **ஈ.** *11–12* வரிகள்; **உ.** நன்று; ஓரிரு துளைகள் உள்ளன; **ஊ.** சற்றுக் கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

யெட்டியிலே கட்டிமாம் பழமுண் டாமோ
யிலவிலே யினியபலாச் சுளையுண் டாமோ
நெட்டியிலே நற்கருப்பஞ் சாறுண் டாமோ
நெருப்பிலே குளுந்த பன்னீர் சிலமுண் டாமோ
கொட்டியிலே செங்கழுநீர்ப் பூவுண் டாமோ
கூத்தியா ரிடந்தனிலே குணமுண் டாமோ
மட்டியெனும் பரத்தையரை விட்டு நீங்கு
மறைக்காட்டு அம்மனை வணங்கு வீரே (1)

முடிவு

பெண்டாட்டி பகையானால் தகப்ப னாரும்
பெத்தவளும் வாய்திறந்து பேச மாட்டார்
கொண்டாட்ட முள்ளதம்பி தமைய னாரும்
கோவிப்பார் அண்ணியரும் கூடச் சொல்லுவார்
திண்டாட்ட மானஉறவு முறையா ரெல்லாம்
சீயென்பார் பேயென்பார் திருட னென்பார்
வண்டாட்ட மானபரத்தை யரைவிட்டு நீங்கு
மறைக்காட்டு அம்மனை வணங்கு வீரே (9)

குறிப்புரை

ஒன்று முதல் ஒன்பது பாடல்கள் உள்ளன. பரத்தையரை நாடிச் செல்பவனுக்கு ஏற்படக் கூடிய துன்பங்கள் அவனை எவ்வாறெல்லாம் பல வகையிலும் வருத்தும் என்பது கூறப்படுகின்றது. மேலும் பரத்தையரை விட்டு நீங்கி **மறைக் காட்டு அம்மனை** வழிபட வேண்டும் என்பதும் வற்புறுத்தப் படுகின்றது.

## 470. மறைக்குள விநாயகர் பேரில் கலித்துறை

**அ. 526:846; ஆ.** *132–134* ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *7–8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

ஆறாமதி புனைவே ணியனார் பெத்த வைங்கரனே
தேறாம னத்தரு னைத்தொழு தாலுடன் றேறிநல்ல
பேறாமெஞ் ஞானம் பெறுவார் புதுவைப்பெரு குஞ்செல்வமே
மாறாத சித்தி தருவாய் மன்றருள் மாதங்கமே (1)

முடிவு

திருவே குருபரனே பரமா னந்தத் தெள்ள முர்தே
யருவே புதுவைக் கதிபதி யேசுகங் கார முன்னை
பெருவே தனைய கத்திப் பலனா ளும்புரந் தருள்வாய்
மருவே தருமலர்த் தாளாய் மறைகுள மாதங்கமே (11)

குறிப்புரை

*விநாயகப் பெருமானைப் போற்றி, வணங்கித் துதிக்கும் 11 பாடல்களை உடைய இந்நூல் வேதனை அகற்றி, சித்தி தர வேண்டுமென்கின்றது.*

## 471. மனோன்மணி அகவல்

**அ.** 225:435; **ஆ.** *6 ஏடுகள்;* **இ.** 32 x 3 *செ.மீ.;* **ஈ.** *6 வரிகள்;* **உ.** *ஓரளவு நல்ல நிலை;* **ஊ.** *கடினம்;* **எ.** *முழுமை;* **ஏ.** *அச்சாகவில்லை.*

தொடக்கம்

ஓம்நமோ பகவதி உமையே பராபரி
ஆம்ஊம் பரஞ்சுட ராகுமென் நிறஞ்சுடர்
வாமமாய் விளங்கும் வானநிஷ் களங்கி
சோமசுந் தரிநீ சூரியப்பிர காசி
நாதபிந் தான நான்மணிச் சுடரே
வேதமாய் விளங்கும் விளக்கொளி யாளே!
புதல்வனை யீன்ற பொற்பரா சத்தி!....
ஓங்காளி காளி ஓடிவா வம்மா
ஓம்மலையாள பகவதி ஓடிவா வம்மா

முடிவு

திருவடி போற்றித் திருக்கதை யகவல்
வெண்பாகை யூரான் வெங்கிடா சலனும்
அன்பா யாடி யாருயிர் விளங்க
வசீகரந் தந்து வசியங்க ளாடப்
பசிதீர அன்னம் பாலரி சிவையும்
ஆடையா பரணம் அலங்கிருத ஒளியும்
வாடையா னந்தி வளந்தர வம்மா

போற்றினேன் தாயே பொற்பதம் வணங்கி
போற்றினே னடிமை புகழும் பராபரி
சரணார விந்தம் சாட்டாங்க மாக
சாற்றினே னம்மா சரணம் நமோஸ்து....

முற்றும்.

பிற்குறிப்பு

சின்னகாவணம் முத்துசாமி – எழுதி நிறைவேறியது.

குறிப்புரை

தேவி மனோன்மணியின் மீது பாடிய தோத்திரமாக அமைந்த இந்நூல் மனோன்மணி அகவல் என்னும் பெயர் பெற்றுள்ளது. இத்தேவிக்குள்ள பல்வேறு பெயர்கள், அவளது சிறப்பு, ஆற்றல், அருள் ஆகியவற்றை எடுத்தியம்பும் துதிப்பாடல்களைக் கொண்டு நூல் அமைகிறது.

## 472. மீனாட்சியம்மன் அகவல்

**அ.** 526:826; **ஆ.** 38–45 ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** 7–9 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

சீராரும் பூங்கமலத் தெள்ளமுதே சேயிழையே
காராரு மேனி கனங்குழையே – யாராயும்
வேதமுத லாய்நின்ற மெய்ப்பொருளே – மின்னொளியே
ஆதி பராபரையே யம்பிகையே – சோதி
அண்டரெல்லாம் போத்தும் பொருளே ஆரணங்கே ஆயிழையே
எண்டிசைக்குத் தாயான யீசுபரியே

முடிவு

பேசு கின்ற உண்மை பெறுவர்க்கும்
நேசமுடன் தந்தென்னை வாழக் கொண்டு
சற்குரு வாய்யென் மனத்தில் வந்திருந்து
புத்திமதி தருவாய் சந்ததமு நீயே

துணையாய் நின்று ரட்சியும்
கனங்குழல் தாயே நினதருளே சரணம்

முற்றும்

குறிப்புரை

மீனாட்சியம்மனின் பல்வேறு நாமங்களான வேதமுதலாய் நின்ற மெய்ப்பொருள், ஆதிபராபரை, அம்பிகை, அண்டரெல்லாம் போற்றும் பொருள், எட்டுத் திசைக்கும் தாயானவள், ஈசுவரி, அடியவரை ஈடேற்றுப வள், முடிவிலா ஓங்காரத்துட் பொருள், பண்ணிசைந்த பாட்டின் பழம்பொருள், நாற்பத்து முக்கோண நாயகி, அஞ்செழுத்தும், எட்டெழுத்தும் ஆனவள், ஐம்பத்தோரு அட்சரமானவள், பஞ்சவகையாய், பஞ்ச தேவதையாய், ஆராதாரப் பொருளாய் ஆனவள், கருணைத் திருவடியாய்ப் புண்ணியமாய் நின்றருளும் பூவை, நாதாந்தத்துட் பொருள், பரிபூரணமாய் பஞ்சவர்ணமாய் நின்றவள், சிவயோகப் பாட்டின் பழம் பொருள், அஞ்ஞானத்தை அகற்றி மெய் ஞானத்தைத் தருபவள், பாசாங்கு சத்தி, சித்தி கொடுக்கும் சிவானந்தி, ஆதிமுதலெங்கெங்கும் தானாயிருந்தவள் எனக்கூறி, அவளைப் பலவாறு போற்றித் துதிக்கின்றது. மேலும் இறைவியே நீ என் மனத்தில் குடிகொண்டு புத்திமதி தந்து என்னை அருள்பாலிக்க வேண்டும் என்றும் நூலாசிரியர் இறைஞ்சுகிறார்.

## 473. மும்மணிக்கோவை

**அ.** **76:157;** **ஆ.** *18–63* ஏடுகள்; **இ.** 17 x 2.5 செ.மீ.; **ஈ.** *8–10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

தெய்வத் தாமரைச் செவ்வியின் மலர்ந்து
வாடா பத்துமலர்த் தோடெனச் சிவந்து
சிலம்புங் கழலு மலம்பப் புனைந்து
கூற்றி னாற்றான் மாற்றிப் போற்றாது

வலம்புரி நெடுமாலென மாகி நிலம்புக
காற்றலின் கழத் தோற்றாது நிமிர்ந்து
பத்தி யடிய வாபச் சிலையிடினு
முத்தி கொடுத்து முன்னின் றருளித்
திருகழந் துளதொரு மாற்றிருவடி யகஞ்சேர்ந்து
மறுவில் கற்பகத் துறுதளிர் வாங்கி
நெய்யிற் றோய்த்த செவ்வித் தாகி
நூபுரங் கிடப்பினும் நொந்து தேவர்
மடவரள் மகளிர் வணங்கி வாழ்த்த
சின்னப் பன்மலர் தீண்டிடச் சிவந்து

முடிவு

கரத்தினில் மாலவன் கண்கொண்டு நின்கழல் காட்டநல்ல
வரத்தினை யீயுமரு தவப்பர் மதியொன்று மில்லேன்
சிரத்தினு மாயென்றள் சிந்தை யதாகிவெண் காடனென்னுந்
தரத்தது மாயது நின்னடியாந் தெய்வத் தாமரையே

குறிப்புரை : பட்டனத்தார் அருளிச் செய்த மும்மணிக் கோவை

இந்நூல் திருமாலைத் துதித்துப் போற்றம் பொருளமைதி கொண்டது. ஆசிரியம், வெண்பா, கலித்துறை என்னும் மூவேறு யாப்பு வகைகளால் முப்பது பாடல்களால் பாடப் பெற்றுள்ளது.

## 474. முருகர் சிற்றிலக்கியம்

**அ.** 298:523; **ஆ.** 6–54 ஏடுகள்; **இ.** 32 x 3 செ.மீ.; **ஈ.** 6–7 வரிகள்; **உ.** ஏடுகளின் ஓரப் பகுதிகளும், இறுதி ஏடும் சிதைந்துள்ளன, இடையிடையே சில ஏடுகள் இல்லை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை

தொடக்கம்

மலரடா விற்கை வலிசெய்.. நிற்கு மதனாலும்
மதிகெடா வுற்று மலைபடா.. மதியொடா நிற்கு
மதனாலும்
இருகணா முற்று முதிய சாமத்தி லினியெழா நிற்க...
லிவாலும்

இருளுமேற்ற மயல்கொளா நிற்கு மிவளை வாழ்விக்க
வரவேணும்
கரிக.... வெற்பி லரிய வெடிச்சி கல்விகூர் சித்திர மணி
மார்பா
கனக மாணிக்க வடிவனே மிக்க கதிர்கா மத்தினுறை
வோனே
முருகனே பத்தாருகனே முத்தி முதல்வனே பச்சை
மயில்மீது
முடிகி மேலிட்ட கொடிய சூர்கெட்டு முறிய வேல்தொட்ட
பெருமாளே (9)

முடிவு

மருவு மெனதாவி சற்று மழியாதே
மகுடமணி வாரிதிக்குள் விகடமது லாவு சித்திர
மயிலின மிசை யேறி நித்தம் வரவேணும்
கருணை யகலா விழிச்சி களபமகலா முலைச்சி
கல்வி தொலையா மறத்தி மணவாளர்
கடுவிட வளனிரைத்த சடல்முடி மீதுயர்த்த
கடிய மலள தரித்த கழல்வீரர்
அருண்மணியா லமைத்த தருணமணி சூடும்வெற்றி
யருணைவரு கோபுரத்தி லுறை வோனே
யவுணர்குல வேரை வெட்டிய பயமென ஓலமிட்ட
யமரர் சிறைமீள விட்ட பெருமாளே (69)

குறிப்புரை

முருகனது பெருமைகளும், சாதனைகளும் இந்நூற்கண் கணப்படுகின்றன. 9 முதல் 69 பாடல்கள் உள்ளன. கதிர் காம முருகன் பேரில் அமைந்த துதி போலும் உள்ளது.

## 475. மூவரையன் வண்ணக் குழிப்பு

**அ.** 526:841; **ஆ.** *114–118* ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *7–8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

வெளிவரு பச்சைமாலை வாடினதுரைத் திசைந்த
புதுவயல் வைற்றகோ தைநாயகி கருத்துகந்து
விழியுகந்து தந்த தேற லருளுகந்து

விஞ்சொல் வாணி தமிழுகந்து பாண்டசோரதை
முலையுகந்த தயவினான்
யெவரை நடத்தி னாலு மாதரவுபெற் றானங்கி
அவரவர் மட்டிலே தராதாம்

முடிவு

....
எழுந்த நெடிய விரிந்த காலை யேறி
அணையிற் பிறந்து நறுமணங் கமந்து
வாசம் வழியெங்கும் மண்டி
விசந்தனை யமுந்திக் கொண்டு மீண்ட
கலவி யின்ப மினிது காண்
விதித்தோன் நிலனும் போகம் வாய்க்குமே (1)

குறிப்புரை : மூவரையன் வண்ணக் கொழிப்பு

மூவரையனின் தோற்றப் பொலிவு, அருட்செயல்கள், அவனை வணங்குவதால் கிட்டும் பேரின்பம், அவனைப் பாடுவதால் ஏற்படும் இன்பக் கிளர்ச்சி முதலியன சுட்டப் பெறுகின்றன.

## 476.வடமலைநாதன் பேரில் சரணப் பத்து

**அ.** **526:821;** **ஆ.** 7–8 ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** 7–9 வரிகள், **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகாதது.

தொடக்கம்

தஞ்சக் கருணைக் கடலே சரணம்
சதுர்வே தத்தின் வடிவே சரணம்
கஞ்சத் திருநா யகனே சரணம்
கலியுக மெய்யின் கண்ணே சரணம்
மஞ்சக் கரநா ரணனே சரணம்
அரிகே சவஅச் சுதனே சரணம்
வஞ்சப் பிறவி யறுப்பாய் சரணம்
வடமலை யானே சரணம் சரணம் (1)

முடிவு

**தூது வந்தவற்குத் துணைவா சரணம்**
**துங்கக் கெருடக் கொடியா சரணம்**
**மாது சீதைக்கண் வாசா சரணம்**
**மண்டல மோரடி நின்றாய் சரணம்**
**தாது செய்யாத அருளே சரணம்**
**தையலர் கையா சரணம் சரணம்**
**வாது செய்ததக்கரை வதைத்தாய் சரணம்**
**வடமலை யானே சரணம் சரணம்** (6)

குறிப்புரை

பத்துப் பாடல்களாலான இந்நூலில் **ஆறு பாடல்களே** உள்ளன. பாடல்கள் அனைத்தும் 'வடமலை யானே சரணம், சரணம்' என்ற அடியைக் கொண்டு முடிகின்றன. வடமலை நாதனின் அருட் செயல் களை, பெருமைகளை இயம்புவதாக நூல் அமைகின்றது. இச் சுவடிக் கட்டில் ஒன்று முதல் 153 ஏடுகள் உள்ளன. இடையிடையே சில ஏடுகள் இல்லை. ஏட்டெண்கள் வலதுபக்கம் இடம் பெற்றுள்ளன. இதில் நாராயணப் பத்து, திருக்காமி யீஸ்வரர் பேரில் லிங்கப் பத்து, பெண்ருது வானால் பார்க்கிறது, காஞ்சிபுரம் காமாட்சி யம்மன் பேரில் பதம், செண்டலங்கார வண்ணம், தியாகராயர் வண்ணக் கொழிப்பு, வடிவுடையம்மன் பேரில் கலித்துறை முதலான 29 சிறு நூல்கள் உள்ளன. அனைத்து நூல்களும் தனித்தனியே அட்டவணை செய்யப்பட்டுள்ளன. அனைத்திற்கும் தொடர் எண் முறையே பின்பற்றப்பட்டுள்ளது. இக்கட்டில் 4,5,6 ஆகிய ஏடுகள் இல்லை. முதல் இரண்டு ஏடுகளில் ஒரு சிறு நூல் முழுமையாக இடம் பெற்றிருக்கிறது. ஆயின் முதல் ஏடு பாதியாக முறிந்துள்ளது. 2 ஆவது ஏட்டில் 4 ஆவது பாடல் பாதியும், 5,6 பாடல்கள் முழுமையாகவும் உள்ளன. 3 ஆவது ஏட்டில் 'வெண்பா' என்ற தலைப்பில் மூன்று வெண்பாக்கள் முழுமையாக இடம் பெற்றுள்ளன. இம் முதல் மூன்று ஏடுகள் தனியாக அட்டவணை செய்யப்படவில்லை. 151–ஆம் ஏட்டுக்குப்பின் இரு ஏடுகளில் பக்க எண் இடது ஓரம் இடம் பெறுகின்றது.

## 447. வடிவுடையம்மன் பேரில் கலித்துறை

**அ.** 526:833; **ஆ.** *73–75* ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** முழுமை; **ஏ.** *அச்சாகாதது.*

தொடக்கம்

நதிபதி யானதியா கர்தன் பாக நயந்தெவர்க்கு
மதிபதி யாயன்னை தந்தையு மாயெண் ணானகரமுங்
கதிபதி தற்குங் களித்தருள் பங்கயக் கன்னிபுண்ணிய
அதிபதி யோர்புகழ்ந் தேத்து வொற்றி வடிவுடையே (1)

முடிவு

பத்தியி னாலிக் கலித்துறை பத்தும் படித்தவர்கள்
நித்தி சம்பத் துடையவ ராகி நினைத்த தெல்லாஞ்
சித்தியுண் டாக கிருபை செய்வாயிச் செகமகட்கு
வத்திர மாக விளங்கிய வொற்றி வடிவுடையே (11)

*முற்றும்*

குறிப்புரை

வடிவுடை யம்மனைப் புகழ்ந்து, அவளது அருளை வேண்டு வதாய் அமையும் இந்நூலில் *11* கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் உள்ளன. *11* ஆம் பாடல் நூற்பயன் கூறுகின்றது. நூல் முடிந்தபின் வாழ்த்துப் பாடல் ஒன்று இடம்பெறுகின்றது.

## 478. வடிவுடையம்மன் பேரில் கலித்துறை

**அ.** 526:844; **ஆ.** *128–129* ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** *அச்சாகாதது.*

தொடக்கம்

வடிவே யுனது மலர்ப்பதந் தன்னை வணங்கறியேன்
வடிவே யுண்டு மணிமக மாயிசுந்தரி வம்பிகையே
வடிவே யரியிட மாயன் சோதரி வானகமே
வடிவே திருவொற்றி யூர்தனில் மேவும் வடிவுடையே (1)

முடிவு

சோலையுங் கமுகும் பாலையுங் கொங்கும் சூழ்ந்த மதில்
சாலையும் வயலு மாலையும் ஆடற் சத்திரங்கள்
வெளியுஞ் சூழ்ந்து விண்ணவர் போற்றும் விந்தையரே
மாலையுங் காலையும் சூழ்ந்திரு வொற்றி வடிவுடையே (11)

முற்றும்

குறிப்புரை

வடிவுடை யம்மனின் பல்வேறு பெயர்கள், அவள் எழுந்தருளி யுள்ள திருவொற்றியூரின் வளம், பெருமை, அவளது திருமேனிப் பொலிவு முதலியன **11 பாடல்களில்** சுட்டப் பெறுகின்றன.

## 479. (ை)வயிராக்கிய சதகம்

**அ.** **161:344;** **ஆ.** *1–18* ஏடுகள்; **இ.** 36 x 3செ.மீ.; **ஈ.** *6–7* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; ஏட்டின் வலப்பக்கத்து ஓரப்பகுதிகள் சிதைந்துள்ளன; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

வாழி நெஞ்சமே சென்றிடேல் நின்றிதோர்
    வார்த்தை ஏற்குரை செய்வாய்
கீழி யாமியற் றுயர்தவத் திவ்வுடற்
    கிடைத்த தன்றோ மற்றீ
தூழி காலமிங் கிருக்குமோ நீயுமோர்ந்
    துணை எனினுள போழ்தே
சூழு மேழ்பவந் துடைத்தல் செய்யாயீதென்றெழு
    தான்றுணைத் தாளே

முடிவு

எனக்கினி யாண்டிட வேண்டுமெம் மீச னேமற்
றுனக்கே சரணஞ் சரண மதனொடு மென்றான்
மனக்கோ தனைத்தும் மிகுந்தோங் கறிவாகி யாங்கே
பினைக்காண் பலன்காட்சியு மற்றவப் பேத வாழ்வே
(100)

சாந்தலிங்க சுவாமியார் திருவடிகளே துணை
வயிராக்கிய சதகம் முற்றும்.

## குறிப்புரை

**1–100 பாடல்கள் உள்ளன.** 96 பிரபந்த வகையுள் சதகம் என்பதும் ஒன்று. இந்நூல் அறுவகைப் பிறப்பு, நீதி கூறல், துதித்தல், இறைவனைத் தொழும் முறை, கடைப் பிடிக்க வேண்டிய நெறிமுறை முதலான பல்வகைச் செய்திகளை உள்ளடக்கியது.

பிராமணர் அல்லாத வேதாந்த அறிஞர்கள் வேதங்களையும் அதன் அங்கங்களையும் பயின்று அதன் பிழிவாக உள்ள வேதாந்தக் கருத்துகளைத் தமிழ் மொழியில் செய்யுள் நடையில் நூலாக இயற்றினர். மேலும் பல வடமொழி, கன்னட வேதாந்த நூல்களையும் மொழி பெயர்த்தனர். அதனையொட்டி வேதாந்த மடாலயங் களும் தோன்றலாயின. இவ்வகையில் முதலில் தனிச்சிறப்புடன் இம்மடத்தில் 14 வேதாந்த சாத்திரங்கள் பயிலப்பட்டு வந்தன. அதையொட்டி, தமிழகத்தின் பிற இடங்களில் இருந்த வேதாந்த மடாலயங்களிலும் இந்நூல்களே போதிக்கப் படலாயிற்று.

இப்பதினான்கு வேதாந்த சாத்திரங்களுள் ஒன்று வைராக்கிய சதகம் என்ற நூல். பிற 13 நூல்களாவன: 1. நாநா ஜீவாதக் கட்டளை, 2. கீதாசாரத் தாலாட்டு, 3. சசிவண்ண போதம், 4. மகாராஜா துறவு, 5. வைராக்கிய தீபம், 6. இலட்சணா விருத்தி, 7. வேதாந்த சூடாமணி, 8. கைவல்ய நவனீதம், 9. விவேக சூடாமணி, 10. அஞ்ஞவதைப் பரணி, 11. பஞ்சதசீ, 12. கீதைத் திரயம், 13. ஞானவாசிட்டம்.

இதிலுள்ள கீதைத்திரயம் என்பது மூன்று நூல்களின் தொகுப்பு. எனவே இந்த நூல்களைப் பதினாறு என்று சொல்லும் மரபும் உண்டு.

இதனை இயற்றியவர் சாந்தலிங்க சுவாமிகள். இவர் 'மஹாராஜா துறவு' என்ற நூலை இயற்றிய குமாரதேவரின் குரு ஆவார். இவர் ஏறத்தாழ முன்னூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு வீரசைவ குலத்தில் தொண்டை நாட்டில் அவதரித்தவர். சிவப்பிரகாசரிடம் ஞான உபதேசம் பெற்றவர்.

இவர் கோவைப் பேரூரிலுள்ள மடத்தில் இறைப்பணி புரிந்தவர். இவர் கொலை மறுத்தல், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் ஆகிய நூல்களையும் எழுதியுள்ளார்.

பேரூர் மடாலயத்தில் இந்நாளில் சாந்தலிங்க ராமசாமி அடிகளார் மடாதிபதியாகவும், மருதாசல அடிகளார் இளவரசு பட்டத்திலும் அமர்ந்து அன்பர்களுக்கு அருள் பாலித்து வருகின்றனர்.

இந்நூலின் முற்பகுதி சாத்திர வடிவாகவும், பிற்பகுதி தோத்திர வடிவாகவும் உள்ளது. பின்பகுதியான 50 பாடல்களும் தத்துவக் கருத்துகளுடன் தில்லை நடராஜப் பெருமானைப் போற்றி வணங்குவதாக அமைந்துள்ளது. இவருடைய உபாசனா மூர்த்தம் நடராசப் பெருமானாகும்.

## 480. வராகி அந்தாதி

**அ. 256:472; ஆ.** *1–52 ஏடுகள்;* **இ.** 20 x 3 *செ.மீ.;* **ஈ.** *4 வரிகள்;* **உ.** *நன்று;* **ஊ.** *தெளிவு;* **எ.** *முழுமை;* **ஏ.** *அச்சாகவில்லை.*

தொடக்கம்

தங்கத் திருபுரை வராகியந் தாதியும் தான்விளங்க
அங்கத் திருந்து அரியுடன் பிரணவம் அடிபணிந்தேன்
உங்கத் திரிபுரை புவனையும் பாலையும் ஓங்கிவர
மங்கத்து நின்றுள மயிலைப்பா டினேன்வருவ கேளீரே.

தேவி சகாயம்

அணிகுழல் நீலமதிக்கு நெத்தி வச்சிரம் அழகுகண்கள்
ஒளிபெறுகு தென்கோமள மெனதுமுழி உயர்ந்த பச்சை
பளிபளி பளிரென திருமுத்து வாளி பவளஓசை
தணிமுலை நாயகி திருமேனி யெங்கும் தங்குவளே (1)

முடிவு

மங்களம் வாழியே மால்தங்கை திருபுரை மலர்கொடிக்கும்
மங்களம் வாழியே வாலைபுவ னைக்கும் வன் பொருளகத்தும்
மங்களம் வாழியே வாலைப் பிரணவம் வாழ்வளிக்க
மங்களம் வாழியே வையக மனிதரும் வாழ்வுமே (104)

குறிப்புரை

**1–104 பாடல்கள் உள்ளன.** மேலும் ஐந்து காப்புப் பாடல்கள் உள்ளன. வராகி யம்மனின் புகழைப் பாடுவதாய் இந்நூல் அமைந்துள்ளது. அம்மனின் அழகு, கருணை, ஆற்றல் ஆகியன நூற்கண் இடம் பெறுகின்றன. மேலும் பன்றியின் தலையும் பெண்ணின் உடலும் கொண்டு விளங்கும் வடிவினள் வராகி, சக்தி வழிபாட்டின் ஒரு கூறாகிய வராகி வழிபாட்டின் சிறப்புகளையும், மந்திரப் பெருமைகளையும், சப்த மாதர் செய்திகள், அட்டகர்மம், அட்டசித்தி, பதினாலுலகம் போன்ற ஆன்மீகச் செயற்பாடுகள் பற்றியும் விளக்கி நிற்கிறது. வராகி வழிபாட்டை நுண்மையாக விளக்கும் இந்நூல், 1995–இல் நிறுவன ஆய்வேடாக அளிக்கப் பெற்றுள்ளது.

## 481. வராகி மாலை

**அ.** 460:707; **ஆ.** *1–51* ஏடுகள்; **இ.** 20 x 2.5 செ.மீ.; **ஈ.** 4 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவில்லாத எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

வெண்பா சங்காழி வாள்கடகந் தண்டுலக்கை
வெண்கலப்பை மங்காத பைய வரதமுடன் யிங்கால்
நாலுரெண்டு கைபடைத்த நாயகியாம் வராகி
காலிரெண்டு முண்டெனக்குக் காப்பு.

யிருக்குழை கோமளந்தாள் பரமார்க மிரண்டுகண்கள்
குருமணி நீலவகை கோமேதக நகங்கூர் வயிரந்
திருநகை முத்தங் கனிவாய் பவளஞ் சிறந்தவல்லி
மரகத நாமந் திருமேனியும் பச்சை மாணிக்கமே (1)

முடிவு

வன்பர் பிழையும் வருங்கையப் பிழைகளும்
வரிப்பிழையும்
துன்பப் பிழையு மெல்லாப் பிழையும் துரத்திவிடறா
மன்பர் பிழையும் பொறுப்பாள வராகி மனங்களிலே
அன்பர் கிரங்கியருள் புரிவாயே உன்அடைக்
கலமே (101)

குறிப்புரை

முதல் இரு ஏடுகளில் மூன்று காப்புப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இவ்வேடுகளில் வராகி மாலை காப்பு, சர்வ பீடை, மாரணம், வசீகரம் என்னும் தலைப்புகள் உள்ளன. இதனைத் தொடர்ந்து முதலாவது ஏட்டில் நூல் தொடங்குகிறது. 101 பாடல்கள் கட்டளைக் கலித்துறையில் உள்ளன. வராகி வசீகரம், சர்வ சத்துரு மாரணம், வராகி மோகன மாரணம், மிருக மாரணம், பிசாசு மாரணம், மாரண ஞானம், ஆக்குராசனம், நினைத்தது குடுக்க, சத்துரு பணிய முதலிய தலைப்புகளில் நூல் செய்தி இடம் பெறுகின்றது. வராகியைப் பற்றிய செய்திகள் உட்பொருள் நிலையில் அதிகமாகக் காணப்படுகின்றன. வராகி 40 பெயர்களில் போற்றப் படுகிறாள். மந்திரச் சொற்கள், அட்டகர்மம் பற்றிய விளக்கங்கள் இடம்பெறுகின்றன. பராசக்தியின் பல்வேறு வடிவங்களுள் ஏழு வடிவங்கள் சிறப்பானவை. அவற்றுள் ஒன்று வராகி வடிவம். சத்த மாதருள் ஒருத்தியான வராகி வழிபாடு பற்றியும், அவளது வடிவம், குணம் பற்றியும், அவளை வழிபடும் முறை பற்றியும் கூறப்படுகிறது. நூலின் வலது பக்கத்தில் ஏட்டெண்கள் இடம் பெற்றுள்ளன. இச் சுவடிநூல் 1995–இல் நிறுவன ஆய்வேடாக அளிக்கப் பெற்றுள்ளது.

## 482. வினா வெண்பா

**அ.** 1:10; **ஆ.** *201–203* ஏடுகள்; **இ.** 22 x 3.5செ.மீ.; **ஈ.** *8–9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

நீடும் ஒளியும் நிறையிருளும் ஓரிடத்துக்
கூடல் அரிது கொடுவினையேன் – பாடிதன்முன்
ஒன்றவார் சோலை உயர்மருதச் சம்பந்தா
நின்றவா றெவ்வாறு நீ (1)

முடிவு

அருளால் உணர்வார்க் ககலாத செம்மைப்
பொருளாகி நிற்கும் பொருந்தித் - தெருளா
வினாவெண்பா உண்மை வினவாரேல் ஊமன்
கனாவின்பால் எய்துவிக்கும் காண் (13)

குறிப்புரை

***1–13* வெண்பாக்கள் உள்ளன.** இறுதிப் பாடலைத் தவிர பிறபாடல்கள் 'சம்பந்தமாமுனி' என்று விளித்துப் பாடப் பட்டுள்ளது. சிவத்தின் பெருமையை அறிய, இறைவனையே அழைத்து அவரிடம் வினாக்களைத் தொடுத்தும் அதன்மூலம் சிவச்சிறப்பை உணர்த்தியும் பாடல்கள் அமைந்துள்ளன. மெய்கண்ட சாத்திரம் பதினான்கனுள் இந்நூலும் ஒன்று. இதனை இயற்றியவர் உமாபதி சிவாசாரியார்.

சைவ சிந்தாந்தத்திலுள்ள சிக்கலான பகுதிகளும் முரண்பாடுகளும் கேள்விகளாகக் கேட்கப்பட்டு அதற்குரிய விடைகளும் விளக்கமாகத் தரப்பட்டுள்ளன. இதற்குப் பாசத்தை வினாவி அதை அறியக் கூறிய வெண்பா நூல் என்று பெயர்.

இதற்கு, நமசிவாய தம்பிரான் ஒன்று உண்டு. அதனை விளக்கி கா. சுப்பிரமணியப் பிள்ளை உ.தே.ஆ. சீனிவாசா சாரியார் ஆகியோர் உரை எழுதி உள்ளனர். ஜே.எம். நல்லுசாமிப்பிள்ளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். *130:252; 138:291; 151:331; 167:358* என்ற எண்களில் அமைந்த நூல்கள் இது போன்றவையே.

## 483. வினா வெண்பா

**அ.** 13:29; **ஆ.** *1–23* ஏடுகள்; **இ.** 23 x 2.5 செ.மீ.; **ஈ.** *10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை.

தொடக்கம்

கண்ணைநுத லிற்கறை யைக்களத் தின்மறைத்
தெண்ணமிலா வெண்போலெ முந்தருளும்–வெண்ணைநல்லூர்
மெய்கண்ட தேவே வினாவெண்பா விற்குமுகங்
கைகண்ட தேமிகவுங் காப்பு (1)

கடாதிகட்குத் தாரகமென் றேழென்று காணில்
விடாதுகுய வன்திரிகை மேல்மண் - கெடாத்தனைக்
கொய்வோர் வினைகாள நாசம் குவலயத்தைச்
செய்வோர்க்கும் இப்படியே செப்பு (2)

முடிவு

ஒன்றுபதி யொன்றுபசு வொன்று வினைமாயை
யொன்று ணவமொன்றா மென்றுரைத் தாயின்
றென்னுயி ரன்னாய்ந் திருவரு ளருள்ளால்
நின்னாம மாபடி நீ (108)

எ.து – உயிர்களுடலெடுத்தபின்பு பேறுண்டானாப் போல வென்றது. வினாவெண்பா முற்றும். சிவகுருச் சிற்றம்பலம். சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன்றிருவடி வாழ்க.

பிற்குறிப்பு

தாரண வருஷம் மார்கழி மாதம் = 30 = மங்கள வாரம் சத்தமி = அஷ்த்த நட்சத்திரமும் கூடின சுபதினத்தில் திருக்கோவிலூர் பரமாசாரிய சுவாமி சன்னிதானத்திலிருந்து தாண்டவ யீசுரத் தம்பிரான் வினாவெண்பா எழுதி நிறைவேறினது. முற்றும்.

குறிப்புரை

இச்சுவடி நூல் உண்மை என்னும் தலைப்பில், ஆறு வெண்பாக்களைக் கூறுகிறது. தொடர்ந்து புராணவரலாறு, சரியை, பூர்வசங்கை, சிருட்டி, பூததரிசனம், தத்துவம், மாயை, ஆணவம், ஆன்மதரிசனம் என்னும் பல தலைப்பு களில் வினாக்களை எழுப்பி ஆங்காங்கே விடை கூறுவதாக அமைகிறது. அனைத்தும் வெண்பாப் பாடல்களால் ஆனவை. சுருங்கிய உரையுடன் காணப்படுகிறது. 1:10 என்ற எண்ணிட்ட சுவடியினிறும் இது வேறுபட்டது.

## 484. வினா வெண்பா

**அ.** 130:252; **ஆ.** *108–109* ஏடுகள்; **இ.** 20 x 3 செ.மீ.; **ஈ.** *9–10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை.

தொடக்கம், முடிவு 1:10 போன்றது.

குறிப்புரை

***1–13* பாடல்கள் உள்ளன.** *1:10; 138:291; 151:331; 167:358* என்ற எண்களில் அமைந்த நூல்கள் இது போன்றவையே.

## 485. வினா வெண்பா

**அ. 138:291; ஆ.** *92–93* ஏடுகள்; **இ.** 38 x 3.5செ.மீ.; **ஈ.** *6–7* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை.

தொடக்கம், முடிவு 1:10 போன்றது.

குறிப்புரை

***1–13* பாடல்கள் உள்ளன.** *1:10; 130:252; 151:331; 167:358* என்ற எண்களில் அமைந்த நூல்கள் இது போன்றவையே.

## 486. வினா வெண்பா

**அ. 147:323; ஆ.** *15–35* ஏடுகள்; **இ.** 33 x 3 செ.மீ.; **ஈ.** 7 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை.

தொடக்கம்

மாலுடம்பில் மத்தடிபோய் மற்றவர்மேல் மன்னியிடர்
வாலடியிற் நான்முதுகில் அத்தடிபோய்-ஞாலமெல்லாம்
பட்டத்துவென மண்சுமந்த போது பரகுருவே
சுட்டறவே நாயேற்குச் சொல் (10)

முடிவு

கேட்டார்கள் பக்குவமோ கேட்டபொருள் சொல்லுதற்கு
மாட்டாம லோவாக்கில் வாராதோ – நாட்டரிய
ஞான மடந்தையுட நால்வர்களுங் கேட்டுவெப்ப
மோனமுட னீயிருத்தல் முன்

என்றது–கேட்டார்க்குச் சருவ சந்தையமுந் நீருகைக்கு அவனியமாக வியாக்கியான முத்திரையினாலே சித்தாந்த நிண்ணய மனுக்கிரகித்த தெனவறிக.... *(106)*

வினா வெண்பா முற்றும்.

குறிப்புரை

இந்நூலின் முதல்பாடல் *15*–ஆம் ஏட்டிலிருந்து தொடங்கு கின்றது. *15, 16*–ஆம் எண்ணுள்ள ஏடுகள் பழுதுபட்டு முறிந்துள்ளன.

எம்பெருமானால் அருளிச் செய்யப் பெற்றவை வேத, ஆகமங்கள் என்னும் கருத்துத் தொடங்கி பதிவாக்கியத் தளவை, காசி முதலான பதிகளின் பெருமை, பொருள், உடல், வினை, பாவபுண்ணியங்கள், சமயா சாரங்கள், சத்திய நிருவாணமாகிய தீட்சை, பூதாதி, சிவாதி முதலான பலசெய்திகளைத் தொகுத்துக் கூறுகிறது.

## 487.வினா வெண்பா

**அ. 151:331; ஆ.** *70–72;* **இ.** 23 x 3 செ.மீ.; **ஈ.** *8–9* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை.

தொடக்கம், முடிவு 1:10 போன்றது.

குறிப்புரை

*1:10; 130:252; 138:291; 167:358* என்ற எண்களில் அமைந்த நூல்கள் இது போன்றவையே.

## 488. வினா வெண்பா

**அ. 167:358; ஆ.** *124–125* ஏடுகள்; **இ.** 24 x 4 செ.மீ.; **ஈ.** *9–10* வரிகள்; **உ.** தெளிவான நிலை; **ஊ.** கடினமான எழுத்து; **எ.** முழுமையானது; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை.

தொடக்கம், முடிவு 1:10 போன்றது.

குறிப்புரை

*1:10; 130:252; 138:291* என்ற எண்களில் அமைந்த நூல்கள் இது போன்றவையே.

## 489. வெண்பா

**அ. 526:831; ஆ.** *62* ஆவது ஏடு; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *4–6* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

இஷ்டமுட னென்றலையி லின்னபடி யென்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ–முட்டமுட்டப்
பஞ்சமே யானாலும் பாரமவன் றனக்கே
நெஞ்சமே யஞ்சாதே நீ (1)

முடிவு

கெர்ப்பமுத லீன்றளவும் கேடுபடா தெந்தனுக்
குவப்ப மமுது மளித்திட்டு – கற்பித்தோன்
போனானோ கண்டுஞ் சிக்காணோ ஊமைபோ
லானானோ யன்னே யரன் (5)

குறிப்புரை

அரனிடத்தில் உண்மை அன்பு வைத்து வாழ்க்கை நடத்துவோமானால் எந்நிலையிலும் அஞ்சாது நல்வாழ்வு வாழ முடியும்; **ஒன்று முதல் ஐந்து வெண்பாக்கள் உள்ளன.** இதனையடுத்துள்ள 'பால வினாயகர் பேரில் வண்ணம்' என்ற ஓர் ஏட்டில் மட்டும் 'தான தனந்தன னாதத் தனா தனா தனா வென' என்ற இசைப் பாடல் 5 அடிகளில் இடம் பெற்றுள்ளது.

## 490. வேல் வகுப்பு, புய வகுப்பு

**அ. 76:164; ஆ.** *114–117* ஏடுகள்; **இ.** 17 x 2.5 செ.மீ.; **ஈ.** *8–10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பருத்தமுலை சிறுத்தவிடை வெளுத்த நகை
கறுத்தகுழல் சிவத்தவிதழ் மரச்சிறுமி விழிக்குநிகரதாம்
பனைக்கைமுக படக்காட மதத்தவளகே சக்கடவுள்
பத்ததிடு நிகழ்த்துமுறை தெறிக்க வரமாகும்
பசைத்தமுது தமிழ்ப்பலகை யிருக்கும் வரகவிப்
புலவனிசைக் குருகுரைக்க காமிடித்து வழிகாணும்
.....

முடிவு

வழகிய குமரனுமை திருமதலைப் பகீரதி
மாதர் வாழு மறுவா பிரியப்படு கந்த
னெந்தை யிந்திர நீலச்சிலம் பின்னனுப
மன்னகன் னியமன்மலன் மோகன னேகனேக
னனைவபித் தன்சஞ்சவன் பிரசண்டவா கைப்புயங்களே

புயவகுப்பு முற்றும்.

குறிப்புரை

இதனையடுத்த ஓர் ஏட்டில் பெரியபுராணம் எனும் நூற்பெயர் அமைந்துள்ளது. இதில் கீழே உள்ள நான்கடியுள்ள ஒரு பாடல் மட்டுமே உள்ளது.

இருவினைப் பாசமும் மலக்கல்லா ராதலின்
வருபவக் கடலின்வீழ் மாக்க ளேறிட
வருளுமெய் யனான செழுத்தரை சையிக்க
னொருகன் மேலேற்றிட வுரைக்க வேண்டுமோ.

## 491. வைரபுரம் எயிலம்மை திருவூசல்

**அ. தாள். 18:49; ஆ.** *11–14* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

விநாயகர் காப்பு

சந்திரனும் கதிரவனும் தவழுஞ் சோலை
தனிலுறையும் அளியினங்கள் இரைந்து பாட

மந்தவிளந் தென்றலுற வளங்க ளோங்கும்
வைரபுரி எயிலம்மை யூசல் பாட

நூல்

திருவுலவு மாணிக்கக் கால்கள் நாட்டி
செப்பரிய செழும்பவள விட்டம் போட்டு
கருதரிய வைரமதில் விதான மாக்கிக்
கனமுடைய மரகதத்தால் பலகை சேர்த்துப்
பெருமைபெறும் ஆடகப்பொன் வடங்கள் பூட்டிப்
பிரியமுடன் அலங்கரித்த வூச லேறி
மரகதமே! பொன்மணியே! ஆடீ ரூசல்
வைரபுரி எயிலம்மை ஆடீ ரூசல் (1)

முடிவு

கலைவாழி மறைமுனிவர் தேவர் வாழி
கஞ்சன்முத லாயவொரு மூவர் வாழி
தலமுறையும் அடியவரும் அரசும் வாழி
சண்முகனற் றமிழிலிசை ஊசல் வாழி
நலமோடிதைப் படிப்பவர்கள் எவரும் வாழி
நவிலுமிதைச் செவியேற்கு மெவரும் வாழி
மலையரையன் மடமகளே யாடீ ரூசல்
வைரபுரி எயிலம்மை யாடீ ரூசல் (10)

குறிப்புரை

வைரபுரத்து எழுந்தருளியுள்ள எயிலம்மை மீது பாடப்பட்ட இவ்வூசல் சிற்றிலக்கியம் காப்புப்பாடல் இன்றிப் **பத்து எண்சீர் விருத்தங்களைக் கொண்டுள்ளது.** ஊசல் எதனால் ஆக்கப் பட்டு அலங்கரிக்கப் பட்டிருக்கிறது என்பதும், முனிவர் பாட, மறையவர் வேத மோத, அடியவர் வணங்கி வாழ்த்த, கணங்கள் சூழ, பூமகள், நிலமகள், கின்னரர், கணபதி முதலானோர் வடந் தொட்டாட்ட, நான் பிறப்பைத் தவிர்த்து நின்மலரடியில் வாழ அம்மையே நீ ஊசலாடு என்று பலவாறு விளக்கம் பெறும் இந்நூலில் அம்மையின் திருமேனிப் பொலிவும், பெருமைகளும் கூறப்படுகின்றன.

## 492. வைரபுரம் சோமசுந்தரேசர் ஒருபா ஒருபஃது

**அ. தாள்.18:47; ஆ.** 7 பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** *அச்சாகாதது.*

தொடக்கம்

விநாயக வணக்கம்

பொற்புறும் வைரமா புரத்தினில் மேவிய
சொற்படு தற்பரச் சோம சுந்தரன்
நற்புகழ் தன்னையிந் நானிலத் தேசொலக்
கற்பக யானைதன் கழலடி வாழ்த்துவாம்

நூல்

தாதவிழ் தண்மலர்ப் பொழில்எனும் அரங்கில்
மாதர் வண்டினம் நல்லியாழ் செய்ய
வருக்கையின் களைகளை மந்திகள் பறித்து
மடித்தலத்து இருத்தி முழவென அடிப்பக்
குயிலெனும் பாணர்தீங் குழலிசை காட்ட
மயிலெனும் பொதுமகள் மகிழ்வொடு நடிக்கும்

முடிவு

ஞானமாம் கடல்தனில் நன்குறப் புகுந்தும்
ஆனந்த மாகிய அலைமிசை மிதந்தும்
பரவெளி யென்னுமோர் அருநெறி நடந்தும்
அரியவோர் முத்தியாம் கரைதனை யடைய
அருளுதி யென்னநின் அன்புயக்
குரைகழல் தன்னைப் பரவினன் யானே

### குறிப்புரை

இந்நூல் நேரிசை ஆசிரியப்பாவால் இயன்ற **பத்துப் பாடல்களையுடையது**. 10 அடிமுதல் 32 அடிவரை அமைந்து மொத்தம் 207 அடிகளில் பாடல்கள் அமைகின்றன. இந்நூல் திண்டிவனம் தாலுகா வைரபுரத்துப் புதுக்கியுள்ள சிவாலயத்து எழுந்தருளியுள்ள சோம

சுந்தரேசர் மீது பாடப் பெற்ற சிற்றிலக்கிய வகையாகும். வைரமா நகர்ச்சிறப்பு, நாட்டு வளம், கோயிலில் இறைவனும் இறைவியும் அமர்ந்திருக்கும் இடங்கள், இறைவனின் அருட்செயல்கள், தொல்லுலகம் புகழும் அவனது நாமச்சிறப்பு முதலானவற்றை நூல் விரித்துரைக்கின்றது. என்னுடைய புன் மொழியையும் ஏற்று அருள் காட்டினவன் என்று கூறும் இந்நூலாசிரியரான சண்முகம், ஞானமுற்றுய்ய, நன்னெறி யடைய, முத்தி யடைய, தவப்பயனையடைய, திருவடி நினையுமோர் நெறிதனைப் பெற அருள வேண்டும் என்கின்றார்.

## 493. வைரபுரம் திரிபுர சுந்தரியம்மை நவமணி மாலை

**அ. தாள். 18:48; ஆ.** *8–10* பக்கங்கள்; **இ.** முழுமை; **ஈ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

விநாயகர் காப்பு

திரிபுர சுந்தரி செந்தமிழ் மாலைக்குக்
கரிமுகன் றன்மலரே காப்பு

நூல்

சீருலவும் வைரநகர்த் தேங்குபுகழ்ச் சுந்தரியைப்
பேருலக மீன்ற பெருங்கொடியைப் – பாருலகிற்
தாழ்வாரை வாழ்விக்கச் சார்ந்தவர்தம் உள்ளத்து
வாழ்வாளை வாயேநீ வாழ்த்து (1)

முடிவு

அருந்தாமரை விரிந்தலர்தரக்
கருங்குழலெழிற் கடைசிய ரொளிர்
முகநலம்கவர் பகையென அதை
அகழ்தெறிதரூஉம் அகனரும்பனை
வளமலிந்தொளிர் வைரமாநகர்
இளமதிச்சடை இறைவர்தினம்
புகழ்ந்திடும்திரி புரசுந்தரி

செகமதில் வரூஉம் சேயனானிழி
பந்தாம்வலைப் பட்டுழல உறீஇச்
சிந்தையேமிக நைந்தலைந்தனன் – அதனால்
நின்றிருமலரடி நிழல்தனில்
ஒன்று வாழ்வுற உவந்தினிதருளே (9)

குறிப்புரை

சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்றான வைரபுரத் தெழுந்தருளி யுள்ள திரிபுரசுந்தரியைப் போற்றித் துதிக்கும் இந்நூல் நேரிசை வெண்பா, கட்டளைக் கலித்துறை, நேரிசை ஆசிரியப்பா, விருத்தப்பா, கொச்சகக் கலிப்பா, குறளடி வஞ்சிப்பா ஆகிய யாப்புகளால் ஒன்பது பாடல்களில் பாடப் பெற்றுள்ளது. இந்நூலாசிரியர் சண்முகம் போகத்தை விரும்பிய எனக்கு உன் அருள் தருவாயா என்றிறைஞ்சு கின்றார். மேலும் மனைவி, மக்கள், உற்றார், உறவினர் சுடுகாடு வரைதான் வர இயலும்; ஆயின் நின்னை வணங்கின் பிறப்பெனும் பெருங்கடல் கடத்த உதவும் என்றும் பந்தத்தை அறுத்து, நிலைத்த இன்பத்தை அருளுவது உன்நெறியே என்றும் உன்னுடைய பெருமைதனை இயம்புவதற்கு யாராலும் இயலாது என்றும் கூறுகின்றார்.

## 494. வேளூர் முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ்

**அ.** **82:183;** **ஆ.** *3–10* ஏடுகள்; **இ.** **35 x 3** செ.மீ.; **ஈ.** *8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** அழகான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது (*1947*).

தொடக்கம்

பொன்பூத்த குடுமிப் புலங்குவட் டிமவான்
பொருப்பிற் பிறந்து தவழப்
'பொழிநிலவு தவமுழு வெள்ளிவே தண்டத்தோர்
பொற்களிற் றைப்பு ணர்ந்து
தென்பூத்த பாட்டளி துதைந்தபைங் கூந்தற்
செழும்பிடி பயந்த ளித்த

சிறுகட் பெருஞ்செவிக் குஞ்சரக் கண்ணினிரு
செஞ்சரணை யஞ்ச லிப்பாம்.

.... .... .... ......

கொன்பூத்த தெரியார் கடம்பணி தடம்புயக்
குருசிலைப் பொருசி லைக்கைக்
குமரனைக் கந்தபுரி முருகனைப் பரவுமென்
கொழிதமிழ்க் கவித ழையவே.

முடிவு

மானிறக் கடவுடிரு மறுமார்பி றைவிரி
வனத்துழாய்க் காடு மூடி
மாயிருள் வழங்குதன் றிருமானி கைக்கந்தன்
மணிவிளக் கிட்டு முட்டாய்

...... ........ ..... .......

தீநிறக் குடுமிவெண் சேவலை யுயர்த்துவண்
சிறைமயிற் பரிந டாத்தும்
சேவகப் பெருமாளை வேதபுரி வருமிளஞ்
சேயைப் புரக்க வென்றே

குறிப்புரை

பிள்ளைத்தமிழ் என்னும் இலக்கியவகை 96 வகைப் பிரபந்தங்களில் ஒன்று. ஆசிரியர்களால் பெரிதும் போற்றப்படும் இலக்கிய வகையுள் ஒன்று; பாட்டுடைத் தலைமகனைப் பிள்ளைப் பருவத்தானாக எண்ணிப் பத்துப் பருவங்களில் பாடுவது; ஆயின் இந்நூலில் அம்புலிப் பருவம், வாரனைப் பருவம், சப்பாணிப் பருவம், முத்தப் பருவம் ஆகிய நான்கு பருவங்கள் மட்டுமே உள்ளன. அதிலும் முத்தப் பருவத்தில் எட்டாவது பாடல் முடிய மட்டுமே உள்ளது. முருகப் பெருமானின் புகழ், சிறப்பு, உருவ வண்ணனை, செயல்கள், விளையாட்டு ஆகிய வற்றைக் கொண்டு அவரது பிள்ளைத் தமிழ்ப் பருவங்கள் பாடப் பெற்றிருக்கின்றன. இறுதியில் மாசிலாமணி சாதகபாவம் என்ற தலைப்புள்ள உடைந்த ஏடு ஒன்றுள்ளது.

## 495. (ஸ்ரீ ரங்க நாயகியம்மை திருவூசல்)

**அ.** 526:827; **ஆ.** 52–53 ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** 7–9 வரிகள், **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

... அலங்கரத் துக்கொடி முடிமேல்
சந்திர சூரியர் குடைகள் சூழ
சத்தியுமை பார்வதியும் அமரர் தேவர்
தான்மகிழ்ந் துறங்கக் கெடுசமைத்த ஊசல்
வெத்திபெற்ற ஆயிரங்கால் மண்ட பத்தில்
விஸ்தாரக் கொலுவுறத் தினம்விளங்கும் நாளும்
சித்திரப்பொன் னணிமார்பர் ஆடீ ரூசல்
ஸ்ரீரங்க நாயகியார் ஆடீ ரூசல் (6)

முடிவு

வர்ணமுள்ள சந்திரவட்டம் கொடிக ளாட
மகரவட்ட விருதுகொடி மகிக்ஷி யாட
கொன்றைமலர் சாதிபுஷ்பம் மாலை யாட
கொந்தளப்பொன் னோலைமுத்து கவுரியாட
தேவர்களும் முனிவர்களும் தானும் வாழி
பாருகை யாளுமன்னர் தானம் வாழி
தேரில்வரும் திருவரங்கர் வாழி வாழி
ஸ்ரீரங்க நாயகியார் வாழி வாழி (11)

குறிப்புரை

**6–11 பாடல்கள் உள்ளன.** திருவரங்க நாதரின் சிறப்பையும், ரங்க நாயகியின் பெருமையையும், திருமேனிப் பொலிவையும் வெளிப்படுத்தும் இந்நூல் ஸ்ரீரங்கநாயகி மீது பாடப்பட்ட ஊசல் சிற்றிலக்கியமாக இருப்பதால் 'ஸ்ரீரங்க நாயகியம்மை திருவூசல்' எனப் பெயர் தரப்பட்டது. இந்திரர் வானவர், இமையவர், வதிஷ்ட்டர், சந்திர சூரியர், சதுர்மறையோர், மாமுனிவர், நாரதர் முதலானோர் வடந்தொட்டாட்ட அம்மையே நீ ஊசலாடு எனும் பகுதியும் இதில் இடம் பெற்றுள்ளது.

# 4. பக்தி இலக்கியம்

## 496. திருக்கயிலாயத் திருவருள் விளக்கம்

**அ. 78:173**; **ஆ.** 1 - 124 ஏடுகள்; **இ.** 45 ஸ 2.7 செ.மீ; **ஏ.** 6 - 7 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஈ.** அச்சாகாதது.

### தொடக்கம்

**திருநாவுக் கரையர்முத லுரைகோவற்கு உயர்கடவுள்**
**பெரியானைக் கணபதியின் இருதாளைப் பணிகுவனே**
**ஞானமூர்த்திப் பிள்ளையார் திருவடிகள் வாழ்க**

ஸ்ரீமத் சச்சிதானந்த நித்திய பரிபூரண வகண்ட நிரேது கிறுபா காருண்ணிய சொரூபரென்னுங் கையிலாச பதியாகிய பரமேசுவரனது திருமுகங்களிலே ஈசான முகத்திலுத் பவமான வல்லமாப் பிரபு தேவாசாரிய சுவாமிகள் திருவருனோக்கந் திருவுள்ளச் சிந்தனையார் திருவடிகள் சூட்டிக் குருக்காச் சிரசை யோகத் துற்பவமான சென்ன மல்லிகார்ச்சுன தேவாசாரிய சுவாமிகள் விளங்குங் காலங் கலியுகம் 3904 க்கு மேல் கீலக வருஷம் ஆவணி மாசம் வளர்பிறைச் பஞ்சமி. சுக்கிர வாரஞ் சூரிய உதயமான 12 நாழிகைக்கு ஓரங்கல்லென்னுமூரின் மஹேசுவர லிங்கத்து உள்ள மாப்பிரபு தேவாசாரிய சுவாமி அய்க்கியமான நாள் நவமி மங்கள வாரம் சூரிய உதயமான 16 நாழிகைக்கு...

### முடிவு

... நிருபாதியாய்ச் சுயம்பிரகாசமாக விருக்கின்ற விறும்ம தத்துவம் கண்டானந்த வடிவாய்த் தானாகவே விளங்கு மென்று தாமிப்படி விறுமமானந்தத்திற்கு வழிபாடாகத் தானே விஷையானந்தத்தை நிருபிச்சோமிதுவழியே சகலரும் மோட்சமடையக் கடவார். பதினைந்தாவது விஷையானந் தம் முற்றும்.

பிற்குறிப்பு

விகாரி வருஷம் ஆனி மாதம் 16 ஆம் தேதி துதிகை வெள்ளிக்கிழமை உத்திராட நஷ்சத்திரம் இந்தச் சுபதினத்தில் ஆரணி குசபாளையத்திலிருக்கும் ஸ்ரீமத் சச்சிதானந்த நித்திய பூரண அகண்ட நிரேது கிறுபர் காருண்ணியமாகிய எமது மகா குருசாமிகள் கிருபையினால் விளக்கும் ஞானியார் மடம் சண்முக அய்யர் படிக்கின்ற பஞ்சதிச பிரகரணம் எழுதி நிறைவேறிற்று.

முற்றும்.

## குறிப்புரை : ஸ்ரீமத் கையிலாசப் பாரம்பரிய விளக்கம் – பஞ்சதச பிரகரணம்

இந்நூலின் தொடக்கத்தில் ஸ்ரீமத் கையிலாசப் பாரம்பரிய விளக்கம் எனும் பெயரும், இறுதியில் பஞ்சதிச பிரகரணம் எனும் பெயரும் காணப்படுகின்றன. இந்நூல் 15 தலைப்புகளைக் கொண்டு விளங்குவதால் (பஞ்ச-ஐந்து; தசம் - பத்து) இறுதியிலுள்ள பெயரும் பொருத்தமுடைய தாகவே இருக்கிறது. பரமானந்தத்தை அடையும் வழிமுறைகளை, இறை மகிமைகளை, தியான முறைகளை, யோகமுறைகளை, தீட்சை முறைகளை இந்நூல் கூறுகின்றது.

முதலாவது மகிமை, இரண்டாவது மகிமை, என்று தொடங்கி முப்பதுக்கும் மேற்பட்ட இறை மகிமைகளை எடுத்துச் சொல்லுகின்றது. சிவபெருமானுக்கும் சிவகணங் களுக்கும் செய்கின்ற தோத்திரங்களின் சிறப்புகளைப் பல வரலாற்றுக் கதைகளின் மூலம் விளக்குகின்றது. புராணங்களில் சொல்லப்படும் திருத்தலங்களின் சிறப்புகள் எடுத்துக் காட்டப்பட்டு அவற்றைத் தரிசனம் செய்து வரும்படி கட்டளையிடும் வெண்பாக்கள் பல இறை மகிமைகளை உணர்த்தும் முறையில் உள்ளன.

ஸ்ரீ கயிலாயப் பரம்பரையினராக் கருதப்பெறும் சென்னமல்லிகார்ச்சுன தேவாசாரிய சுவாமிகள் உட்பட பல ஆசாரிய சுவாமிகளின் வரலாறுகளையும் இந்நூல் கூறுகிறது. இப்பரம்பரையினர் ஈசுவரன் கோயல், பெருமாள் கோயில்

ஆகியவற்றில் பூசை முதலியன மேற்கொள்கின்றனர் என்பதும் அம்முறைகளை அகோபிலத்தைச் சேர்ந்த சீயர் முதலான அந்தணர் அனைவரும் ஏற்று வருகின்றனர் என்பதும் நூலுள் கூறப்படுகின்றன. இரண்டாவது அஸ்ரீத்திர தீஷ்சை, மூன்றாவது கூடத்த தீபிகை, நான்காவது தியான தீபிகை, ஆறாவது தத்துவ விவேகம், ஏழாவது பஞ்சபூத விவேகம், எட்டாவது பஞ்சகோச விவேகம், ஒன்பதாவது துவித விவேகம், பத்தாவது மகா வாக்கிய விவேகம், பதினொன்றாவது யோகானந்தம், பன்னிரண்டாவது ஆத்மானந்தம், பதிமூன்றாவது அத்துவிதானந்தம், பதினான்காவது வித்தியானந்தம் முதலான தலைப்புகள் நூலுள் இடம் பெறுகின்றன. இதன்பின் மூன்று வெற்றேடுகளை அடுத்துள்ள ஓர் ஏட்டில் 'சித்திரை தீபிகை' எனும் நூலின் செய்தி கூறப்படுகின்றது. அடுத்து இரண்டு வெற்றேடுகள் உள்ளன. இந்நூல் *128:242* என்ற எண்ணில் இடம் பெற்றுள்ள நூல் போன்றதே.

## 497. திருக்கயிலாயத் திருவருள் விளக்கம் முதலியன

**அ.** *128: 242*; **ஆ.** *1-113*; **இ.** 27.5 x 2.5 செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; சிதைந்தும் முறைமாறியும் உள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

### தொடக்கம்

ஸ்ரீசையில பர்வதராச்சியத்துக்கு மேற்குதேசம், வடக்குத் தேசங்களிலே மி... பூஞ் சிவபத்தர் பிரபல ஸ்தலமான சிவகங்கை சம்புலிங்கமலை உம்மத்தூர், நஞ்சுண்ட கூடல், சுப்பிரமணியந் திருவஞ்சைக் களமோகாம்பிகை, கோகரணந் தாரேசுரம், செஞ்சேசுரம், கொலுகேதாரம், மிரட்டேஸ்வரம், கல்யாணப்பட்டினம், கொட்டூரு கொலிபாகம் அம்பை விருபாட்சியேம கூடம், வன வசமாநகரம், உளுவ மாமலை, கூடல் சங்கமேஸ்வரம், கேதாரம், வயித்தியநாதம், காசி முதலான ஸ்தலங்களைத் தரிசித்த மேல் தட்சணதேசத்துக்கு வருவோமென்று யாத்திரை செய்யும். ... அன்பர்கள் பத்தி ஏற்றுக்கொண்டு டில்லிக்குச் சமீபத்தில் செல்ல ....

டில்லியிலிருக்கும் பக்கிரிகள் கேள்வியாகவே கோபத்து டனே வெகுபேர் பக்கிரிகள் வருங்காலம் ஓம் நமச்சிவாய தேவஸ்வாமிகளும் சிவகணங்களும் சிவார்ச் சனைகள் செய்ய.....

முடிவு

> கோவல வீரட்ட குருவருளா லேவிளங்குந்
> தேவரெனு மாறுமுக தேசிகர்தம் – மாவலாய்ச்
> செய்தவக்கை ஈன்றசிவ சண்முக வாசான்
> செய்துதி ஈதென்றே தெளி.

இதன் கருத்துப்படி, பெரிய அய்யா துதி செய்தது.... திருவருள் விளக்கம் முற்றும், திருக்கோவலூர் பிரசன்னன யாகி சமேத வீரட்டேஸ்வர மகாகுரு திருவடிகள் வாழ்க.

குறிப்புரை : திருக்கயிலாயப் பாரம்பரிய திருவருள் விளக்கம்

*78:173* என்ற எண்ணில் இடம் பெற்றுள்ள நூல் இந்நூல் போன்றதே. இறுதியில், திருக்கோவலூர் ஞானாச்சாரிய ஸ்தோத்திரம் என்னும் தலைப்பில் *10* பாடல்கள் அடங்கிய மூன்று ஏடுகள் உள்ளன.

## 498. திருக்கேதாரம் பண் செவ்வழி

**அ.** ***439:685***; **ஆ.** *6-133* ஏடுகள்; **இ.** 18 x 3செ.மீ.; **ஈ.** *11-13* வரிகள்; **உ.** ஏடுகளும், எண்களும் சிதைந்தும் முறை மாறியுமுள்ளன; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

> பூவி னானும் விரிபொதினம் வருதிரும கடனை
> போவி னானும் வியந்தேத்த நீண்டா ரளவாய்நிறைந்
> தோவிபங் கேயவர்க் கருள்புரிந் தவ்வேரு வாக்கிடங்
> காவியங் கண்மட மங்கையர் சேர்கடற் காளியே (9)

முடிவு

> மாலயனுங் காண்பரிய மாலெரியாய் நிமிர்ந்தோன்
> வன்னிமதி சென்னிமிசை வைத்த வன்மோயத்

தெழுவேலை விடமுண்ட மணிகண்டன் விடையேரும்
விமலனுமை யவளோடு மேவியவூர் வினவிற்
சோலைமலி குயில்கூவக் கோல மயிலாள்
சுரும்பொடுவண் டிசைமுரலப் பசுங்கிளி சொற்றுதிப்பக்
காலையிலு மாலையிலுங் கடவுளடி பணிந்து
கசிந்தமனத் தவர்பயிலுங் கலைநல்லூர் காணே (8)

குறிப்புரை

இதில், திருவீரர்மீச்சிரம் பண் பழம் பஞ்சுரம், திருவாலங்காடு பண்பழம் பஞ்சுரம், சேத்திரக்கோவை திருத்தண்டகம், திருவாவடுதுறை நாலடிமேல் வைப்புபண் காந்தார பஞ்சமம், கோவில்பண்குறிஞ்சி, திருக்கொள்ளம் பூதா... டி மேல் வைப்பு பண் காந்தார பஞ்சுரம், திருச்சிராப்பள்ளி பண்குறிஞ்சி, திருவாழ் காளி புத்தூர் பண்டிக்கராகம், திருவாலவாய் திருத்தண்டகம், திருக்கயிலாய மதிருத் தாண்டகம், திருச்செங்காட்டங்குடி பண்பஞ்சரம், கோவிற்பெரிய திருத்தாண்டகம், கோயில் புக்க திருத் தாண்டகம், திருவாவடுதுறை திருத்தண்டகம், திருவதிகை வீரட்டானந்தத் திருத்தண்டகம் முதலான தலைப்புகள் காணப்படுகின்றன.

## 499. திருப்புகழ்

**அ.** ***282:504***; **ஆ.** *38-61 (26)* ஏடுகள்; **இ.** 37.5 x 3.5செ.மீ.; **ஈ.** *6-7* வரிகள்; **உ.** நன்று; ஓரிரு ஏடுகள் சற்று முறிந்துள்ளன; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

ஆல மேற்ற விழியினர் சால நீட்டி யழுதழு
தாக மாய்க்க முறைமுறை
ஆடல் பார்க்க நிலையெழு பாடை கூட்டி விரையம
யான மேற்றி யுறவின ரயலாகக்
கால மாச்சு வருகென ஓலைகாட்டி யம்படர்
காவ லாக்கி யுயிரது கொடுபோமுன்
காம வாழ்க்கை பொடிபட ஞானம் வாய்த்த கழலிணை
காத லாற்க ருதுமுணர் தருவாயே

வேல கீர்த்தி விதாரண சீலர் வாழ்த்து சரவண
வியாழ கோத்ர மருவிய முருகேசனே
வேடர் நாட்டில் விளைபுன ஏனல் காத்த சிறுமியை
வேட மாற்றி வழிபடு மிளையோனே.
ஞால மேத்தி வழிபடு மாறு பேர்க்கு மகவென
நாணல் பூத்த படுகையில் வருவோனே
நாத போற்றி யெனமுது தாதைக் கேட்க அனுபவ
ஞான வார்த்தை யருளிய பெருமாளே (1029)

முடிவு

கமல மொட்டைக்கட்ட ழித்துக் குமிழியை
நிலைகு லைத்துப் பொற்கு டத்தைத் தமனிய
கலச வர்க்கத் தைத்த கர்த்துக் குலையற இளநீரைக்
கறுவி வட்டைப் பிற்று ரத்திப் பொருதப
சயம்வி ளைத்துச் செப்ப டித்துக் குலவிய
கரிம ருப்பைப் புக்கொ டித்துத் திறல்மத னபிடேகம்
அமலர் நெற்றிக் கட்ட ழற்குட் பொடி செய்து
அதிக சக்ரப் புட்ப றக்கக் கொடுமையி
டைல்ப டைத்தச் சப்ப டுத்திச் சபதமொ டிருதாளம்
அறைதல் கற்பித் துப்பொ ருப்பைப் பரவிய
சிறக றுப்பித் துக்க தீர்த்துப் புடைபடு
மபிந வச்சித் ரத்த னத்துத் திருடிக ளூறலாமோ
தமர மிக்குத் திக்க திர்க்கப் பலபறை
தொகுதொ குக்குத் தொத்தோ ருக்குத் தொகுதொகு
தரிகி டத்தது தத்த ரிக்கத் தரிகிட எனலோதிச்
சவடு றப்பக் கப்ப ழொத்திப் புகையெழ
வழிக ளூட்செக் கச்சி வத்துக் குறளிகள்
தசைகள் பட்சித் துக்க ளித்துக் கழுதொடு கழுகாட
அமலை யுற்றுக் கொக்க ரித்துப் படுகள
அசுர ரத்தத் திற்கு ளித்துத் திமியென
அடிந டித்திட் டிட்டி டித்துப் பொருதிடு மயிலோனே
அழகுமிக்கச் சித்ர பச்சைப் புரவியி
னுலவு மெய்ப்ரத் யட்ச நற்சற் குருபர
அருணை யிற்சித் தித்தெ னக்குத் தெளிவருள்
பெருமானே

## குறிப்புரை

'திருப்புகழின்' சில பாடல்கள் இந்நூலுள் இடம் பெற்றுள்ளன. திருவருணை, விராலிமலை, திருவாரூர், திருப்புலியூர், திருப்பாதிரியூர், கதிர்காமம், காஞ்சிபுரம், திருவையாறு முதலிய தலங்களைப் பற்றிய பாடல்களும், பொதுவான சில பாடல்களும் இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன.

திருப்புகழ் என்பது முருகப் பெருமானின் சிறப்புகளைச் சித்தரித்துக் கூறுவது. முருகன் புகழ் என்பதிலுள்ள புகழ் என்ற சொல்லுக்குத் 'திரு' என்ற சொல் அடையாக வந்து திருப்புகழ் எனப்படுகிறது. சந்த இசையை அடிப்படையாகக் கொண்டு இவ்வகைப் பாடல்கள் பாடப் பெறுகின்றன. இச்சந்த இசையை இலக்கணத்தார் 'சந்தக் களிப்பு' என்று கூறுவர்.

சைவ சமய முதற் கடவுளான சிவபெருமானுக்கு அவரது பெருமை கூறும் படியாகப் பன்னிரு திருமுறை நூல்கள் அமைந்தன. அதே போன்று கௌமாரச் சமயத்தில் முதற்கடவுளாகிய முருகப் பெருமானுக்கும் பன்னிரு திருமுறை என்ற பெயரில் நூல்கள் அமைந்துள்ளன. இந்நூல்களில் முதல் ஆறு நூல்கள் முருகன் அமர்ந்திருக்கும் அறுபடை வீடுகள் பற்றியும், ஏழாவது நூல் அறுபடை நீங்கிய ஏனைய தலங்களைப் பற்றியும், வேல், வால், வகுப்பு போன்ற இதன் பின்னாக அமைந்து பன்னிரு திருமுறைகளாக அமைகின்றன.

தமிழகத்தில் திருப்புகழ் பாடாதார் இல்லை என்றே கூறலாம். திருப்புகழ் பெயரில் அமைந்த பிற நூல்களாவன: வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் இயற்றிய திருப்புகழ் பாடல்கள், அழகு முத்துப் பாவலர் இயற்றிய திருப்புகழ், மாம்பழக் கவிஞர் இயற்றிய சந்தப் புகழ், கிருஷ்ணசாமிக் கோனார் இயற்றிய இராமாயணத் திருப்புகழ் சிந்து, காசிம் புலவர் இயற்றிய திருப்புகழ், சுந்தரர் வேடுபறி பஞ்சரத்தினத் திருப்புகழ், குரவை இராமனுசத் தேசிகர் திருமால் மீது இயற்றிய நூற்றி எட்டு திருப்பதித் திருப்புகழ் காயற்பட்டிணத்துக் காசிப்புலவர் இயற்றிய நபிகள் நாயகம்

திருப்புகழ், அந்தோணிக் குட்டி அன்னாவியார் ஏசுநாதர் மீது இயற்றிய ஞானத்திருப்புகழ் முதலான நூல்கள்.

இந்நூலாசிரியரான அருணகிரி நாதர் வில்லிப்புத்தூர் பாரதம் பாடிய வில்லிப்புத்தூராரின் சமகாலத்தவர். கி.பி. 15–ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இவர் 'தேவேந்திர சங்க வகுப்பு' என்ற நூலை, சம்பந்தாண்டான் என்ற புலவனை எதிர்த்துப் பாடியதாகக் கூறுவர்.

மயிலம் சுப்பிரமணிய சுவாமிகள், சென்னை, மாதவ நிவாச அச்சுக் கூடத்தில், *1883*–இல் இந்நூலைப் பதிப்பித்திருக்கிறார். சென்னை, மெமோரியல் அச்சுக் கூடம் இந்நூலை *1909*–இல் அச்சிட்டுள்ளது.

அம்பிகையின் பல்வேறு நாமங்களைக் கூறும் ஒரு மந்திர ஏடும், *96* தத்துவங்கள் குறித்த ஓர் ஏடும், வேறு பொருண்மை குறித்த இரண்டு ஏடுகளும், இறுதியில் ஒரு சட்ட ஏடும் இடம்பெற்றுள்ளன.

## 500. திருப்புகழ்

**அ.** ***404:648***; **ஆ.** 20 ஏடுகள்; **இ.** 39.2 x 3செ.மீ; **ஈ.** 4,5 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; **ஊ.** சுமாரான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை; இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

எல்லாரும் ஞானத் தெளிஞரே கேளீர்சொல்
கல்லெல்லா மாணிக்கக் கல்லாமோ - பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமோ கான்மயில் வீரன்
திருப்புகழைக் கேட்குஞ் செவி

நாத விந்து களாதி நமோநம
வேத மந்திர சொரூபா நமோநம
ஞான பண்டித சுவாமி நமோநம - வெகுகோடி
நாம சம்புகு மாரா நமோ நம
போக அந்தரி பாலா நமோநம
நாக பந்தம யூரா நமோநம - பரசூரர்
சேத தண்வி நோதா நமோநம

கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்பரம வீரா நமோநம
தீப மங்கள சோதி நமோநம
தூய சும்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம - அருள்தாராய்

முடிவு

கண்டமற் றுக்குட லென்டிநெக் குத்தச
னங்கடித் துக்குடி லஞ்சிவப் பச்செநிர்
கண்தெறிக் கத்தலை பந்தடித் துக்கையி லங்குவேலால்
கண்களிக் கக்கக னந்துளுக்கி கப்புக
ழிந்திரற் குப்பதம் வந்தளித் துக்கன
கம்பலத் திற்குற மங்கைபக் கத்துறை தம் பிரானே (123)

குறிப்புரை

**செய்யுள் நடை.** முதல் ஏட்டில் 'திருப்புகழ் மேல் காப்பு' எனும் தலைப்பில் ஒரு வெண்பாவும், ஏறிமயில் ஏறி விளையாடும் முகமொன்று' என்ற பாடலும் காணப்படு கின்றன. அதன்பின் *3* முதல் *126* பாடல்கள் உள்ளன. இறுதி மூன்று பாடல்கள் சிதைந்துள்ளன.

## 501. திருப்புகழ் முதலியன

**அ.** ***433:679***; **ஆ.** *38* ஏடுகள்; **இ.** 38.5 x 2.5செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** இடையிடையே ஏடுகள் விடுபட்டும், பல சிதைந்தும், உடைந்தும் உள்ளன; **ஊ.** தெளிவில்லை; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை; இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

வேலைப் போல்விழி யிட்டும ருட்டிகள்
காமக் ரோதம்வி ளைத்திடு துட்டிகள்
வீதிக் கேதிரி பப்பர மட்டைகள் முலையானை
மேலிட் டேபொர விட்டபொ றிச்சிகள்
மார்பைத் தோளைய சைத்துந டப்பிகள்
வேளுக் காண்மைசெ லுத்துச மர்த்திகள் களிகூருஞ்
சோலைக் கோகில மொத்தமொ ழிச்சிகள்

காசற் றாரையி தத்திலொ ழிச்சிகள்
தோலைப் பூசிமி னுக்கியு ருக்கிகள் எவரேனும்
தோயப் பாயல ழைக்கும வத்திகள்
மோகப் போகமு யக்கிம யக்கிகள்
சூறைக் காரிகள் துக்கவ லைப்பட லொழிவேனோ
காலைக் கேமுழு கிக்குண திக்கினில்
ஆதித் யானய எப்பகர் தர்ப்பண
காயத் ரீசெப மர்ச்சனை யைச் செயு முனிவோர்கள்
கானத் தாசிர மத்தினி லுத்தம
வேள்விச் சாலைய ளித்தல்பொ ருட்டெதிர்
காதத் தாடகை யைக்கொல்க்ரு பைக்கடல் மருகோனே
ஆலைச் சாறுகொ தித்துவ யற்றலை
பாயச் சாலித ழைத்திர தித்தமு
தாகத் தேவர்கள் மெச்சிய செய்ப்பதி யுறைவேலர
ஆழித் தேர்மறு குற்பயில் மெய்த்திரு
நீறிட் டான்மதிள் சுற்றிய பொற்றிரு
ஆனைக் காவினி லப்பர்ப்ரி யப்படு பெருமானே (10)

முடிவு

காதி மோதி வாதாடு நூல்கற் றிடுவோருங்
    காசு தேடி யீயாமல் வாழப் பெறுவோரும்
மாது பாகர் வாழ்வே யெனாநெக் குருகாரும்
    மாறிலாத மாகால னூர்புக் கலைவாரே
நாத ரூப மாநாத ராகத் துறைவோனே
    நாக லோக மீரேழு பாருக்குரியோனே
தீதி லாத வேல்வீர சேவற் கொடியோனே
    தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே முற்றும் (149)

குறிப்புரை

திருவாணைக்கா பற்றியும், பொதுவான பாடல்களில் சிலவும் மட்டுமே இச்சுவடியுள் தொகுக்கப்பட்டுள்ளது. 9 ஆவது பாடல் குறையாக இருப்பதால் 10 ஆவது பாடல் தொடக்கப்பாடலாகத் தரப்பட்டுள்ளது. 9 ஆவது பாடல் முதல் 149 ஆவது பாடலுடன் இந்நூல் முடிவடைகின்றது. எனவே இச்சுவடியில் திருப்புகழ் என்ற நூலிலிருந்து சில குறிப்பிட்ட பாடல்களை மட்டும் தொகுத் திருப்பது

தெரிகின்றது. இறுதியில் 'அருணாசல சதகம்' என்ற நூலின் முதல் ஏடும், இறுதி ஏடும் உள்ளன.

## 502. திருமந்திரம்

**அ.** ***141:317***; **ஆ.** *190-193* ஏடுகள்; **இ.** 24.6 x 2.9 செ.மீ.; **ஈ.** *10-11* வரிகள்; **எ.** நன்று; **உ.** ஓரளவு தெளிவு; **எ.** குறையானது; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

தத்துவ தெரிசனஞ் சாதகங் கண்டு
உத்தே யுணர்ந்து வுடலை யறிந்துநீ
பத்தே சணத்திப் பாவே நிறுத்தி
யொத்தே பசிக்கு ஒருங்கிடல் நன்றே (1)

### முடிவு

வாறாக ஞானம் வரவுறச் சொன்னேன்
பேறாகும் ஞானம் பிறப்பிறப் பெய்திடாக்
கூறாகச் சின்மயங் கூட்டும் வகையிது
வேறாவ தெல்லாம் விளவென் றறிந்திடே (15)

### குறிப்புரை

***1 - 15* பாடல்கள்.** திருமூலரின் திருமந்திரம் என்னும் நூலிலிருந்து ஆங்காங்குச் சிலபாடல்கள் எடுத்து எழுதப் பட்டுள்ளன. பதினைந்து பாடல்கள் மட்டுமே உள்ளன. தத்துவதரிசனம் கூறுதல், ஞானம், பிறப்பு, இறப்பு ஆகியவற்றைக் கூறுகின்ற செய்திகள் இப்பாடல்களுள் அடங்குகின்றன.

இறைவனையும், இறை நிலையையும் இறை நேயனுக் குரிய நெறிமுறைகளையும் தத்துவார்த்த முறையில் விளக்கும் நூல். தக்க ஆசிரியர் இன்றி இந்நூலின் அனுபவப் பொருளை அறிவது கடினம். இந்நூல் பிரபஞ்சம் பற்றியும், பிரபஞ்சத்திற்கும் மனிதனுக்குமுள்ள உறவுகள் பற்றியும், சமயம், மருத்துவம், சோதிடம், ஞானமார்க்கம் போன்ற பல்வேறுபட்ட பொருண்மைகள் பற்றியும் விளக்குகின்றது.

இந்நூலாசிரியர் சித்தர்களில் ஒருவராகவும், மூத்தவராக வும் கருதப் பெறுகின்றார். இது பத்துத் தந்திரங்களை உடையது.

இது பன்னிரு திருமுறையில் பத்தாந் திருமுறையாகவும் மெய்கண்ட சாத்திரத்திற்குத் திறவுகோலாகவும் அமைந் துள்ளது எனச் சைவ சமயிகள் பாராட்டுவர். ஆகையின் இதனைச் சைவத் தமிழ் மந்திரம் என்றும், சைவத் தமிழ் வேதம் என்றும் வழங்குவர்.

இந்நூல் சண்முக சுந்தர முதலியார் என்பவரால் சென்னை, கல்விக் களஞ்சிய அச்சுக்கூடத்தில் *1869*–இல் அச்சிடப் பெற்றுள்ளது.

## 503. திருவாசகத் திருமுறை

**அ.** ***293:518***; **ஆ.** *2-129* (*82* ஏடுகள்); **இ.** 22 x 3 செ.மீ.; **ஈ.** வரிகள்; **உ.** இடையிடையே ஏடுகள் இல்லை; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

மானேநீ நென்னலி நாளை வந்துங்களை
  நானே எழுப்புவ னென்றாலும் நாணாமே
போனதிசை பகரா யின்னம் புலர்ந்தின்றோ
  வானே நிலனே பிறவே யறிவறியான்
நானேவந்தேம் மைத்தலை அளித்தாட்கொண் டருளுவான்
  வார்கழல் பாடிவந் தோர்க்குன் வாய்திறவாய்
ஊனே யுருகா வுனக்கேயுறும் எமக்கும்
  ஏனோர்க்குந் தங்கோனைப் பாடேலோ ரெம்பாவாய்
(ஏடு. 2. பா. 6)

முடிவு

செம்மை நலமறி யாத சிதடரோடுந் திரிவேனை
மும்மை மலமறு வித்து முதலாய முதல வன்றா
நம்மை யுமோர்பொரு ளாக ந..யிசிவிகை யேற்றி வித்த
வம்மை யெனக்கரு ளியவா ரார்பெரு வார்ச் சேரவே
(ஏடு. 127)

## குறிப்புரை

திருவாசகப் பதிகப் பாடல்கள் இச்சுவடி நூலில் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு பதிகத்திற்கும் தனித்தனிப் பாடல் எண்கள் தரப்பட்டுள்ளன. அடைக்கலப்பத்து, அச் சோபத்து, திருச்சதகம், திருத்தெள்ளேணம், குயிற்பத்து, கோயிற்றிருப்பதிகம், செந்திடர்ப்பத்து, நீத்தல் விண்ணப்பம், அற்புதப்பத்து, திருச்சாழல், திருவார்த்தை, திருவெம்பாவை முதலிய தலைப்புகளும், பதிகங்களும் சுவடியின் ஓரப்பகுதியிலும் உட்பகுதியிலும் காணப் படுகின்றன. 128 - 129 என்ற எண்ணிடப்பட்ட ஏடுகளில் திருவாசகத் திருமுறைதுகை ஏடு எனும் தலைப்பில் சிவபுராணத் திருவகவல் முதல் திருப்பதிகம் வரை அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளது.

இந்நூல் மாணிக்க வாசகரால் இயற்றப்பெற்றது. இவரை இவரது ஊர்ப்பெயர் தெரியும்படியாக, ‘திரு’ என்ற அடை சேர்த்து வாதவூரர் என அழைப்பர். மூவர் முதலிகள் என்று சைவ சமயத்தார் ஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோரை இணைத்து ஒரு சேர அழைப்பர். அவர்களோடு மாணிக்கவாசகரைச் சேர்த்துச் சமயக் குரவர் நால்வரெனப் போற்றுவர். இவருடைய பாடல்கள் சுவை மிகுந்தவை. வள்ளலார் இவரது பாடல்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, ‘வான் கலந்த மாணிக்க வாசகா, நின்வாசகத்தை நான் பாடுங்கால், நற் கருப்பஞ்சாற்றினிலே பால்கலந்து, தேன் கலந்து, ஊன் கலந்து, உவட்டாது இனிப்பதுவே’ என்று கூறுவது இங்கு எண்ணத்தக்கது. கண்ணில் நீர்மல்கச் செய்யும்படியான உணர்ச்சிக் குவியலாக இவரது பாடல்கள் அமைந்திருப்பதாகத் தமிழக் கடல் ராய.சொ. அவர்கள் கூறுவர்.

இவரை இறைவனே குருவாக வந்து ஆட்கொண்டதாக இவரது வரலாறு கூறும். புத்தனுக்குப் போதிமரம், மகாவீரனுக்கு அசோகமரம், நம்மாழ்வாருக்குப் புளியமரம் என்பன போல, மாணிக்க வாசகருக்கு ஞானம் தந்த மரம் குறுந்த மரம் ஆகும். இவர் முத்தி பெற்ற இடம் திருப்பெருந்துறை என்ற ஊர். ஆகையின் பெருந்துறைப் பிள்ளை என்றும் அழைப்பர். பெரும்பற்றப் புலியூர் நம்பி.

மாணிக்கவாசகரின் பெருமையைத் தமது நூலான திருவாலவாய் உடையார் 'திருவிளையாடற் புராணத்தில் 261 பாடல்கள் வாயிலாக விளக்குகிறார். பரஞ்சோதியார் தமது திருவிளையாடற் புராணத்தில் ஆளுடைய அடிகளை 393 பாடல்களில் பாடுகிறார். 'திருப்பெருந்துறைப் புராணம்' ஆறு படலத்தில் இவருடைய அருளிச் செயல்களை எடுத்தியம்புகிறது. 'மாணிக்கவாசகர் சுவாமிகள் ஞானமணி மாலை' என்ற நூல் 40 பாடல்களில் இவரது சிறப்பைக் கூறுகின்றது. 192 பாடல்களில் 'மாணிக்க சுவாமிகள் விலாசம்' என்ற நூல் இவரது வாழ்க்கை வரலாற்றைச் சித்தரிக்கின்றது. 'திருவாதவூரர் புராணம்' என்பது இவரது வாழ்க்கை வரலாற்றைச் சிறப்பிக்க எழுந்த ஒரு புராணமாகும்.

பொதுவாக சிவாலயங்களில் லிங்க வழிபாடே காணப்படும். மணிவாசகர் முத்திபெற்ற இத்திருப்பெருந் துறையில் மட்டும் ஆவுடையே நிர்மாணிக்கப்பட்டு வழங்கப்பெற்றுவருகிறது. பூசைகள் அனைத்தும் மணிவாச கருக்கே இங்குச் செய்யப்படுகிறது.

இவர் இயற்றிய நூலான திருவாசகம், திருக்கோவையார் ஆகியன பன்னிரு திருமுறையில் எட்டாந் திருமுறையாக இடம் பெற்றுள்ளது.

திருவெண்காடு ஆறுமுக சுவாமிகள் இந்நூலை, சென்னை, பரப்பிரம்மம், உத்திராட்சர சாலையில் 1882–இல் அச்சிட்டுள்ளார்.

இதனையடுத்து, பிற சுவடிகளிலிருந்து கிடைத்த இது தொடர்பான 21 ஏடுகள் வைக்கப்பட்டுள்ளன.

## 504. திருவாசகம்

**அ.** *75:148*; **ஆ.** *1-44* ஏடுகள்; **இ.** 16.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *10 - 14* வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

தொல்லை யிரும்பிறவி சூழும் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே - எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவாசக மென்னும் தேன்

சிவபுராண அகவல்

நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
...........
பல்லோரும் ஏத்துப் பணிந்து

முடிவு

ஏசினும் யானுன்னை யேத்தினு மென்பிழைக்கே
குழைந்து வேசறு சிவனை விடுதி கண்டாய்
செம்பவள வெற்பிற் ...டையாய் என்னை ஆளுடையாய்
சிற்றுயிர்க்கிரங்குக் காய சினவால
முண்டாய் முதுனனக் கடையவனே (50)

குறிப்புரை

இந்நூலில் சிவபுராண அகவல், கீர்த்தித்திரு அகவல், திருவண்டப்பகுதி, போற்றித்திருவகவல், திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம் என்ற திருவாசகப் பகுதிகள் முழுமையாக உள்ளன. இறுதி ஏட்டில் (44 ஆவது ஏடு) திருவெம்பாவை எனும் பகுதியின் 'ஆதியுமந்தமுமில்லா அருட்பெருஞ் சோதியை' எனும் முதல் பாடல் மட்டுமே உள்ளது. இதனையடுத்து ஒரு வெற்றேடு உள்ளது.

## 505. திருவாசகம்

**அ.** ***83:184***; **ஆ.** *1-127* ஏடுகள்; **இ.** 22 x 3செ.மீ.; **ஈ.** *10* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; இடையே *13,22,24-26, 28-31, 48, 56, 64, 80, 83, 84, 103, 104, 110* என்னும் ஏடுகள் இல்லை; எண்கள் தெரியாத *6* ஏடுகள் சுவடியின் பின்னால் சேர்க்கப்பட்டுள்ளன; பல ஏடுகளில் துளைகள்

உள்ளன; **௬.** தெளிவு; **௭.** குறை; **௮.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

**தொடக்கம்**

**தொல்லை யிருபிறவி சூழ்ந்தவினை நீக்கி**
**யல்லலறுத் தானந்த மாக்கியதே - யெல்லை**
**மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்**
**திருவா சகமென்னுந் தேன்**

**திருச்சிற்றம்பலம் - குருபாதந்துணை**
**சிவ அம்பலத்தாடுமைய்யர் திருவடி வாழ்க**

**முடிவு**

**திருவாசகம் அட்டவணை வெண்பா**

**ஓது படையெழுச்சி ஓங்குதிரு வெண்பாவும்**
**நாதனுறை பண்டாய நான்மறையு - மாதர்**
**படையாட்சி ஆனந்த மாலையுட னச்சோ**
**தொடையாக்கிக் கொண்டாய்ந் திரு (10)**

திருச்சிற்றம்பலம்

**குறிப்புரை**

திருவாசகம் என்னும் இச் சுவடி சிவபுராணத்தகவல் என்பது முதல் தொடங்குகிறது. **தொல்லையிரு பிறவி** என்னும் பாட்டு முதல் ஏட்டிலும் நூலின் இறுதியிலும் காணப் படுகிறது. கீர்த்தித் திரு அகவல் முதலாக அச்சோபத்து ஈறாக அனைத்துப் பகுதிகளும் முழுதுமாக உள்ளன. 'நமச்சிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க' என்பது நூலின் முதல் பாடலாகவும், 'செம்மைநல மறியாத சிதடரொடுந் திரிவேனை' என்பது நூலின் இறுதிப் பாடலாகவும் அமைகின்றன. 'திருவாசகம் அட்டவணை வெண்பா' எனும் தலைப்பில் அனைத்துத் தலைப்புகளும் பத்து வெண்பாக்களில் தொகுத்துக் கொடுக்கப்படுகின்றன. சிவபுராணத்தகவல், போற்றித்திருவகவல், திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், திருவெம்பாவை, திருக்கோத்தும்பி,

திருப்பூவல்லி, திருத்தோணோக்கம், திருப்பொன்னூசல், அன்னைபத்து, குயிற்பத்து, திருத்தசாங்கம், திருப்பள்ளி யெழுச்சி, கோயில், மும்மததிருப்பதிகம், கோயிற்றிருப் பதிகம், ஆசைப்பத்து, அருட்பத்து, திருக்கழுக்குன்றப் பத்து, கண்டப்பத்து, பிராத்தனைப்பத்து, அச்சப்பத்து, யாத்திரைப் பத்து, திருப்படையாட்சி முதலான தலைப்புகள் உள்ளன.

## 506. திருவாசகம்

**அ.** ***84:185***; **ஆ.** *1-159* ஏடுகள்; **இ.** 20 x 3செ.மீ.; **ஈ.** *6-8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

முற்குறிப்பு

விசய வருடம் தை மாதம் 22 ம் தேதி ஆதிவாரம் தசமி திதி விசாக நட்சத்திரம். இந்தச் சுபதினத்தில் எழுத ஆரம்பித்தது.

தொடக்கம்

திருவாக்குஞ் செய்கருமங் கைகூடுஞ் செஞ்சோம்
பெருவாக்கும் பீடும் பெருக்கு – முருவாக்கு
மாதலால் வானோரு மானை முகத்தானைக்
காதலாற் கூப்புவா ரங்கை.

நமச்சிவாய வாழ்க நாதன் தாள்வாழ்க
இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏக னனேகன் இறைவ னடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்த னடிவெல்க.

(சிவபுராணத் தகவல்)

முடிவு

செம்மைநல மறியாத சிதடரோடுந் திரிவேனை
மும்மைநல மறுவித்து முதலாய முதன்வன்றா
னம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை யேற்றுவித்த
வம்மையெனக் கருளியவா ரார்பெறுவா ரச்சேரவே

பிற்குறிப்பு

செயவருடம் *சித்திரைமாதம் 6 ந் தேதி சுக்ரவாரம் பஞ்சமி திதி* கேட்டை நட்சத்திரம் இந்தச் சுபதினத்தில் எழுதி முடிக்கப்பட்டது.

குறிப்புரை

இதில் *சிவபுராணத்தகவல்* தொடங்கி அச்சோ பத்து முடிய முழுமையாக உள்ளது. எண் இல்லாத இரண்டு முகப்பு ஏடுகளில் நூலுக்குரிய பதிகத்தலைப்பு அட்டவணை காணப்படுகிறது.

## 507. திருவாசகம்

**அ.** ***173: 366***; **ஆ.** *1-44* ஏடுகள்; **இ.** 23 x 3.5செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே - எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்

சிவபுராணத் தகவல்

நமச்சிவாய வாழ்க நாதன்றாள் வாழ்க
..... ...... ......
பல்லோரு, மேத்தப் பணிந்து

முடிவு

வலைத்தலை மானன்ன நோக்கியர் நோக்கின் வலையிற்பட்டு
மிலைத்தலைந் தேனை விடுதிகண் டாய்வெண் மதியின் ஒற்றைக்
கலைத்தலை யாய்கரு ணாகர கையி லாயமென்னும்
மலைத்தலை வாமலை யாள்மண வாளஎன் வாழ்முதலே (34)

## குறிப்புரை

இச்சுவடியில் திருவாசகம், சிவஞான சித்தியார் என்னும் இரு நூல்கள் உள்ளன. முதல் நூல் 1 முதல் 44 ஏடுகள் கொண்டதாய், திருவாசகம் என எழுதப்பெற்றுள்ளது. 'சிவஞான சித்தியார்' என்ற நூல் திருவாசகத்தைத் தொடர்ந்து அமைகிறது. இதற்குத் தணியாக ஏட்டு எண்கள் கொடுக்கப் பட்டுள்ளன.

திருவாசகம் மூலம் சிவபுராணம் தொடங்கி நீத்தல் விண்ணப்பம் முடிய மட்டுமே உள்ளது. ஏட்டெண் இன்றி முதலில் 3 ஏடுகள் உள்ளன. ஒன்றில் 'திருவாக்குஞ் செய்கருமங் கைகூடும்' என்ற காப்புப் பாடலும், பிற இரண்டில் இந்நூலாசிரியரான திருவாதவூரார் பெருமையும் கூறப்பட்டுள்ளன.

## 508. திருவாசகம்

**அ.** *181:386*; **ஆ.** *1-127* ஏடுகள்; **இ.** 31 x 3செ.மீ.; **ஈ.** *7-8* வரிகள்; **உ.** *18* ஏடுகள் பாதியாக முறிந்துள்ளன; இறுதியில் 3 ஏடுகள் முறிந்துள்ளன; மற்றவை நல்ல நிலையிலுள்ளன; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

**தொடக்கம்**

**சிவபுராணத்தகவல்**

**சிவனுடைய அனாதிமுறமையான பழமை**
**நமச்சிவாய வாழ்க நாதன்றாள் வாழ்க**
**இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க**
.... .... .....
**சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்**
**செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்**
**பல்லோரும் ஏத்தப் பணிந்து.**

முடிவு

திருவாசகத் திருப்பதிகத்ததிகாரத்துக்குத் தாத்பரியம்

சிவபுராணத் தகவலுக்குச் சிவனுடைய னானாதி
கீர்த்தித்திரு வகவலுக்குச் சிவனருளின் முறைமை
திருவண்டப் பகுதிக்குத் தூலசூக்குமத்தை வியந்தது
போற்றித்திரு வகவலுக்குச் சகத்தின் உற்பத்தி
.... .... .... ...
அச்சோ பத்துக்கு அனுபவம் வந்தவழி யறியாமை

குறிப்புரை

இச்சுவடியில் சிவபுராணத் தகவல் தொடங்கி அச்சோப் பதிகம் ஈறாகத் 'திருவாசகம்' முழுமையாக உள்ளது.

## 509. திருவாசகம்

**அ.** ***449:696***; **ஆ.***168* ஏடுகள்; **இ.** 22 x 2.5செ.மீ.; **ஈ.** 56 வரிகள்; **உ.** முதலிலும் இறுதியிலுமுள்ள பல ஏடுகளின் இடது பக்க ஓரப்பகுதிகள் முறிந்துள்ளன; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

அரியாய் போற்றி அமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா போற்றி
யுறவே போற்றி யுயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சே ரடியாள் பங்கா போற்றி

முடிவு

கோவே, யருள வேண்டாவோ?
கொடியேன் கெடவே அமையுமே?
ஆ ஆ என்னாவிடில், என்னை
'அஞ்சேல்' என்பார் ஆரோ - தான்?

சாவார் எல்லாம் என் அளவோ?
தக்க ஆறு அன்று என்னாரோ?
தேவே! தில்லை நடனம் ஆடி!
திகைத்தேன்; இனிதான் தேற்றாயே.

குறிப்புரை

போற்றித்திரு அகவல் என்ற தலைப்பின் நடுவிலிருந்து நூல் தொடங்குகின்றது. திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், திருவெம்பாவை, திருஅம்மானை, திருப்பொற்சுண்ணம், திருக்கோத்தும்பி, திருத்தெள்ளேணம், திருச்சாழல், திருப்பூவல்லி, ஆனந்த மாலை முதலிய பகுதிகள் நூலுள் இடம்பெற்றுள்ளன.

## 510. தேவாரம்

**அ. 107:211; ஆ.** 47 ஏடுகள்; **இ.** 25 x 2.5 செ.மீ.; **ஈ.** 5-6 வரிகள்; **உ.** நன்று; **ஊ.** ஓரளவு தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

திருச்சிற்றம்பலம், திருப்பிரமபுரம்-பண்-நட்டபாடை

தோடுடையசெவி யன்விடை யேறியோர் தூவெண்மதி சூடிக்
காடுடைய சுட லைப்பொடி பூசியென் னுள்ளங்கவர் கள்வன்
.... ... ...
ஒரு நெறியமனம் வைத்துணர் ஞானசம் பந்தன் உணரசெய்த
திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தலெளி தாமே.

முடிவு

பெரிய திருத்தாண்டகம்

அரியானை யந்தணர் தஞ்சிந்தை யானை
யருமறை யினத்தானை யணுவை யார்குந்
தெரியாதத் துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கடங் கோனை மற்றைக்
.... .... ....
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

## குறிப்புரை

தேவாரப் பாடல்கள் சிலவற்றைத் தொகுத்துப் பண் வரிசையில் அமைத்து இச்சுவடி எழுதப்பட்டுள்ளது.

1. திருபிரம்மபுரம் - நட்டபாடை
2. திருவதிகை வீரட்டாணம் - கொல்லி
3. திருவெண்ணை நல்லூர் - இந்தளம்
4. திருவாலவாய் - புறநீர்மை
5. திருக்கூடலையாற்றூர் - புறநீர்மை
6. திருவாலவாய் திருநீற்றுப் பதிகம்
7. நமச்சிவாயத் திருபதிகம் - கௌசிகம்
8. திருக்கமலம் - இயமகம்
9. திருக்கருப்பதியலூர் - இந்தளம்
10. திருவாரூர் - தக்கேசி
11. கோயில் திருக்குறுந்தொகை -
12. திருவலஞ்சுழி - நட்டராகம்
13. திருநெல்வேலி - சாதாரி
14. திருவண்ணாமலை - நட்டபாடை
15. திருப்பிரம்மபுரம் - தக்கராகம்
16. திருத்தொண்டத்தொகை - கொல்லி
17. பெரிய திருத்தாண்டகம் -

திருவாலங்காடு - களம் பஞ்சுரம்

நமச்சிவாயத் திருப்பதிகம் - காந்தார பஞ்சமம்

திருப்பனந்தாள் - பஞ்சமம்

திருநள்ளாறு - பழந் தக்க ராகம்

திருப்புள்ளிருக்கும் வேளூர் - சிகாமரம்

திருத்தொண்டத் தொகை - கொல்லிக்கென வாணம்

திருவாலவாய் - திருநேரிசை

போன்ற பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. முதல் ஏட்டில் பெரியபுராணம் என்ற தலைப்பும் ‘உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்’ என்னும் பாடலும் காணப்படுகின்றன.

சைவ சமயத்தின் தோத்திர நூல்களில் முதன்மையாக அமைவது. பன்னிரு திருமுறையில் முதல் ஏழு அங்கமாக அமைவது. சிவபிரானின் செயற்கரும் அரிய செயல்களைப் பற்றியும், அவர் எழுந்தருளி இருக்கும் திருத்தலங்களின் அருமை, பெருமைகளைப் பற்றியும் எடுத்தியம்பும் நூலே தேவாரம். திருஞான சம்பந்தர் இயற்றிய பாடல்கள் 1,2,3–ஆம் திருமுறைகளாகவும், நாவுக்கரசர் இயற்றிய பாடல்கள் 4,5,6–ஆம் திருமுறைகளாவும், சுந்தரர் பாடிய பாடல்கள் 7–ஆம் திருமுறையாகவும் தொகுக்கப் பெற்றுத் தேவார அடங்கல் என அழைக்கப் பெறுகின்றது.

இப்பாடல்கள் பண் அமைப்பு முறையிலும், மூவர் முதலிகள் பயணித்த தலமுறைப் படியும் இரு விதங்களாகப் பண்முறைத் தேவாரம் என்றும், தலமுறைத் தேவாரம் என்றும் தொகுக்கப் பெற்றுள்ளன.

இத்தேவாரப் பாடல்கள் சோழமன்னனான ராசாராச அபய குலசேகரன் என்பான் காலத்தில் (கி.பி. 10–ஆம் நூற்றாண்டு) நம்பியாண்டார் நம்பி அவர்களால் வகைதொகை செய்யப்பெற்று, திருமுறைகளாகத் தொகுக்கப் பெற்றன என்பர். 274 தலங்கள் தேவாரத்தில் இடம் பெற்றுள்ளன. வைணவ சமயத்தில் ஆழ்வார்கள் பன்னிருவர் சென்று கண்டு வழிபட்ட இடங்கள் 'மங்களா சாசனம்' செய்யப் பெற்றதாகக் கூறுவர். அது போன்று இம்மூவர் முதலிகளும் சென்று கண்டு வணங்கிய தலங்கள் தேவாரப் பாடல் பெற்ற தலங்கள் என்று மக்களால் கூறப் பெறுகின்றது.

நமச்சிவாய முதலியார், சென்னை, சூளையிலுள்ள நிரஞ்சன விலாச அச்சுக் கூடத்தில் 1917–இல் இந்நூலை வெளியிட்டுள்ளார்.

## 511. நந்தனார் சரித்திரக் கீர்த்தனை

**அ.** *229:443*; **ஆ.** *1-154* ஏடுகள்; **இ.** 38 x 3 செ.மீ.; **ஈ.** 4-6 வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; பல ஏடுகளின் இடது பக்க ஓரப் பகுதிகள் உடைந்துள்ளன. **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

முற்குறிப்பு

விருத்தாசலம் படிக்கப்பட்ட பஞ்சவர்ண திருப்புகழ் ஆங்கிர வருசம் கார்த்திகை மாதம் 28 ஆம் நாள் எழுத ஆரம்பம் பண்ணினது. கந்தசாமி பிள்ளை படிக்கப்பட்ட நந்தனார் சரித்திரக் கீர்த்தனை.

தொடக்கம் .

**கதையின் வரலாறு**

திருவெண்ணீரு தரித்த பரமசிவனானவர் திருக்கொலு வீற்றிருக்கும் வெள்ளிமலையானது இமயமலையின் பக்கத்திலிருக்கின்றது. அது பெரியோர்கள் பரிசுத்த மனம் போலும் படிகம் போலும் பலவுலகிற் புண்ணியங்க ளெல்லாந் திரண்டுருண் டொருவடிவாகப் பிரகாசிக்கின்றது போலுமிருக்கின்றது. அதில் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களினோசையும் வித்தியாதரர்கள் வீணையோசையும் பாவனைகளுடைய முழக்கமும் வானதுந்துபி முழக்கமும் இடைவிடாதி ருக்கின்றன.

முடிவு

**சரணங்கள்**

திருவாசகமுந் திருக்கோவை பாடின வர்க்கும்
சீர்காழியி லுதித்த சிறந்த சம்பந் தருக்கும்
ஒரு மாதிடற் றூதுக் குகந்து விடுத்தவர்க்கும்
ஒருவரொப்பிலாத் திருநாவுக்கரசருக்கும்
உரியமறைக்கு முயர்கலைகட்கும் உரகரபதித்த - மூவன்
ஓதுசந்திர சூரியர் முனிவர் களுக்கும்
தீதிலாத பாவலர் முதலனைவர்க்கும்
திருநாளைப் போவா ....கும் செயமங்களம்
எங்கள் தில்லை மூவாயிரவருக்குச் சுபமங்களம்.

பிற்குறிப்பு

பிரசோர்ப்பதி வருஷத்துக்குச் செல்லும் ஆங்கிரச வருஷம் வைகாசி மாதம் 13 ம் தேதி வெள்ளிக்கிழமை சுக்குர வாரநாள்

பகல் 25 நாழிகைக்கு எழுத ஆரம்பித்தது. எடுத்தவர்கள் பார்த்தவர்கள். ... அப்படிப் படித்த போதிலும் .... எழுத்து விட்ட போதிலும் .... எழுதினதை மகாராசர்கள் பொறுத்துக் கொள்ளவும்.

## குறிப்புரை : திருநாளைப் போவார் எனும் நந்தனார் சரித்திரக்கீர்த்தனை

முதலில் எண் இல்லாத முதல் இரண்டு ஏடுகளில் முற்குறிப்பு இடம் பெறுகிறது. அடுத்து 1-3 ஏடுகளில் கதை வரலாறு கூறப்படுகிறது. பின் நூல் பாடல் வடிவில் இடம்பெறு கின்றது. ஒரு சில பாடல்கள் வேறுபட்டும், பாடவேறுபாடு களைக் கொண்டும் அமைகின்றன. நூல் முடிந்தபின் 155 ஆவது ஏட்டில் சிதம்பரக்கும்மி என்ற நூல் தொடங்கு கின்றது. முதலில் விநாயகர் துதி இடம் பெறுகின்றது. அடுத்து இதில் பாலசுப்பிரமணியனுக்குக் கும்மி, முக்குறுணி பிள்ளையாருக்குக் கும்மி, பொன்னம் பலவானனுக்குக் கும்மி, கோபாலகிருஷ்ணனுக்குக் கும்மி, சிவகாமி சந்நிதிக்கு வந்து கும்மியடித்தல், லட்சுமி தாயார் சந்நிதிக்கு வந்து கும்மியடித்தல், பூசைகள் செய்கின்ற தீட்சதர் வாழக் கும்மியடித்தல், சிதம்பரநாதனின் பெருமைகளைக் கூறிக் கும்மியடித்தல் முதலான செய்திகள் இடம் பெறுகின்றன.

சைவ சமயத்திற்குத் திருத்தொண்டு செய்த 63 பெரியோர்களின் குறிப்பு பற்றி முதன் முதலாகச் சுந்தரர் தேவாரம் தெரிவிக்கிறது. அத் தேவாரத்தினை அடியொற்றி சேக்கிழார் பெருமான் 63 நாயன்மார்களின் அருளியல் வாழ்க்கையையும், அவர்களுக்கு இறைவன் அருளிச் செய்த பங்கினையும் பெரியபுராணம் என்ற பெயரிலே சமைத்துள்ளார். இந்த 63 மூவரில் ஒருவர் தான் நந்தன். இந்நந்தனின் வரலாற்றைத் திருநாளைப் போவார் என்ற சருக்கத்தில் சேக்கிழார் மிகச் சிறப்பாகச் சொல்லுகிறார்.

நந்தனின் குடியிருப்பு, அவன் பண்ணையிடம் படும் இடர்ப்பாடுகள், தில்லை சென்று ஆட வல்லானைக் காண வேண்டுமென்று அவனுக்கிருந்த பேராவல், அவன் ஆசை நிறைவேறாமல் தடைப்பட இடர்ப்படச் செய்த

பண்ணையின் புன்மைச் செயல், அத்தருணத்தில் இறைவன் நந்தனாகத் தோன்றி நந்தனைத் தில்லைக்கு அனுப்பிவிட்டு நந்தனுக்கு இட்ட பணிகளை இறைவன் செய்த செயல்கள், தில்லையில் கோயிலுக்குள் அனுமதிக்காத இறைவன் நந்தியை விலகச் செய்து அருள் பாலித்த வரலாறு ஆகிய பெரியபுராணத்தின் கதைச் சாரத்தை நல்ல தமிழ்க் கீர்த்தனைகளாகக் கேட்போர் உள்ளம் உவகை பூக்கும் வண்ணம் நந்தன் சரித்திரம் என்ற பெயரில் இன்றும் இந்நூல் விளங்குகின்றது.

என்.எஸ்.கே. கலைவாணன் அவர்கள் தமிழ் மண்ணில் நந்தன் சரித்திரம் பெற்று இருக்கும் பேற்றினை உணர்ந்து, அதே போன்று தன்னுடைய பகுத்தறிவுக் கோட்பாடுகள் மக்களைச் சென்றடைய வேண்டும் என்ற நோக்கில் தன்னுடைய அங்கதப் படைப்பிற்கு நந்தனார் சரித்திரம் என்ற பெயருக்கு மாறான 'கிந்தனார் சரித்திரம்' என்று பெயரிட்டு அதனைத் தமிழகம் முழுக்கப் பரவச் செய்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

## 512. நாலாயிர திவ்யப் பிரபந்தப் பாடல்கள்

**அ.** ***458:705***; **ஆ.** *29* ஏடுகள்; **இ.** 33 x 2.5செ.மீ.; **ஈ.** *3-4* வரிகள்; **உ.** நல்ல நிலை; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பெரியாழ்வார் திருவாய் மலர்ந்தருளிய திருமொழி திருப்பல்லாண்டு

காப்பு

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா உன்சேவடி செவ்வித்
திருக்காப்பு

முடிவு

எல்லெ இளங்கிளியே இன்னமு முறங்குதியோ
சில்லென்று அனல... யம்மின் நங்கைமீர் போதறுகின்றேன்

வல்லையுன் கட்டுரைகள் பண்டேயுன் வாயறிதும்
வல்லீர்கள்... நானேதான் ஆயிடுக
ஒல்லைநீ போதாய் யுனக்கென்ன வேறுடையை
எல்லாரும் போற்றாரோ போற்றாதார் போத்தெண்ணிக்கொள்
வல்லானைக் கொன்றானை மாற்றானை மாற்றளிக்க
வல்லானை மாயவனைப் பாடலோர் எம்பாவாய் (5)

குறிப்புரை

நாலாயிரதிவ்யப் பிரபந்தத்தில் பெரியாழ்வார் திருமொழி, ஆண்டாள் திருப்பாவை, நம்மாழ்வார் விசயம், மதுரகவியாழ்வார் கண்ணிநுண் சிறுத்தாம்பு போன்ற பகுதிகளிலிருந்து சிலபாடல்கள் தொகுத்து எழுதப்பட்டுள்ள சுவடியாகும்.

சைவர்களுக்குப் பன்னிரு திருமுறை போன்றும், புத்த மதத்தாருக்குத் திரிபிடகம் போன்றும், சீக்கிய மதத்தாருக்கு ஆதி கிரந்தம் போன்றும், இசுலாமியருக்குக் குரான் போன்றும், கிறித்தவர்களுக்குப் பைபிள் போன்றும் இந்நூல் வைணவர்களுக்குத் திருமறையாக விளங்குவதால் தமிழ் வேதம் என்று போற்றப்படுகிறது.

இதனைப் பன்னிரு ஆழ்வார்கள் பாடியுள்ளனர். பேயாழ்வார் தொடங்கி மதுரகவி வரை இந்நூலில் அவரவர் பாசுரங்கள் இடம் பெற்றுள்ளன. இந்நூல் சிறந்த இசை நயமும், இலக்கியச் சுவையும் கொண்டது. இராமன், கண்ணன் போன்ற அவதார புருடர்களைப் பற்றிப் புகழ்ந்து பேசுவது. இந்நூலில் பல்வேறு தலங்களைப் பற்றிய பாடல்கள் இடம் பெறுகின்றன. இதில் இடம் பெற்ற தலங்கள் 'மங்களா சாசனம்' பெற்றத் தலங்களாகக் கருதப் பெறுகிறது. தேவாரத்தைப் போன்று இந்நூலுக்குப் பண்முறை கிடையாது. வைப்புத் தலங்களும் கிடையாது.

## 513. மூத்த திருப்பதிகம்

**அ.** ***393:637;*** **ஆ.** *116* ஏடுகள்; **இ.** 18.5 x 3செ.மீ.; **ஈ.** *11-12* வரிகள்; ஏட்டெண்கள் தெளிவற்றுள்ளன; ஏடுகள் முழுமையும் கால்பாகம் முறிந்துள்ளன; **உ.** கடினம்; **ஊ.** தெளிவற்றது; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி

அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

## குறிப்புரை

காரைக்கால் அம்மையாரின் திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் இச்சுவடியில் இடம்பெற்றுள்ளது. உடைந்த ஏடுகளைத் தவிர மீதி ஏடுகள் செல்லரிக்கப்படாமல் நல்ல நிலையில் உள்ளன. பதிகங்கள் தனித்தனிப்பாடல் எண்களைப் பெறுகின்றன. திருமுதுகுன்றம் பண்காந்தாரம், திருநுணாபண் காந்தாரம், திருகழுமலம் பண்புறநீர்மை, திருவானைக்கா திருவிளாகம் பண்கௌவுசிகம், திருவாலவாய் இயமகம், திருவீழிமிழலை இயமகம், சீகாழி மாலை மாற்று, திருக்கருப்பதியலூர், திருவிராகம் பண்-இந்தளம், திரு நள்ளாறு, திருவிராகம் பண்-இந்தளம், திருமறைக்காடு பண்-இந்தளம், திருப்பதிகம் பண்-இந்தளம், சேத்திரக்கோவை பண்-இந்தளம், திருவஞ் சைக்களம் பண்ணிந்தளம், திருமறைக்காடு குறுந்தொகை, கோயிற் குறுந்தொகை, திருப்புன்கூர்பதைக் கேடு முதலான தலைப்புகள் உள்ளன.

# 5. நீதி

## 514. அகராதி விவேக விளக்கம்

**அ.** ***521:810;*** **ஆ.** *11 - 15* ஏடுகள்; **இ.** 23.5 x 3 செ.மீ.; **ஈ.** *10 - 11* வரிகள்; **உ.** நன்று; ஒருசில துளைகள்; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

காப்பு

தூக்கம் போகணுந் தூய மொழிச்சொல்
வாக்குத் திடமா வரவேணும் ஞானமும்
ஆக்க மாயுஞ் செல்வமுந் தந்தெனைக்
காக்க வேணுங் கணபதி யேநமா

நூல்

அருட்டிருக் கோவல் வீரட்டேசு வர்க்கும்
ஆறுகுரு சொரூ பாயருள் விளக்க
இயம்பரு ளாறு முகஞா னாசிரியன்
ஈசுவர பத்தி யாதிநான் குருவாய்
உய்வகைச் சாதன சதுட்டய முளர்க்கு

முடிவு

வேதாக மச்சிரம் விளங்கு முண்மையினை
வையகத் துயர்வா மாசி லன்பருக்கு
வொப்பிலா தருளா லொருமொழி யுணர்த்த
வோதா தோது முயர்குரு பதங்களை
வெளவிலர் தன்பால் வணங்கி வாழ்த்துவையே.
அகராதி விவேக விளக்கம் முற்றும்.

குறிப்புரை

**செய்யுள் நடை.** இரண்டு காப்புப் பாடல்களை அடுத்து நூல் தொடங்குகிறது. பாடல்களுக்கு எண்கள் இல்லை.

## 515. அகராதி விவேக விளக்கம் முதலியன

**அ.** ***144:320;*** **ஆ.** *42* ஏடுகள்; **இ.** 23.5 x 3 செ.மீ.; **ஈ.** *7* - *10* வரிகள்; **உ.** ஓரளவு நல்ல நிலை; சில ஏடுகள் சிதைந்துள்ளன; **ஊ.** ஓரளவு கடினம்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

திருநாவுக் கரையர்முத லுயர்கோவற் குயர்கடவுள்
பெரியானைக் கணபதியின் இருதாளைப் பணிகுவனே.
... ... ... ...
அருட்டிருக் கோவல் வீரட்டே சுவரகுரு
ஆறு குருசொரு பாயருள் விளக்க
இயம்பரு ளாறு முகஞா னாசிரியன்
ஈசுர பத்தி யாதிநான் குருவாய்
உய்வகைச் சாதன சதுட்டயமு ளர்க்கு
ஊக்கமாய் ஞானத் துயர்சரி தாதியை... (ஏடு.1)

முடிவு

விண்ணப் பந்துதி மெய்யன் புறச்செய
வீரட் டேசுவர மெய்க்குரு வருளால்...
வையகத் துயர்வா மாசிலன் பருக்கு
வொப்பிலா தருளால் ஒருமொழி யுணர்த்த
வோதாதோது முயர்குரு பதங்களை
வெளிவிலா தன்பால் வணங்கிவாழ்த் துவையே.

*அகராதி விவேக விளக்கம் முற்றும்.*

கோவல வீரட்ட குருவருளா லேவிளங்கும்
தேவரெனு மாறுமுக தேசிகர்தம் - மாவலாய்ச்
செய்தவக்கை யீன்ற சிவசண் முகவாசான்
செய்பதிநூ லென்றே தெளி (ஏடு.5)

குறிப்புரை

அறிவும் ஒழுக்கமும் வளரத் துணைபுரியும் பல சிந்தனைச் செய்திகளைத் தொகுத்துக் கூறும் இந்நூல் அகர வரிசையில் அறிவுரைகளைக் கூறிச் செல்கிறது. தொடக்கமும் முடிவும் முறையாக உள்ள இச்சுவடியில் இடையே 4, 5 எண்ணுள்ள ஏடுகள் இல்லை.

இந்நூலினையடுத்து முறையற்ற 40 ஏடுகள் உள்ளன. அவற்றுள் போதனாச் சிறப்பு, நட்சத்திர மாலை, உண்மை ஞானநெறி, சிறப்பு நட்சத்திர மாலை, மல்லிகார்ஜுன சுவாமி தோத்திரம், வீட்டு நெறியுண்மை என்னும் நூல்களின் ஏடுகள் உள்ளன. 'விண்ட மலவீட்டை வருண்மையீதே சிவகிரி காசாறு முகரெனுந் தண்டாயுதக் கடவுளே', 'மாமறை யோது கோவலூர் ஆறுமுகதேவனே' என்னும் அடிகளையுடைய வேறு நூல்களின் பாடல்களும் உள்ளன. வழிபடு தெய்வ வணக்கம், நிட்டை சாதனை, மும்மணிக்கோவை, சொருபானந்த சித்தி, வீட்டுநெறி உண்மை, சித்தாந்த சிகாமணி, நிட்டானுபூதிசாரம், தூல பஞ்சாக்கரம், சிவபுரம் முதலானவை பற்றிய சைவதத்துவச் செய்திகள் பல ஏடுகளில் இடம் பெறுகின்றன. ***521:810*** என்ற எண்ணில் இடம் பெற்றுள்ள நூலை ஒத்து இந்நூல் அமைகிறது.

## 516. ஆத்திசூடி மூலமும் உரையும்

**அ.** ***279:501;*** **ஆ.** *1 - 16* ஏடுகள்; **இ.** 49.5 x 2.5 செ.மீ.; **ஈ.** 2 - 5 வரிகள்; **உ.** நன்று; சட்ட ஏடுகள்; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஆத்தி சூடி யமர்ந்த தேவனை
யேத்தி யேத்தித் தொழுவோம் யாமே.

இதன் பொருள் : ஆத்தி - திருவாத்திப் பூமாலை, சூடிய - தரிப்பவராகிய சிவபெருமான், அமர்ந்த - விரும்பிய, தேவனை - பிள்ளையாகிய... உனை. ஏத்திஏத்தி -

துதிசெய்து துதித்து, தொழுவோம் யாம் - வணங்குவோம் நாங்கள் என்றவாறு.

அறஞ் செயவிரும்பு
அறம் - தருமத்தை செய்வதற்கு
விரும்பு - நீ ஆசை கொள் (1)
ஆறுவது சினம்
ஆறுவது - உனக்குள்ளே தணிய வேண்டுவது
சினம் - கோபமே யாம். (2)

முடிவு

ஒன்னாரை - பகைவர்களை (107)
தேரேல் - நீ ஒருபோதும் நம்பாதே.
ஓரஞ் சொல்லேல் (108)
ஓரம் - பட்சதாபத்தை
சொல்லேல் - நீ யாதொரு வழக்கிலும் பேசாதே.

பிற்குறிப்பு

திருக்கோவலூர்க் குடியைச் சேர்ந்த கனகந்தலிருக்கும் கடைபுசாலி பேரன் மொட்டையகவுண்டன் - ஆத்திசூடியை எடுத்தவன் கொடுக்காவிட்டால் அவனை ஆறடி அடித்து விடுவேன்.

குறிப்புரை

**1 - 108 பாடல்கள் எளிமையான, தெளிவான உரையுடன்** எழுதப்பெற்றுள்ளன. சின்னக் குழந்தைகளுக்குச் சீக்கிரம் பதியும் வண்ணம் நீதிக் கருத்துகளை ஒரு தொடர்பாவில் சொன்ன நூல் ஔவையாரின் ஆத்திசூடியாகும். அகர முதல் ஔகாரம் ஈராக உள்ள பன்னிரு உயிர்க்கும், ககரம் தொடங்கி, னகரம் ஈராக உள்ள 18 மெய்க்கும் உள்ள எழுத்து ஒவ்வொன்றிற்கும் ஒரு பாடலென யாத்துள்ளார். தமிழில் அகரவரிசை (Index) தோன்றியதற்கான காலக்கட்டம் இதுவெனக் கூறலாம். இன்றும் தமிழகத்தில் தொடக்கப் பள்ளிகளில் முதல், இரண்டாம் வகுப்பு மாணவர்களுக்கு இந்நூல் பாடநூலாக அமைந்துள்ளதைக் காணலாம். கழக வெளியீடாக இந்நூல் பல பதிப்புகளைக் கண்டுள்ளது.

## 517. கொல்லாமை

**அ.** ***76:163;*** **ஆ.** *113* ஆவது ஏடு; **இ.** 17 x 2.5 செ.மீ.; **ஈ.** *8 - 10* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவு. **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

பற்றாய நற்குரு பூசைக்குப் பன்மலர்
மற்றோ ரணுக்களைக் கொல்லானும் யெண்மலர்
நற்றார் நடுக்கத் திடமுஞ் சித்தமு
முற்றாரு மாவி யமிர்திட முச்சியே

முடிவு

மயங்குந் தியங்குங் களவாய்மை யழிக்கு
மியங்கு மடவார் தம்மின்பமே யெய்தி
அயங்கும் நயங்கொண்ட ஞானத்து முந்தாரி
யங்கு மிடையறா வான மெய்துமே

குறிப்புரை

***1 - 8*** **பாடல்கள்.** பாடல்களுக்கு எண்கள் இல்லை. நூல் முற்றுப் பெற்றதற்கான குறிப்பு இல்லை.

## 518. கொன்றைவேந்தன்

**அ.** ***405:649;*** **ஆ.** *14* ஏடுகள்; **இ.** 42 x 3 செ.மீ.; **ஈ.** *4 - 5* வரிகள்; **உ.** ஏடுகள் பழையனவாய் சிதையும் நிலையிலுள்ளன; **ஊ.** தெளிவற்ற எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஆலயம் தொழுவது சாலவும் நன்று (2)
ஆலயம் - கோவிலுக்குப் போய்
தொழுவது - கடவுளை வணங்குவது
சாலவும் - மிகவும்
நன்று - நல்லதாகும்

இல்லற மல்லது நல்லறமன்று (3)

இல்லறம் - மனையாளோடு கூடிச் செய்யும் இல்லறமானது

நல்லறம் - எளதிற் செயத்தகும் அறமாகும்

அல்லது - இல்லற மல்லாத துறவறமானது

அன்று - எளிதிற் செயத்தகும் அறம் அன்றாகும்

முடிவு

... கொடுக்கிற கொடையும் சுருங்கும் - குறைவுபடும்

விருந்திலோர்க்கில்லை பொருந்திய ஒழுக்கம் (83)

விருந்திலோர்க்கு - விருந்தெதிர் கொள்ளாதவர்க்கு, பொருந்தியதாம்

பொருந்திய ஒழுக்கம் - இல்லறம்

இல்லை - இருந்ததாயினும் இல்லாததற்குச் சமானமாகும்.

குறிப்புரை

**2 - 8,3 பாடல்கள் உரையுடன் உள்ளன.** ஓரடியுள்ள ஒவ்வோர் பாடலுக்கும் அதனையடுத்து அருஞ்சொற் பொருள் அமைகின்றது. இந்நூல் ஔவையார் சிரார்களைக் கருத்தில் எண்ணி அவர்களுக்காகச் செய்த நீதி நூல்களில் ஒன்றாகும். எளிமையான சொற்களையும், எதுகை, மோனை நயங்களையும் இந்த ஒரு வரிப் பாடல்களில் காணமுடிகிறது. இவ் ஔவையார் சங்ககாலத்து அதியன் பழகிய ஔவையினின்று வேறானவர். ஆத்திசூடி, நல்வழி, தனிப்பாடல்கள் போன்ற பலவற்றைப் பாடிய பெருமை இம் மூதாட்டியாருக்கு உண்டு.

விநாயகர்துதியில் 'வாக்குண்டாம்' என்ற காப்புப் பாடலும், ''சீதக்களப செந்தாமரைப்பூ'' எனத் தொடங்கும் விநாயகர் அகவலும் அறியாதார் தமிழகத்தில் இல்லையென்றே கூறலாம்.

''குரங்கு ஏற்றுக் கொள்ளாத கொம்பும் உண்டோ'', ''கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு'', ''பெற்றாளே, பெற்றாளே பிறர் நகைக்கப் பெற்றாளே'' என்ற பாடல்களையும் அறியாதார் இல்லையெனலாம்.

## 519. திருக்குறள்

**அ.** *8:23;* **ஆ.** *1 - 107* -ஏடுகள்; **இ.** 26.5 x 3 செ.மீ.; **ஈ.** 5 வரிகள்; **உ.** நன்று; சில ஏடுகள் சற்றுச் சிதைந்துள்ள; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

### தொடக்கம்

**அகர முதல எழுத்தெல்லாம் ஆதி**
**பகவன் முதற்றே உலகு (1)**

### முடிவு

**படலாற்றா பைதல் உழக்குங் கடலாற்றாக்**
**காமநோய் செய்தஎன் கண். (5)**

### குறிப்புரை

முதற் குறட்பா தொடங்கி கண் விதுப்பழிதல் அதிகாரத்தில் 5 ஆவது குறட்பா முடிய மூலம் மட்டும் உள்ளது. இந்நூல் சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய பதினென் கீழ்க்கணக்கு நூல்களுள் தலைசிறந்ததாகக் கருதப்படுகிறது. இதனை இயற்றியவர் திருவள்ளுவர். அறம், பொருள், இன்பம் என்ற முப்பாலினைக் கொண்டது. *1330* பாடல்கள், *133* அதிகாரங்களாகப் பத்துப் பத்துப் பாடல்களைக் கொண்டு இலங்குகிறது. இந்நூலின் சிறப்பு வீடுபேற்றுப் பயனை மறைமுகமாக மூன்று பாலில் சொல்லியது என வல்லுனர்கள் விதந்து கூறுவர். ஆகையினால் ''முப்பாலின் நாற்பால் மொழியும் நூல்'' என ஒரு முது சொல் வழங்கப் பெறுகிறது.

தமிழுக்கும், தமிழர் நாகரிகத்திற்கும், வாழ்வியலுக்கும் வரலாற்று ஆவணமாக இந்நூலைக் கருதுவர். நல்ல நீதி நெறிகளை எடுத்துப் பொதுவாக விளம்புவதால் இதனைத் தமிழ்மறை என்றும் போற்றுவர்.

இந்நூலைத் திருவள்ளுவப் பயன், திருவள்ளுவ நாயனார் குறள், பொய்யாமொழி, வாயுரை வாழ்த்து, தெய்வமொழி, பொதுமறை என்றெல்லாம் சிறப்பித்துக் கூறுவர். திருவள்ளுவரைத் திருவள்ளுவ நாயனார், தெய்வப் புலவர்,

செந்நாப்புலவர், பெருநாவலர், முதற்பாவலர், மாதானு பங்கி, நான்முகனார் என்றெல்லாம் தமிழ் இலக்கியம் பாராட்டும்.

தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிமேலழகர். பருதியார், திருமலையார், மல்லர், பரிப்பெருமாள், காளிங்கர் போன்றோர் செய்த பத்து உரை நூல்கள் இந்நூலுக்குச் சிறப்பு சேர்ப்பனவாகும். இவற்றில் மணக்குடவர், காளிங்கர் பரிப்பெருமாள், பருதியார், பரிமேலழகர் ஆகியோரது உரைகள் மட்டுமே இன்று கிடைக்கப் பெறுகின்றன. இவற்றுள் பரிமேலழகர் உரையே செல்வாக்குப் பெற்ற ஒன்றாக விளங்குகிறது. திருவள்ளுவ மாலை என்ற பெயரில் பல்வேறு புலவர்கள் பாடிய தொகுப்பு நூல் ஒன்று இதன் சிறப்பை விளக்குகிறது.

## 520. திருக்குறள்

**அ.** ***120:232;*** **ஆ.** *1 - 129* ஏடுகள்; **இ.** 4 x 3 செ.மீ.; **ஈ.** *5 - 6* வரிகள்; **உ.** நல்லநிலை; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை.

தொடக்கம்

திருவள்ளுவ நாயனார் குறள்

திருவாக்கும் செய்கருமம் கைகூடும் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் - உருவாக்கும்
ஆதலால் வானோரு 'ானை முகத்தானைக்
காதலாற் கூர்வர்தங் கை

ஆயிரத்து முன்னூற்று முப்பது அருங் குறளும்
.... ... ....
ராய்கேட்க வீற்றிருக்க லாம்.

கடுகைத் துளைத்தெழு கடலைப் புகட்டி
குறுகத் தரித்த குறள்

அறப்பால், பொருட்பால், காமத்துப்பால், வீட்டுநெறிப் பால் ஆக நாலு பாலும், அதிகாரம் நூற்றுஅறுபத்து

ஐந்துக்குக் குறள் ஆயிரத்து அறுநூற்று ஐம்பது எழுதினது முற்றும்.

கடவுள் வாழ்த்து

அகர முதல... இறைவனடி சேராதார்

முடிவு

புணர்ச்சியின் விதும்பல்

உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
... ... ... ...
கண்ணின் துணித்தே கலங்கினாள் புல்லுதல்
எண்ணினும் தான்விதுப் புற்று (1290)

குறிப்புரை

**1 - 1290 குறள்கள்.** திருக்குறள் கடவுள் வாழ்த்து அதிகாரம் முதல், புணர்ச்சியின் விதும்பல் அதிகாரம் ஈறாக 129 அதிகாரங்களும், 1290 குறட்பாக்களும் முழுமையாக உள்ளன. முதல் ஏட்டின் முதற் பக்கத்தில் காப்புப் பாடல் ஒன்றும், திருவள்ளுவமாலைப் பாடலொன்றும் உள்ளன. அந்த ஏட்டின் பின்பக்கத்தில் 'கடுகைத் துளைத்து' என்னும் திருவள்ளுவமாலை பாடலை அடுத்து, அறப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்பவற்றோடு வீட்டுநெறிப் பால் ஆக நாலுபால் என்ற தொடரும், அதிகாரம் 165 க்குக் குறள் 1650 என்ற எண்ணிக்கையும் தெளிவாகவே அமைந்துள்ளன. இவற்றால், திருக்குறள் 4 பால்களால் இயன்றது என்பதும், 165 அதிகாரங்களை உடையது என்பதும், 1650 குறட்பாக்களையும் உடையது என்னும் புதிய கருத்தை இச்சுவடி மூலம் அறிய முடிகிறது. ஆனால் சுவடியில் 129 அதிகாரம் முடிய 1290 குறட்பாக்கள் மட்டுமேயுள்ளன. தொடக்கத்தில் 4 வெற்றேடுகள் உள்ளன.

## 521. திருக்குறள்

**அ.** ***66:94;*** **ஆ.** *1 - 301* ஏடுகள்; **இ.** 40 x 3 செ.மீ.; **ஈ.** 8 வரிகள்; **உ.** நல்ல நிலை; பல ஏடுகளில் தொளைகள் உள்ளன; **ஊ.** நல்ல எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி

அச்சாகவில்லை; இதைப்போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

## தொடக்கம்

### பாயிரம்

திருமா மணக்குடையார் தாமத்த ரெச்சர்பரிமேலர் நந்தி
பருதி கவிராசர் மல்லர் சிலைபெருமாள்
காளிங்கர் வள்ளுவனூற்கு உரையெழுதினோர்

இந்திரன் முதலிய விறையவர் பதங்களும் அந்தமிலின்பத் தழிவில் வீடும் நெறியறிந்தெய்துதற்கரிய மாந்தர்க் குறுதியென உணர்ந்தோர் எடுக்கப்பட்ட பொருள் நான்கு. அவை: அறம், பொருள், இன்பம், வீடு என்பன. அவற்றுள் வீடு என்பது சிந்தையுமொழியும். செல்லா நிலைமைத் தாலிற்றுறவரமாகிய காரண வகையால் கூறப்படுவதல்லது இலக்கண வகையாற் கூறப் படாமையின்...

### கடவுள் வாழ்த்து

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

## முடிவு

ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சம்
கூடுவ மென்ப தவா.

எ-து. இதுவுமது. தான் ஊடற்கண்ணே நிற்கவும் விட்டிருக்கவும் வல்லாரோடே கூடக் கடவேன் என்று என்னெஞ்சம்...

## குறிப்புரை

திருக்குறள் பரிமேலழகர் உரையுடன் கூடியது. பாயிரம் தொடங்கி ஊடல் உவகை அதிகாரத்தின் இறுதிப் பாடல் முடிய உரை தெளிவாக எழுதப்பட்டுள்ளது.

## 522. திருக்குறள்

**அ. 448:695; ஆ.** 63 ஏடுகள்; **இ.** 27 x 3.5 செ.மீ.; **ஈ.** 6 - 7 வரிகள்; **உ.** மிக நன்று; இடையிடையே சில ஏடுகள் இல்லை; **ஊ.** அழகான, தெளிவான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல், வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

திருக்குறள் முதலதிகாரம் - கடவுள் வாழ்த்து

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு (1)

கற்றதனா லாயபய னென்கொல் வாலறிவ
னற்றா டொழா அரெனின் (2)

முடிவு

பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின் (9)

நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற்
கண்ணல்ல தில்லை பிற (10)

குறிப்புரை

**1 - 71 அதிகாரங்களில் சில விடுபட்டுள்ளன.** முதலதிகாரம் கடவுள் வாழ்த்து, 2ஆம் அதிகாரம் வான்சிறப்பு, 3ஆம் அதிகாரம் நீத்தார் பெருமை, 4ஆம் அதிகாரம் அறன் வலியுறுத்தல். 5ஆம் அதிகாரம் இல்வாழ்க்கை, 6ஆம் அதிகாரம் வாழ்க்கைத் துணைநலம், 8ஆம் அதிகாரம் அன்புடைமை, 9ஆம் அதிகாரம் விருந்தோம்பல், 10ஆம் அதிகாரம் இனியவை கூறல், 11ஆம் அதிகாரம் செய்ந்நன்றி அறிதல், 13ஆம் அதிகாரம் அடக்கமுடைமை, 14ஆம் அதிகாரம் ஒழுக்கமுடைமை, 15ஆம் அதிகாரம் பிறனில் விழையாமை, 16ஆம் அதிகாரம் பொறையுடைமை முதலான 38 அதிகாரங்கள் மட்டும் உள்ளன. இரண்டாவதாகிய பொருட்பாலில் அரசியல் 39ஆம்

அதிகாரம் இறைமாட்சி, 40ஆம் அதிகாரம் கல்வி, 41ஆம் அதிகாரம் கல்லாமை, 42ஆம் அதிகாரம் கேள்வி, 43ஆம் அதிகாரம் அறிவுடைமை, 44ஆம் அதிகாரம் குற்றங்கழைதல் முதலான அதிகாரங்களும் உள்ளன. ஒன்று முதல் 16 வரை மட்டுமே ஏடுகளுக்கு எண்கள் அடைப்பில் தரப்பட்டுள்ளன. முதலில் இரண்டும், இறுதியில் மூன்றும் ஆக ஐந்து வெற்றேடுகள் உள்ளன.

## 523. நாலடியார்

**அ.** *31:53;* **ஆ.** *1 - 169* ஏடுகள்; **இ.** 26 x 3 செ.மீ; **ஈ.** *6 - 9* வரிகள்; **உ.** ஈற்றிலுள்ள ஏறக்குறைய *60* ஏடுகளைத் தவிர பிற அனைத்தும் நல்ல நிலையிலுள்ளன; **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப்போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பாயிரம்

வானிடு வில்லின் வரவறியா வாய்மையாற்
கானிலந் தோயாக் கடவுளை - மாநிலஞ்
சென்னி யுறவணங்கிச் சேந்துமெம் முள்ளத்து
முன்னி யவைமுடிக வென்று.

நூல்

அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும் - வறியராய்ச்
சென்றிரப்ப ரோரிடத்துக் கூழெனிற் செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று.

முடிவு

நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை
நிலைகலக்கிக் கீழ்இடு வானும் - நிலையினும்
மேன்மேல் உயர்த்து நிற்பானும் தன்னைத்
தலையாகச் செய்வானும் தான்.

குறிப்புரை

**பாடலும் உரையும் உள்ளன.** பாயிரம், அறத்துப்பால் செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, மேன்மக்கள், பெருமை, தாளாண்மை, அறிவுடைமை, கயமை எனத் தொடங்கி அறன் வலியுறத்தல், துறவு, சினமின்மை, பொறையுடைமை என முறையாக அனைத்துப் பாடல்களும் உரையுடன் உள்ளன. இந்நூல் சமண நீதி நூல்களுள் சிறப்புறப் பேசப்படும் நூலாகும். திருக்குறளோடு இணைத்து, 'நாலும் ரெண்டும் சொல்லுக் குறுதி' என்று வழங்கப்படும் பழமொழி இந்நூலினுடைய சிறப்பை வெளிக்காட்டுகிறது. 400 பாடல்களைக் கொண்ட இந்நூல் வெண்பாவால் ஆகியது. அறம், பொருள், வீடுபேறு என்ற வகையிலே பகுக்கப் பெற்றுள்ளது.

## 524. நாலடியார்

**அ.** ***273:495;*** **ஆ.** *1 - 21* ஏடுகள்; **இ.** 35 x 2.5 செ.மீ.; **ஈ.** 5 - 7 வரிகள்; **உ.** ஏடுகளின் வலதுபக்க ஓரப் பகுதிகள் சிதைந்துள்ளன. **ஊ.** தெளிவு; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

அதிகார அடைவு

செல்வநிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை என்னு மதிகா.... லைவாம். **அ**...தி... யாதெனில் முன்பு யாக்கையுளதாய் அதில் நிலையாமையை உணர்த்தி அது நிலை ...ன்ற பின்பு இளமைப் பருவத்திலே, ... செல்வத்தில் நிலையாமையை யுணர்த்த வேண்டி... வெனில், யாக்கை புருசாயுசு நூறு வயசு என்றும், இளமைப் பருவம் முப்பத்திரண்டு வயதென்றும் ஒரு நியமங்களுண்டு.

முடிவு

கண் மூன்றுடையான் பிழைத்தலாவது - காமனை யுருவழித்துப் பின்பு மவனை யுளனாக்கினான் னென்பது கொண்டு காகம் வருத் தஞ்செய்தற்குக் காரணம் குயில் முட்டையிட வதனை வளர்த்துக் கூவுவித்ததாம் பையரவு வருத்தஞ் செய்தற்குக் காரணம்

தான் விழுங்கிய மதியைச் செரிப்பித்து விடாம லதனைப் பிழைப்பித்துவிட்டது. தூய வருத்தஞ் செய்தற்குக் காரணம் தன்னைப் பெற்றிப் பிடி வருந்தும்படி வைத்தாள் என்பது (40)

நாலடியுரை எழுதி முடிந்தது.

குறிப்புரை

நாலடியார் முழுமைக்கும் உரைவிளக்கம் தரப்பட்டுள்ளது. தொடக்கத்தில் ஒரு வெற்றேடும் இறுதியில் 4 வெற்றேடு களும் உள்ளன.

## 525. நாலடியார் உரை விளக்கம்

**அ.** ***3:18;*** **ஆ.** *54 - 202* ஏடுகள்; **இ.** 32 x 3 செ.மீ.; **ஈ.** 4 - 5 வரிகள்; **உ.** நன்று; இடையிடையே சில ஏடுகள் இல்லை; ஓரிரு துளைகள் உள்ளன; **ஊ.** அழகான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

பல்லான்ற கேள்விபயன்

பல் - பலபல; ஆன்ற - அமைந்த; கேள்விப்பயன் - கல்வியினுடைய பயனை; யுணர்வார் - அறியுமவர்கள்; வீயவும் - சாகவும்; கல்லாதார் - கல்வியில்லாக் கசடர்; வாழ்வது - வாழ்ந்திருக்கிறது; அறிதிரேல் - அறிய வேண்டு வீரேயாகில்; கல்லாதார் - கற்காதவர்கள்; சேதனமென்னும் - அறிவென்று சொல்லும்; அச்செறு - அந்தச்சாரம்; அகத்தின்மையால் - உள்ளேயில்லாதபடியினாலே; கோவென்று - செற்றையென்று; கொள்ளாதாம் உண்ணமாட்டாதாம்; கூற்று - யமன்;

கற்றோர்கள் வீழ்வதும் கல்லாதார் வாழ்வதும் பழவினைப் பயன் என்பதாம்.

முடிவு

கண்மூன்றுடையானும் - சிவனும்; காக்கையும் - காகமும், பையரவும் - படம்பொருந்திய பாம்பும்; யென்னீற்றயாயும்

- என்னைப் பெத்த தாயும்; பிழைத்ததென் - குற்றம் செய்யவில்லை.

காமனை எரித்தும் பின்பு சீவன் கொடுத்தது சிவன். குயிலை வளர்த்துவிட்டது காகம். சந்திரனை விழுங்கிச் செருப்பித்துக் கொள்ளாமல் விட்டது பாம்பு. தன்னைப் பெற்று இப்படி வருந்தவிட்டது தாய் என்பதாம். தலைமகள் பிரிவாற்றாமையைத் தோழிக்குச் சொல்லியது (10) ஆக 400. நாலடியார் எழுதி நிறைந்தது. முற்றும்.

குறிப்புரை

**உரையுடன் கூடியது,** 105ஆம் பாடலின் உரையிலிருந்து தான் நூல் உள்ளது. முதல் 104 பாடல்களில் உரை இல்லை. மூல பாடல்கள் தரப்படாததால் ஒவ்வொரு பாட்டின் முதலடியின் தொடக்கம் இங்குத் தலைப்பாகத் தரப்பட்டு, பாடலின் முழுமைக்கும் பதவுரை தரப்படுகின்றது. அறியாருமல்லா, தம்மை இகழ்வாரை, உடையாரிவரென், அவமதிப்பும், இசைந்த சிறுமை, எத்துணையானும், உண்டாய பொழுதின், பிறந்த குலம், நீர்மையேயன்றி, கடகம் செறிந்த, இம்மையும் நன்றாம், பாடமே ஓதி, பொத்தகமே சால, வெறுமை யிடத்தும், உள்ளமொருவன் முதலான தலைப்புகள் உள்ளன. குறைச் சுவடி யாயினும் முடிவு உள்ளது. அச்சாகியுள்ள தருமர், பதுமனார் உரையினின்றும் இது வேறுபட்டதாகத் தெரிகிறது.

## 526. நீதிசாரம்

**அ.** **258:478; ஆ.** 1- 40 ஏடுகள்; **இ.** 36 x 3 செ.மீ.; **ஈ.** 4 - 5 வரிகள்; **உ.** மிக நன்று; **ஊ.** கிறுக்கெழுத்து; கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

பிரணம்மியர் சர்வலோகேசம்
தேவதேவே யீசுரம் அரிம்
நீதிசாரம் பிரவச் சாமி
சர்வ சாஸ்த்திர சமா கிறுதம்
அக்தம் சாரசற் குருவாகு நன்பகவனே

நமஸ்கரிக்க சர்வ சாஸ்திரங்களிலுஞ் சொல்லியதில் சாரமாயுள்ள வாக்குகளை எடுத்தலோ கோ உபகாரத்தினாய் கொண்டு பெறவுள்ளன. சுறுாய தர்ம தர்ம சர்வ சிவம். சுறுத்துவ கைவ விசாரிய தர்ம ஆதமனாம் பிரதி கூலானி பரய சரந் நவி சாரய அர்த்தம் தர்மா தர்மங்களெல்லாம் கெட்டு அதினே புத்தி கொண்டு விசாரிச்சு ஆத்மாவின் குணவிரோதமாய் காரியங்களை ஆரோடுஞ் செல்லருதெந் நறிகாச ஆபரிச்சயா நகர் தவியம்...

## முடிவு

வெங்கடாசலபதி, மாயா, ஆயா, வெண்ணையுண்டநேயா, அண்டர்களேத்துந் தூய உலகமுண்டவாயா, ஞான உபாய்யா, பக்தர்கள் சகாயா, சதுர்ப்புசா, கெருடத்துவசா, கோதண்டா, புண்டரிகவரதா, ஓம் விஷ்ணு, ஓம் பாரதபார் பரமதயாளா, அரிகிருஷ்ணா, அரிவிஷ்ணு வெனத் துதிக்கின்றேனே. விஷ்ணு தோத்திரம் முற்றிற்று.

### குறிப்புரை: லச்மணப் பெருமாள் நாடார் நீதிசாரம்

விஷ்ணு பெருமானைத் துதிக்கும் மந்திரங்கள் நூல் முழுமையும் இடம் பெற்றுள்ளன. இறைவன் வாயுவாகி நிற்றல், பஞ்சபூதமாகி நிற்றல், அக்கரவிலக்கணம், சோதிட சாத்திரம், தருமசாத்திரம், யோகசாத்திரம், ஆரூடம், கௌத்துவவாதம் முதலிய அறுபத்திநான்கு பரசமயம் பற்றியும், இறைதத்துவம் பற்றியும் நூலுள் பேசப்படு கின்றன. தொடக்கத்திலும் இறுதியிலும் ஒவ்வொரு சட்ட ஏடுகள் உள்ளன.

## 527. பகவத்கீதை

**அ. 51:76; ஆ.** 1 - 74 ஏடுகள்; **இ.** 41 x 3.5 செ.மீ.; **ஈ.** 7 வரிகள்; **உ.** நன்று; 25, 27, 52, 70 என்னும் ஏடுகள் இல்லை; இடையிடையே சில ஏடுகள் உடைந்தும் காணப் பெறுகின்றன; **ஊ.** தெளிவு; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது. இந்தச் சுவடி அச்சு நூலினும் வேறானது.

## தொடக்கம்

### முதலாவது அத்தியாயம்

அய்வகைப் பொறியு னான்கு கரணமுங் குணங்கள் மூன்றுஞ்
செய்வினை யிரண்டு மொன்றி ... நீ திகைப்ப நின்ற
பொய்யிருள் அகல்ஞானப் பொருட்கதிர் பிரித்த புத்தே
கைவள ராழிச் செங்கட் கண்ணனைக் கண்ணுள் வைப்பாம் (1)

பன்னருள் விசையன் கேழ்ப்ப வாளர் ரதன்மே லிட்டு
மின்னவிர்ப் படைக்கை மாய னுரைத்தமெய்ப் பொருளை எல்லாம்
பன்னரு மறைகள் கோத்த பழமுனி பணித்த வண்ண
மென்னறி வளவினாலே தமிழினா லியம்ப லுற்றேன் (2)

## முடிவு

சொன்ன இவைபோ யடங்கிடவே தோன்றுங் களிப்புங்
காமமுமுண்
டென்ன தியானென் கின்றதுவு மெரிபோல் வெகுளி யொருவலியு
முன்னல் தவிர்ந்து சாந்திபெறுஞ் சாந்தி பெறலே யோரிடத்தும்
பின்ன மடையா தொன்றாகி நின்ற பொருளின் பேருருவாம் (44)

## குறிப்புரை

1 - 559 பாடல்கள்.

| அத்தியாயம் எண் | அத்தியாயம் பெயர் (கவி) | விருத்தப் பாக்கள் |
|---|---|---|
| 1. | வேஷ அத்தியாயம் | 30 |
| 2. | சாங்கியோக அத்தியாயம் | 60 |
| 3. | தேய பூசை அத்தியாயம் | 26 |
| 4. | சம்பிரதாய அத்தியாயம் | 31 |
| 5. | ஞானகமை அத்தியாயம் | 19 |
| 6. | யோக அத்தியாயம் | 37 |
| 7. | விசுவகுரச அத்தியாயம் | 25 |
| 8. | எவகைவினா அத்தியாயம் | 18 |

| | | |
|---|---|---|
| *9.* | மாயாவிகார அத்தியாயம் | *23* |
| *10.* | விபூதி அத்தியாயம் | *26* |
| *11.* | விசுவரூப அத்தியாயம் | *46* |
| *12.* | பத்ததி அத்தியாயம் | *12* |
| *13.* | க்ஷேத்திர சேத்திர கருண அத்தியாயம் | *31* |
| *14.* | குணாதி அத்தியாயம் | *22* |
| *15.* | பிரபஞ்ச அத்தியாயம் | *25* |
| *16.* | தேவர் அத்தியாயம் | *21* |
| *17.* | குணவிவகார அத்தியாயம் | *25* |
| *18.* | சங்கிஷேப அத்தியாயம் | *80* |

ஆக அத்தியாயம் *18* க்குத் திருவிருத்தம் *559*.

பகவத் கீதையானது மகாபாரதத்தின் இறுதிப் பகுதியில் உள்ள யுத்த பருவத்தில் உள்ளது. இது குரு சேத்திர யுத்தத்தின் தொடக்கத்தில் போர்க்களத்தின் மத்தியில் மனம் கலங்கி நின்ற அர்ச்சுனனுக்குப் பகவான் கிருஷ்ணர் உபதேசித்தது. இது *18* பகுதிகளை உடையது. இவை மூன்று பிரிவாகப் பிரிக்கப்பெற்றுள்ளன. இவை கர்மயோகம், பக்தியோகம், ஞான யோகம் என்று வழங்கப் பெறும். இதனைப் பட்டனார் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். இதனைப் பலரும் பல்வேறு மொழிகளில் பெயர்த்துள்ளனர்.

## 528. பகவத்கீதை

**அ.** ***104:208*; ஆ.** *1 - 206* ஏடுகள்; **இ.** 22.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *8 - 9* வரிகள்; **உ.** நன்று; சில ஏடுகள் செல்லரிக்கப் பட்டுள்ளன; **ஊ.** அழகிய தெளிவான எழுத்து; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

ஒருபத மடித்தொரு பதம்பொற் றேர்மிதித்
தொருகையிற் குசைகசை யொருகை ஞானமாய்ப்
பொருகைவில் விசயனைப் புரிந்து நோக்கிமெய்
தருபொரு ளுரைத்தவர் சரணம் போற்றுவாம்.

முடிவு

விண்ணினாற் கீன்றமுகிற் படமூடித்
தன்னுடைய விழியதனை மறைப்ப மேற்போய்
கண்ணினா லூடுருவக் காண்கிலாதான் கதிரோனை
மறைத்தகார் கருதி னாப்போல்
வெண்ணிலா தவர்களெல்லா முன்னைமெய்யே யிறந்துபிறத்
துழல்கின்றா யென்றே கொள்ள
பண்ணினா யுன்னுடைய பான்மை பார்க்கின்
பற்றுண்டோ வீடுண்டோபரம மூர்த்தி

குறிப்புரை

பாட்டும் உரையும் உள்ளன.

1. வேச அத்தியாயம், 2. சாங்கியோக அத்தியாயம், 3. கர்மபிரமயோக அத்தியாயம், 4. ஞானகர்மயோக, 5. சனசனியாசயோக, 6. அப்பியாச, 7. பரமஅங்கிச விஞ்ஞானயோக, 8. அட்சர பிரமயோக, 9. ராசவித்தியாராச சூயயோக, 10. விபூதி விஸ்தாரயோக, 11. விசுவரூப, 12. பத்தியோக, 13. பிருகிருதி புருசயோக, 14. குணத்திரைய விபாக, 15. புருஷோத்தம, 16. தேவாசுரம் பரிசித்து பிரிதிவாதன மோட்ச யோக, 17. சிரத்தாத்திரைய விபாக, 18. சகலோப நிடத்துப் பிரதிவாதன மோட்ச யோக அத்தியாயம் என்று பதினெட்டு அத்தியா யங்களும், அடுத்து இறுதி ஆறு ஏடுகளில் உரைகளுடன் கூடியதாக பதினொாட்டாவது அத்தியாயத்தில் அறுபத்தி ரெண்டு பாட்டுக்கு மேல் எழுபத்தாறு பாட்டு பரியந்தம் என்ற தலைப்பும் காணப்படுகின்றன. அத்தியாயங்களுக்கு இடையிடையே விடுபட்ட பாடல்களைத் தொகுத்து இறுதியில் புறப்பாட்டாக அமைத்துள்ள நிலையையும் காணமுடிகின்றது. 11 ஆவது அத்தியாயத்தில் 27 பாட்டுக்குப் பிற்பாடு என்றவாறு அமையும் தலைப்பு இதனை உணர்த்து கின்றது.

## 529. பகவத்கீதை

**அ.** ***152:332*; ஆ.** *43 - 228* ஏடுகள்; **இ.** 30.5 x 4 செ.மீ.; **ஈ.** *10 - 11* வரிகள்; **உ.** நன்று; ஒருசில ஏடுகள் சற்று உடைந்துள் ளன; **ஊ.** ஓரளவு கடினம்; **எ,** குறை; **ஏ** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதுபோன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

எரிநிகர் வெகுளி பொங்க
　　மயக்கம்வந் தெய்து மெய்தந்
தெரிபவை சிதையு முள்ளந்
　　தெரிந்தவை சிதைந்த போதே
யுரியதன் னுணர்வு மாயு
　　முணர்வுமாய்ந் தொழிந்த வாறே
யரியவென் றறிஞர் பேசு
　　மனைத்துமாய்ந் தொழியு மன்றே (53)

முடிவு

சேயமா மதுரை நின்றுஞ் செம்மயைாய்ப் பாடித் தேடி
யாயனாய் மாய னார்தா மவதரித் தருளி னாலே
போயினான் மொழிந்த கீதை புலன்கட லடைத்தார்க் கன்றித்
தூயமா தவர்க்கு மிந்தச் சுருதிநூல் கருத்தொ ணாதே

என்பது செவ்விய பெருமையுள்ள மதுராபுரி யினின்றுந் திருவவதாரஞ் செய்தருளிச் செம்மையுள்ள திருவாயர்பாடி தேடி இடையனாய்ப் போய்க் கிருபையினாலே அந்த அவதாரக் காலத்திலே யருளிச்செய்த கீதையானது பஞ்சேந்திரியக் கடலையடைத்தவர்களாலே நினைக்கலாம். அவர்களல்லாமல் மற்ற சுற்றமான பெரிய தவசு செய்கிறவர்களுக்குமிந்த வேதாந்த நூலை நினைக்கப் படாதென்றவாறு. *(71)*

ஆகவத்தியாயம் 1க்குத் திருவிருத்தம் 549.

பகவத்கீதை முடிந்தது.

குறிப்புரை

பகவத்கீதை என்னும் நூல் இரண்டாவது சாங்கியயோக அத்தியாயத்தின் 53 வது பாடல் முதலே இச்சுவடியில் காணப் பெறுகிறது. 18 ஆவது அத்தியாயம் முடிய நூல் முடிவு பெற்றுள்ளது. அச்சுநூலினின்றும் சிற்சில வேறு பாடுகளும் சில கூடுதலான பாடல்களும் காணப் பெறுகின்றன. 43 ஆவது ஏடு முதலே தொடங்குகிறது. இடையிடையே சில ஏடுகள் இல்லை. பக்க எண் முதலிய அறியப் பெறாத நிலையில் 5 ஏடுகள் இறுதியில் உள்ளன.

## 530. விவேக சிந்தாமணி

**அ.** ***91:192;*** **ஆ.** *1 - 171* ஏடுகள்; **இ.** 20 x 3 செ.மீ.; **ஈ.** 6 - 8 வரிகள்; **உ.** ஓரளவு நல்லநிலை; ஏட்டின் முற்பகுதியில் சிறிதாகவும், இறுதிப் பகுதியில் அதிக அளவும் சிதைவு ஏற்பட்டுள்ளது; **ஊ.** நன்று; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற வேறு நூல் அச்சாகி யுள்ளது.

தொடக்கம்

விவேக சிந்தாமணி முதலாவது சொரூபானுபவ உபதேச பிரகரணம் பருமத - பிமலை பத்திமாற்காணு சந்தானுபவ மான சற்குண ரத்தினாகரமாய் வெகுவித சாக்கியங்களி னாலும் அறியப்படாதது மாயக்கிருஷ்ட்டமான புத்தி சாகத்தினாலே போத நிதானப் பிரமக்கியானம் சாதிக் கிறதுக்கு. காதவ மலகம் போல வுந்திறிவித சிரவணத் தினாலே கூறப்படாத மோட்சலட்சுமியைக் கூடுகிறதுக்கு அனுகூல மானதாய்ச் சங்கராச்சாரிய சுவாமி யாருடைய முகமலத்தருலிருந்து வந்த சகலவரும் மத்தியாபாய மானந்த வனூராகிய கைவல்லியத்திலே நிரந்தரம் போகிக்கின்ற வராயிருக் கின்ற முகுந்த யோகியானவர்.

காப்புச் செய்யுள்

திருநாவுக் கரைசர்முதல் உரைகோவற் குயர்கடவுள்
பெரியானைக் கணபதியின் இருதாளைப் பணிகுவனே (1)

கூரறியசுரர்முனிகளும் பெரிதெனும் உயர்கதியினைத்
தாரோமென அருளுருவமா மாறுமுகனடி பணிகுவாம்

முடிவு

முற்பதினைஞ் சுழுனைத்துப் பூரணமா மென்னு
மூசல்இருக் குமென்மொலிந்து மோசம் சொல்வர்
பிற்பதினைஞ் சும் பெருத்தத் தேய்ந்த தாலே
பெரியமுகல் எங்கிருக்கும் பேதை மக்காள்
முற்பதினைஞ்சும் முனைத்துப் பூரணமா மென்னும்
முகமதித்த அருந்தவத்தோர் முக்தி காண்பர்
பிற்பதினைஞ்சும் பெருத்துத் தேய்ந்து
....... ..... ..... .....

குறிப்புரை

விவேக சிந்தாமணி என்னும் இச்சுவடியில்,

1. சொரூபானுபவ உபதேசப் பிரஹரணம்
2. சுவானுபவத்திடப் பிரகரணம்
3. தத்துவ திருஷ்டிப் பிரகரணம்
4. ஈசுவர தனித்திரையப் பிரகரணம்
5. லிங்கத் தேக விவரணப் பிரகரணம்
6. தூலதேக விவரணப் பிரகரணம்
7. மகாகாரண சரீர நிரகரணப் பிரகரணம்
8. சர்வம், பிரம்ம மயிதி விவரணப் பிரகரணம் என்னும் எட்டுத் தலைப்புகளில் பூர்வபாகம் முழுமையாக இருக்கிறது.

உத்தர பாகம் என்னும் பகுதி,

1. சங்காரக் கிரகம் முதலாவது தூலதேக நிர்சனப் பிரகரணம்
2. லிங்கதேக நிர்சனப் பிரகரணம்
3. காரணதேக நிர்சனப் பிரகரணம்
4. மகாகாரண நிர்சன சரீர பிரகரணம்
5. ஈசுவரதனித்திரை பூர்வகப் பஞ்சப்பிரயை விவரணப் பிரகரணம்
6. ஈசுவர மகாகாரண தேக நிர்சனப் பூர்வகதர்ப்ப பதார்த்த சோதனைப் பிரகரணம்

7. சீவாரம்ப மார்மதா தார்மிய பூர்வ முத்தி சொரூப மீப விவரணப் பிரகரணம்

8. வேதகண்டன பூர்வக அத்தோயித சொருபவ பிரகரணம்

9. மகா அத்தோயிதயப் பிரீதிவாதனப் பிரகரணம்

10. சச்சிதானந்த பதத்திரைய வியாக்யானப் பிரகரணம்

என்னும் பத்துத் தலைப்புகளில் அமைந்துள்ளது. ஆயினும் இறுதிப் பாகம் முடிவு பெறவில்லை.

## 531. விவேக சிந்தாமணி

**அ.** *134:272;* **ஆ.** *1- 25* ஏடுகள்; **இ.** 36 x 2.5 செ.மீ.; **ஈ.** *3 - 4* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** தெளிவான அழகிய எழுத்து; **எ.** முழுமை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடத்தில் அச்சாகியுள்ளது.

முற்குறிப்பு

*1916* வருஷம் சித்திரை மாசம் *6* தேதி மாவடி ஐயப்ப மூப்பனார் குமாரன் குருசாமி வாசித்து வருகிற விவேக சிந்தாமணி.

தொடக்கம்

ஆபத்துக் குதவாப் பிள்ளை
அரும்பசிக் குதவா அன்னம்
தாகத்தைத் தீராத் தண்ணீர்
தரித்திர மறியாப் பெண்டிர்
கோபத்தை யடக்கா வேந்தன்
குருமொழி கொள்ளாச் சீடன்
பாபத்தைத் தீராத் தீர்த்தம்
பயனில்லை ஏழுந் தானே (1)

முடிவு

தன்னைத்தான் புகழ்வோருந் தன்குலமே
பெரிதெனவேதா னஞ்சொல் வோரும்
பொன்னைத்தான் தேடிவைத்து அறஞ்செய் யாமல்
அதைக் காத்துப் போற்றி னோரும்
பின்னைபோல் மனையாளை வீட்டில் வைத்து
வேசை சுகம் விரும்பி னோரும்

அன்னைபிதா பாவலரைப் பகைப்போரும்
அறிவில்லாக் கசட ராமே (100)

குறிப்புரை

**1 - 100 பாடல்கள். அல்லல் போம் வல்வினை போம்** எனும் காப்புப் பாடல் முதல் ஏட்டில் உள்ளது. அடுத்து நல்லோர் இயல்பு, கோளினர், வறுமை, இடுக்கண், வேந்தர், பகை, மழை, நட்பு, கடமை, பயனிலா ஏழு, உலகோர் செயல், வேசை, கற்புடை மகளிர், பெரியது, கடும்பசி, கற்றோர், பிறப்பால் பயனின்மை, அற்பர் இயல்பு, இடர்தருவன, அமுதம், அரியது, குலந்தனிற் பெரியது, புத்தி கேளாதோர், ஊழ்வினை, சான்றோர் இயல்பு, ஒழுக வேண்டிய நெறிமுறை, இன்பம், நன்மனை, பொன், புல்லியரியல்பு, தரித்திரம், செவிக்கின்பம் முதலான பொருண்மைகளில் சிறந்த கருத்துகள் கூறப்பெறுகின்றன. முதலிலும் இறுதியிலும் இரு சட்ட ஏடுகள் உள்ளன.

## 532. விவேக சிந்தாமணி

**அ.** ***526:848;*** **ஆ.** *141 - 151* ஏடுகள்; **இ.** 20.5 x 3.5 செ.மீ.; **ஈ.** *8* வரிகள்; **உ.** நன்று; **ஊ.** கடினம்; **எ.** முழுமை; **ஏ.** அச்சாகவில்லை.

தொடக்கம்

குரங்குநின்று கூத்தாடிய கோலத்தைக் கண்டு
அரங்கமுனிக் காய்ப்பாடிக் கொண்டாடிய வதுபோல்
கரங்கள்நீட் டியபெரிய கசடரைக் கண்டு
சிரங்களாட்டியே மெச்சிடும் நிவிலார்ச் செய்கை (1)

முடிவு

அன்னமிக உண்பானும் ஆடைஅழுக் காவானுந்
துன்னே யிருந்து நன்றாய்த் துலங்கானும் - முன்னமே
காலைத் துயில்வானுங் கண்டிரோ மூதேவிக்
காலைய மாமென்றே அறி (66)

குறிப்புரை

**1-66 பாடல்கள்.** கூரிய செவ்விய சொற்களால் ஆனவை. எளிமையும் இனிமையும் உடையவை. அறிவுடையோர் செயல்கள், அருமையானவை, அறிவின் பெருமை, எத்தன்மையராய் இருத்தல் வேண்டும், எத்தன்மையராய் இருத்தல் கூடாது, துன்பந்தரும் செயல் கள், மூடனை மூடன் கொண்டாடிய முறைமை, தன்னிலமை கெடுதல், நல்லோர் சேர்க்கை, புல்லருக்குச் செய்யும் உதவி, மக்களின் சிறப்பு, மனத்தை நோய் அண்டாது பேணுதல், அற்பரைச் சேர்ந்தோர் வாழ்வு, ஏற்றுக் கொள்ளத் தக்கவை, அன்பு காட்ட வேண்டிய தன்மை முதலான உட்கூறுகளைக் கொண்டு நீதிக் கருத்துகள் கூறப்படுகின்றன.

## 533. ஸ்ரீமத் பகவத்கீதை

**அ.** ***418:662;*** **ஆ.** *1 - 173;* **இ.** 36 x 3.5 செ.மீ.; **ஈ.** *6 - 9* வரிகள்; **உ.** இடையிடையே ஏடுகள் இல்லை; ஏடுகள் சில முறை மாறியும், சில சிதைந்தும் உள்ளன; **ஊ.** சுமார்; **எ.** குறை; **ஏ.** இந்தச் சுவடி அச்சாகவில்லை. இதைப் போன்ற நூல் வேறிடங்களில் அச்சாகியுள்ளது.

தொடக்கம்

> வில்லிநல்லா ரென்பேர் விளம்பியவை தாமரையிற்
> அல்லியகீ தைக்குரையுஞ் சொல்லநெஞ்சே - வல்ல
> குருகூராழ் வார்தடத்தாட் கோக நகர்வாழுங்
> குருகூராழ் வார்தடத்தாட் கூடுகர்

முடிவு

> மாதவனுந் தன்சேயனுந் தங்களிலே மகிழ்ந்துரைத்த
> வோதரிய பொருளினை நீயுணர்ந்தவா ரென்னவெனில்
> வேதவியா சன்னுடைய மெய்யருளை மிகவுடையே
> னாதலா லறிந்தனன் வெற்றியெலாம் வகையுண்டோ

குறிப்புரை

ஒரே எண்ணுடைய இரு ஏடுகளாகப் பல ஏடுகள் காணப்படுகின்றன. சில ஏடுகளுக்கு எண்கள் இல்லை. நூல்

தொடக்கம் உள்ளது. முடிவு இல்லை. காப்பு, சோகவத்தி யாயம், சாங்கியோக அத்தியாயம், கர்மபிரம்மயோக அத்தியாயம், ஞானகர்ம யோக அத்தியாயம், சன்னியாச யோக அத்தியாயம், அப்பியாச யோக அத்தியாயம் ஆகிய ஆறு அத்தியாயங்கள் முறையாக உள்ளன. 7 ஆவது பரம அங்கச விஞ்ஞான யோகவத்தி யாயம், 8 ஆவது அத்தியாயம் ஆகியன முறைமாறிக் காணப்படுகின்றன. இராசவித்தியா இராசசூய யோக அத்தியாயம் என்னும் ஒன்பதாவது அத்தியாயம் தொடங்கி விபூதி விஸ்தார யோகவத்தியாயம், விஸ்வ சொரூப வத்தியாயம், பத்தியோகவத்தியாயம், பிரகிருதி புருடயோக வத்தியாயம் என்ற 13 ஆவது அத்தியாயங்கள் முடிய ஏடுகள் முறையாக உள்ளன. 14 ஆவது குணத்திரையவிபாக யோகவத்தியாயத்திலும் 15 ஆவது புருடோத்தமயோக அத்தியாயத்திலும் 16 ஆவது பரிசித்து பிரிதிவாதன மோட்சயோக வத்தியாயத்திலும், 17 ஆவது சிரத்தாத் திரையவிபாக யோகவத்தியாயத்திலும் ஏடுகள் முறைமாறி உள்ளன. நூலின் இடையிடையே நூலோடு தொடர்பில்லாத சில ஏடுகளும் உள்ளன. அவற்றுள் ஒரு ஏட்டில் 'சிதம்பரச் சக்கரம்' என்ற தலைப்புள்ளது. பாயிரம் முடிந்தபின் '1852 ஆவது வருடம் மார்ச்சு மாதம் ஏழாம் தேதி ஆதிவாரம்' என்ற குறிப்புள்ளது.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 600 113

அண்மை வெளியீடுகள்

| | | ரூ. பை. |
|---|---|---|
| சங்கத் தமிழர் வாழ்வியல் | .. | 75.00 |
| தமிழக மேடைநாடகப் பெண் கலைஞர்கள் -குறிப்பேடு | .. | 25.00 |
| A Grammar of Contemporary Literary Tamil | .. | 80.00 |
| Cilappatikaram | .. | 100.00 |
| காதம்பரி மூலமும் வசனமும் | .. | 125.00 |
| Tani Pacura Togai | .. | 30.00 |
| Dedication | .. | 25.00 |
| Temple Chimes | .. | 20.00 |
| Nala Venba | .. | 45.00 |
| Tamil Heroic Poems | .. | 40.00 |
| Six Long Poems from Sangam Tamil | .. | 30.00 |
| Kurinci-P-Pattu-Muttollayiram | .. | 40.00 |
| Kuruntokai | .. | 110.00 |
| Landscape and Poetry | .. | 50.00 |
| Tamil Culture and Civilization | .. | 60.00 |
| Tolkappiyam and Astadhyayi | .. | 110.00 |
| தமிழக மகளிர் தொடக்க காலமுதல் ஆறாம் நூற்றாண்டு வரை | .. | 50.00 |
| தமிழில் நவீன நாடகம் | .. | 70.00 |
| இலக்கியத்தில் சோதிடம் | .. | 65.00 |
| சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும் | .. | 80.00 |
| தொல்காப்பியம்-பொருள்-புறத்திணையியல் பகுதி - 1 | .. | 50.00 |
| தொல்காப்பியம்-பொருள்-புறத்திணையியல் பகுதி - 2 | .. | 65.00 |
| சோதிடவியல் | .. | 70.00 |
| மூலிகைக் கற்பங்கள் | .. | 80.00 |
| அமிர்த மதன கூத்து நாடகம் | .. | 90.00 |
| சித்த மருத்துவ மணிகள் | .. | 75.00 |
| கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் விளக்க அட்டவனை (முதல் தொகுதி) | .. | 85.00 |
| Tamil Scripts - Work Book | .. | 50.00 |
| Work Book Written Tamil | .. | 50.00 |
| விடுதலைக்கு முன் தமிழ் நாவல்களில் பெண்கள் | .. | 30.00 |
| திருக்கோயில்களில் தொழில் சமுதாய உறவுகள் | .. | 25.00 |
| தமிழ்க் காட்சி நெறியியல் | .. | 46.00 |
| இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள் | .. | 30.00 |
| ஒப்பிலக்கியம்:கொள்கைகளும் செயல்முறைகளும் | .. | 15.00 |
| கருணையம்மன் அந்தாதி | .. | 22.00 |